உ

தஞ்சை

# வைத்தியராஜ சிந்தாமணி

## இரண்டாம் பாகம்

தஞ்சைமாநகரம்

ஹிஸ். ஐநெஸ். இராஜஸ்ரீ. சத்ரபதி.

சரபோஜி மஹாராஜா சாஹேப் அவர்கள்

தன்வந்திரி மஹாலில்

சுவய அனுபவசித்தமாய்த்திரட்டி

மஹாராஷ்டிர பாஷையில் எழுதிவைக்கப்பட்டதை

மேற்படி மஹாராஜா அவர்கள் பௌத்திரராகிய

கல்யாண மஹால்

ஸ்ரீ யோகநாத ஆவாரேரா்வ் சாஹேப்

அவர்களால்

தமிழில் மொழிபெயர்க்கப் பெற்றது.

சென்னை:

B. R. இராஜரத்தினம் நாயகர்

வெளியிட்டது.

பதிப்புரிமை] 1953. [ரூ 4-0-0.

# முகவுரை



நண்பர்காள்!

இந் நூலின் முதற்பாகம் வெளியான உடனே அதைக் கையாண்டு பலப்பிராப்தி யடைந்த விவேகிகள் பலரும் அதுதொட்டு இதுகாறும் தாம் இந்நூலால் அடைந்த பேராநந்தப் பெரும் பயனை வாசக முகத்தானும், கடித முகத்தானும், பிரவாற்றானும் வெளிப்படுத்தி வருகின்றமையே இவ் விரண்டாம் பாகம் வெளிப் படுத்துதற்குக் காரணமென்க.

இஃது இத்துணைச் சிறப்பினதென்பது இதனது முதற்பாக முகவுரையிலேயே நன்கு விளங்குமாயினும் அம் முதற்பாகத்தை யெய்தப் பெறுதாரும். அதனது பயன் இன்ன இன்னவென்று எளிதில் உணருமாறு ஒருவாறு சுருக்கிக் கூறுகின்றேன்.

எல்லா வளங்களும் மல்கப்பெற்றுச் சிறப்புடைத்தாய வித்தமிழ்நாட்டிற்கு மதனிபோல் விளங்கும் தஞ்சைமா நகரத்தை யாண்ட அரசர்கள் பலருள்ளும் இராஜாதி ராஜ ராஜகெம்பீரராகிய சரபோஜி மஹாராஜா அவர்கள் பலசாகைப் பண்டிதா சிரோமணிகளுக்கும் அவ்வவர் யோக்கியதைக்கு ஏற்பச் சன்மானங்கள்செய்தும், வெகுமானங்க ளீந்தும், சர்வ மானியங்கள் விடுத்தும் வந்தார்கள். இதைச் செவியுற்ற எண்டிசாமுகத்தும் உள்ள பலசாகை வித்வமணிகளும் ஆண்டு ஒருங்கு திரண்டமை, அத் தஞ்சையாகிய மதணிக்கு விலையுயர்ந்த பலவண்ண மணிகளைத் தேடிப் பதித்தது போலாம். இன்னதோர் காரணத்தானே தஞ்சைமா நகரமானது சர்வ சாத்திரங்களிலும் பிரபலமுற்று உயர் வொப்பின்றி விளங்கியமை உலகறிந்த உண்மை.

மேற்சொன்ன மஹாராஜா அவர்கள், மனிதருக்கு இன்றியமையாது அதிமுக்கியமாய் வேண்டற்பாலன ஆத்மார்த்தம், தேகார்த்தம் ஆகிய இரண்டு விஷயங்களேயென்றும், இவற்றில் ஆத்மார்த்தத்தைப் பூர்த்தியா யடைவதற்கு உபாங்கமாக வேதாகம புராணாதி இதிகாச இலக்கண இலக்கியங்களில் வல்ல பண்டிதர்களைக் கொண்டு கல்விச்சாலை யொன்றும், தேகார்த்தத்தைப் பூர்த்தியாயடைவதற்கு உபாங்கமாக ஆயுள் வேதாதி இரசாயன சாத்திரங்களில் வல்ல பண்டிதர்களைக்கொண்டு, "தன்வந்திரி மால்" என்னும் ஆயுள் வேத வித்தியாசாலை யொன்றும் ஏற்படுத்தினார்கள். இவ்விரண்டையும் தமது இரண்டு நேத்திரங்கள்போலப் பாதுகாத்தது மல்லாமல், சமஸ்கிர்தம், மஹாராஷ்டிரம், தமிழ், தெலுங்கு, பார்ஸி, இந்துஸ்தானி, கன்னடம், இங்கிலீஷ் முதலிய பாஷாந்தர கிரந்தங்களைச் சேகரித்துச் சேமித்து வைத்த ஸ்தானத்திற்கு "சரஸ்வதி மால்" என்னும் பெயரிட்டு அப் புத்தகசாலையைத் தமது செங்கோல் போலக் கோடாது பாதுகாத்து வந்தனர்.

எல்லாவகைப் பண்டிதர்களைப் பார்க்கிலும் ஆயுள் வேத பண்டிதர்களை அவர் அதிகங் கவனித்தபடியால் அவர்கள் பலரென்பது திண்ணம். ஆயினும்,

இங்கு நமக்குக் கிடைத்தவர்களாவன:—

| | |
|---|---|
| புருஷோத்தமர் | அப்பு ராவ் |
| முத்துசாமி தீக்ஷிதர் | பாப்பு வைத்தியர் |
| ஐயாவையங்கார் | பொன்னம்பலம் |
| சீத்தாராமையர் | நாயகம் |
| ஐயாக்கண்ணுப் பிள்ளை | சேக்கு சாயபு |
| சிதம்பர வைத்தியர் | பாப்புராஜபுரம் |
| அண்ணுச்சாமி நாயக்கர் | அக்கீம் நத்தர் சாயபு |
| அம்பலவாணப் பிள்ளை | ஆகியவர்களாம். |

இவர்களுள் சிலர் தேக வைத்தியத்திலும், சிலர் கண் வைத்தியத்திலும், சிலர் இரண வைத்தியத்திலும், சிலர் விஷ வைத்தியத்திலும் முக்கியமாய் பேர்பெற்ற வர்கள். இவ்விதம் ஒவ்வொருவரும் ஒவ்வொரு வகையில் அதிக வல்லவர்களென யோக்கிதா பட்டம் பெற்றுச் சிறப்புற்றிருந்தனர். இவர்களொவ்வொருவரும் அவ்வவச் சமயங்களிற் செய்த வற்புதோன்னதமான சிகிச்சைகளையும், தந்திரோபாய சிகிச்சைகளையும் விநோதவகை யுசிதங்களையும், அவை சம்பவித்த சந்தர்ப்பங்களையும் விவரமா யெழுதினால், அதுவே யொரு பெருங் கிரந்தமாகுமெனப் பயந் திம்மட்டும் நிறுத்தப் பட்டது.

மேற்படி மகாராஜா அவர்கள் தம் அரண்மனை வைத்தியர்களின் சாமர்த்தியங்களையும், அவர்களா லுபயோகிக்கப்பட்ட அனுபவ சித்தியாகிய ஔஷதங்களின் மகிமையையும் சக்தியையும் கண்டு இவ்வருமையான ஔஷதங்களை யெல்லாம் அவரவர்கள் மூலமாகக் கைபாகமாகச் செய்வித்து மேற்படி தன்வந்திரி மாலை விர்த்திசெய்யப் பேரவாக்கொண்டு பெருந் தொகைப் பொருள் செலவிட்டுத் தமதிஷ்டப்படியே செய்து முடித்து வைத்துத் தமது இராஜகுடும்பத்திற்கும் தம் நகரவாசிகளுக்கும் பேருதவி புரிந்து வந்தனர். இது மாத்திரமோ, மேற்படி யனுபவ முறைகளையும் எழுதுவித்து ஒன்றாய்த் திரட்டி யொரு அட்டவணை ரூபமாகச் செய்து தம்முயிர்த் துணையைப்போலப் பராமரித்து வந்தனர்.

அவருக்குப்பின் அப்புத்தகமானது மேற்கண்ட சரஸ்வதி மஹாலில் வைக்கப்பட்டு ராஜகுமாரராகிய இராஜாதி ராஜ சிவாஜி மஹாராஜா அவர்களால் ஒருவாறு பாதுகாக்கப்பட்டு வந்ததெனினும் முன்னிருந்த மஹாராஜா அவர்களினால் கனப்படுத்தப்பட்டதுபோல

நடத்தப்படவில்லையெனச் சொல்லவிடமுண்டு. பின்பு இராஜாங்கத்தில் பல வேறுபாடுகளுண்டான படியா லும்,பலவித அசந்தர்ப்பங்களினுலும், தக்க விசாரணை யில்லாமல் சரஸ்வதிமாலிலுள்ள அருமையான அநேக கிரந்தங்கள் மக்கி மடிந்துபோயின. இக் கைம்முறை யடங்கிய புத்தகத்திற்கும் அக்கதியே சம்பவித்திருக்கு மென சொல்லவேதுவுண்டு. ஆனல் நம்முடைய அதிர்ஷ்டவசத்தினல் அப்படியாக வில்லையெனத் தைரியமாய்ச் சொல்லலாம். அஃதெவ்வா றெனில்,

மேற்படி மகாராஜாவின் பௌத்திரராகிய ம-ா-ா-ஸ்ரீ யோகநாத ஆவாரேராவ் சாஹேப் அவர்கள், எல்லாச் சீவராசிகளிலும் அதிசிரேஷ்டமானது மக்கட்பிறப்பு. ஏனைய சீவராசிகளைப் பார்க்கிலும் ஊகையாதிகளில் விசேஷித்து முன் வரப்போகின்றவற்றையும் பின் சம்பவிக்கு மவற்றையும் சீர்தூக்கி நிதானித்து இன்னதுசெய்யி னின்னது விளையுமென காரண முயற்சியால் யூகித்துச் செய்யத் தகுந்தனவற் றைச் செய்துஞ் செய்யத் தகாதனவற்றைச் செய் யாமல் விடுத்தும் வருகின்றமையால் மக்கட்பிறப்பே யதி சிரேஷ்டமானது. ஆனல் இம்மக்கள் துன் பின்றி ஜீவவந்தராய் நீடூழிவாழ்வதற்கும் பிறரையு மங்கனமே வாழ்விக்கவும் மூலகாரணமாயது ஆயுள் வேதமே யென மேற்படி சாஹேபவர்கள் நிச்சயித்து, மேற்படி தன்வந்திரி மாலில் வைக்கப்பட்டிருந்த மேற் படி யனுபவசித்தி முறைகளடங்கிய புத்தகமானது. அங்குள்ள மற்றப் புத்தகங்களுடன் சீரணதிசையடை யாமல் உலகமெங்கும் பரவி, நீடூழிகாலம் நிலைபெற்றுப் பூரண திசையடையவும், மேற்படி மகாராஜா அவர்கள் பிரதமத்தில் தமது ராஜகுடும்பத்திற்கும், தமது நகர வாசிகளுக்கும் பிரயோஜனப்படுத்திப் பின்பு பிறருக் கும் உபயோகமாகும்படி செய்யவேண்டு மென்னும் கருத்து நிறைவேருமல் குறைவாய்ப்போன தமது

பாட்டனார் நற்கருத்தைப் பூரணமாக்கவும், லோகோபகாரத்துடனும், ஜீவகாருண்ணியத்துடனும் தம் சொந்தக் கைப்பொருளிற் பெருந்தொகைப் பொருள் செலவிட்டு மேற்படி புத்தகத்தை மஹாராஷ்டிர பண்டிதர்களைக் கொண்டு தமிழில் மொழிபெயர்த்து அச்சிடுவித்தனர். இப் பெருந்தகைமை வாய்ந்த லோகோபகாரியாகிய இக் கண்ணியவானுக்கு உலகம் பிரதிசெய்வது யாதோவெனின், அக் கனவான் ஆயுள்விருத்தியும், புத்திர சந்தானமும் பெற்றுச் சுகஜீவியாய் வாழ்ந்திருக்கும்படி சர்வதயாபரக் கடவுளினது திருவருளைப் பிரார்த்திப்பதேயாம்.

இதனை யச்சிடும்போது இம்முறைகளில் கைபாகஞ் செய்பாக முதலியவைகளுள் ஆங்காங்கு குறிப்பாகவும், பரிபாஷையாகவும், குறைவாகவும் இருந்தனவற்றை யாவருமெளிதில் தெரிந்துகொள்ளும்படியாக, பரோபகாரச் சிந்தையுடன் முறையே விரித்தும், விளக்கியும், நிறைத்தும், எழுத்துப் பிழை முதலியவைகளையுந் திருத்தியும் பரிசோதித்தும் தந்தவர் யாரெனில், மேற்படி தஞ்சை யரண்மனை வைத்தியர், திருவிடை மருதூர் அரண்மனை வைத்தியர் இவர்கள் மரபிலுள்ளவரும், எங்கும் புகழ்பெற்றுச் சிறந்து விளங்கும் "யூநானிவைத்திய தாதுவிர்த்தி போதினி" "பிரமேக நிவாரண போதினி" முதலிய பலவகை யூநானி வைத்திய கிரந்தகர்த்தாவானவரு மாகிய அக்கீம்-பா. முகம்மது அப்துல்லா சாகிபு அவர்களேயாம்.

ஆகையால், இம் முறைகளை யுபயோகித்துப் பலப்பிராப்தி யடையும் ஒவ்வொருவரும் பொதுவாய் எல்லோரும் மேற்படி பாகங்களுக்கு மூலகர்த்தாவான பண்டித சிரோன்மணிகளுக்கும், மேற்கண்ட அக்கீம்-பா. முகம்மது அப்துல்லா சாகிப் அவர்களுக்கும் இருதய பூர்வமாய் நன்றியுள்ளவர்களா யிருப்பார்களென்பதைச் சந்தேகமின்றி யான் கூறமாட்டுவேன்.

இதிற் கண்டிருக்கிற ஒவ்வொரு பாகத்தின் தலைப் பிலும் அதற்கு மூலகாரணராகிய பண்டிதரின் நாமமு மெழுதப்பட்டிருக்கின்றமையால் அப் பண்டிதருக்குச் சிறப்பும், பெருமையும் நமக்குத் திருப்தியுமுண்டா மென்பதிற் சந்தேகமில்லை.

இக்கிரந்தத்திற் கண்டிருக்கிற ஒவ்வொருபாகமுஞ் சிறந்த தாகையால், அதனை சுத்திக்கிரம முதலியவை களை யனுசரித்துக் கைபாகம் செய்பாக முதலியவை பிசகாமற் செய்து முடித்து, வியாதியின் சாத்தியா சாத்திய குணங்குறிகளை நிதானித்து, தேக சுபாவங் களுக்குத் தக்க அனுபானங்களுடன் உபயோகித்து வியாதியை நிவர்த்தி செய்து சுகமாய் வாழ்வார் களென்பதென் கோரிக்கை.

மேலும், இதனைப் பார்வையிடும்போதுண்டான பல அசந்தர்ப்பங்களினாலும் மனித சுபாவத் தவறு தலினாலும் நேரிட்டிருக்கும் எழுத்துப் பிழை முத லியவற்றைத் திருத்தி வாசிக்கும்படி பிரார்த்திக் கின்றேன்.

கல்யாண மஹால்

தஞ்சை } டி. கோபால பிள்ளை.

# தஞ்சை

# வைத்தியராஜ சிந்தாமணி

## இரண்டாம் பாகம்

வெண்பா

கோபால பிள்ளை கொடுத்தெழுதிந் நூலதனை
நீபா லனஞ்செய்த னீதியதே—பூபால
ஞன சரபோஜி யாய்ந்தெடுத்த நூனெறியே
ஞானமரு ளோங்கரநா தா

### கணபதி, ரசாயனம்

வாக்குண்டாம் நல்ல மனமுண்டாம் மாமலராள்
நோக்குண்டாம் மேனி நுடங்காது—பூக்கொண்டு
துப்பார் திருமேனி தும்பிக்கை யான்பாதம்
தப்பாமற் சார்வார் தமக்கு.

(இதன் பொருள்)

பொற்றலைக்கையான்சமூலம், குப்பைமேனியிலை, * சிறுசெருப்படைசமூலம் இம்மூன்றையும் தனித்தனி நிழலிலுலரவைத்துத் தனித்தனி யிடித்து வஸ்திர காயஞ் செய்த சூரணம் வகையொன்றிற்குச் சம னெடை. இம்மூன்றின் எடைக்குச்சமன் நல்ல கெட்டித்தேன் சேர்த்து நன்ருய் மிஸ்ரமித்துக்கொள்ளவும்.

உட்கொள்ளும் விதம் :—ஒரு வேளைக்குக் கால் ரூபாயெடை முதல் ஒரு ரூபா யெடைவரையில் காலை மாலை யிரண்டு வேளையும் சாப்பிடவும். எக்காரியத்

* இதற்கு சிறுசெருபுள்ளடியென் று சொல்வாரு முளர்.

திற்கும் அதன் ஆரம்பத்தில் விக்கினேஸ்வரரை ஸ்துதித்துச் செய்வதினால் அக்காரியம் இடையூறின்றி நிறைவேறுவதுபோல மனம், வாக்கு, காயம், திருஷ்டி ஆகியவைகளுக்குக் கற்பமாகிய மேற்சொன்ன அவுடதத்தை விடாமல் உபயோகித்து வருவதினால் ஜீவனுக்காதாரமாகிய இரத்தசுத்தி யுண்டாகி தலைமூளை இருதய முதலிய இராஜகருவிகள் பலப்பட்டு, விற்பன சக்தி, ஞாபக சக்தி, புத்திகூர்மை முதலியவைகளுண்டாகி சரீரம் பலப்பட்டு அழகு காந்தி யுண்டாகி லட்சுமிகரமு முண்டாம் என்பதே!

## சண்முக, சஞ்சீவி மாத்திரை

சுத்திசெய்த லிங்கம், அதிமதுரம், கோஷ்டம், செண்பகப்பூ, இலவங்கப்பட்டை, ஏலம் வகை 1-க்கு விராகனெடை-3 இவற்றுள் பின் ஐந்து சரக்குகளையும் தனித்தனி யிடித்து வஸ்திரகாயம் செய்து தனித்தனி நிறுத்தெடுத்துக் கொள்ளவேண்டும். பின்பு கல்வத்தில் எல்லாவற்றையும் சேர்த்து, முலைப்பால் விட்டு 4-ஜாமம் அரைத்து மிளகுப் பிரமாணம் மாத்திரைகள் உருட்டி நிழலிலுலரவைத்துப் பத்திரப்படுத்தவும்.

உட்கொள்ளும் விதம்:—வேளை 1-க்கு மாத்திரை 1, 2 முலைப்பால், தேன், இஞ்சிரசம் முதலிய தக்க அனுபானங்களி லிழைத்துச் சாப்பிட பற்பல தோஷங்கள் தீரும்.

## புருஷோத்தம, தீர்த்த, பிரம்மதேவாங்குச ரசம்

பூநீர், சத்திசாரம், எவச்சாரம், பஞ்சலவணமாகிய இந்துப்பு. கறியுப்பு, கந்தவடியுப்பு, வளையலுப்பு, வெடியுப்பு நவச்சாரம், வெண்காரம், சுக்கு, மிளகு, அரிசித்திப்பிலி, கடுக்காய் தான்றிக்காய், நெல்லிமுள்ளி, ஊமத்தம்விதை, விரலிமஞ்சள், கடுகு, வெல்லம் ஆகச் சரக்கு 20-க்கும் வகையொன்றுக்கு விராகனெடை-1 இவை

களைத் தூள்செய்து கல்வத்திலிட்டு, 30-விராகனெடை இரசத்தை அதிற்போட்டுப் பன்னிரண்டு ஜாமம் அரைத்து அழுத்தமான துணியிற்போட்டுப் பிழிந்து இரசத்தையெடுத்துப் பின்பு வெள்ளைக்காக்கட்டா னிலைச்சாறு சேர்-1, சங்கங் குப்பியிலைச்சாறு சேர்-1, சிவப்புத் தொட்டாற்சுருங்கி யிலைச்சாறு சேர்-1 இம் மூன்று சாற்றையும் ஒன்றாகச் சேர்த்து ஒரு பீங் கான் பாத்திரத்தில் வார்த்து, மேற்படி பிழிந்தெடுத்த ரசத்தைவிட்டு நான்கு நாழிகை கையால் மத்தித்து ஒரு மண்சட்டியிற்போட்டு ஏழரை நாழிகை தீபம்போ லெரித்து முன்போல துணியிற்போட்டுப் பிழிந்து பிழிந்து ரசத்தைக் கல்வத்திலிட்டு கற்றாழைச்சாறு வேண்டியமட்டும் விட்டுப் பதினைந்துநாளரைக்கிறது. பின்பும் துணியிற்போட்டுப்பிழிந்து ரசத்தையெடுத் துக் கொடிவேலிவேர்க் கஷாயத்தில் டோளாந்தரமாகக் கட்டி ஏழுநாள் கமலாக்கினியாய் எரிக்கிறது. மறுபடி யும் ரசத்தை பிழிந்தெடுத்து மேற்படி வேர்க்கஷாயத் தில் 21-நாள் அரைத்துப் பிழிந்தெடுத்த ரசத்தை வடக்கேபோகிற செவ்வளரிவேர்ச் சாற்றால் 21-நாளை ரைத்து ரசத்தை எடுத்துவைத்துக்கொண்டு நான்கு ஜாதிக்காயை வெட்டிப்போட்டு நாலு சேர் ஜலம்விட்டு அரைச்சேராகக் குறுகக்காய்ச்சிய கஷாயத்தில் மேற் படி ரசத்தை அரைக்கிறது. இப்படி மூன்றுதடவை கஷாயம்வைத்து மூன்றுதடவை யரைத்துப் பிழிந் தெடுத்த ரசத்தைச் செங்கழுநீர்ப்பூச் சாற்றில் ஒரு நாள் அரைத்து ரசத்தைப் பிழிந்தெடுக்க ரசத்தின் தோஷம் நீங்கிச் சுத்த ஜெயரசமாம். நெல்லிக்காய் கெந்தகம் பலம்-5 இதை இரும்புக் கரண்டியிற் போட் டுப் பசுவின் நெய் கொஞ்சம்விட்டு உருக்கிப் பசுவின் பாலிற் சாய்க்கிறது. மேற்படி கெந்தியை மேற்கண்ட படி ஏழுதடவை யுருக்கி வெவ்வேறுபாலில் ஏழுதரஞ் சாய்க்கிறது. கருப்பஞ்சாற்றிலும் இம்முறையே ஏழு தரம் உருக்கிச் சாய்க்கிறது. இப்படிச் சுத்தியான

கெந்தகம் பலம்-1, மேற்படி ஜெயரசம் பலம்-4 இவ்விரண்டையும் கல்வத்திலிட்டு ஒருவிராகனெடை ஏரண்ட நெய்விட்டு நாலுஜாமமரைத்து வில்லைசெய்து பட்டுத்துணி சுற்றி பட்டுநூலாற் கட்டி சித்திரமூல வேர்ப்பட்டைத்தூள் அகலில் வைத்து அதன்மேல் மேற்படி வில்லையை வைத்து மேற்படி வேர்த்தூளை மேலும் வைத்து மேலே அகல்மூடிச் சீலைமண்செய்து காயவைத்து ஒரு ஜாண் ஆழமாகக் குழிவெட்டி அதில் ஓரங்குலம் ஆற்றுமணல் பரப்பி நடுவில் மேற்படி அகலைவைத்து மேலே ஓரங்குல மணல்போட்டு ஐந்து எருவடுக்கிப் புடம்போடவும். இவ்விதம் ஐந்துதடவை போட்டெடுக்க கருஞ்சிவப்புவர்ணச் சிந்தூரமாகும். இதைத் தகுதியான கற்சீசாவில் அடைத்து வைத்துக் கொள்ளுக்கிறது.

இம்மருந்து கொடுக்கும் விதம்:—பலவீனமான தேகத்திற்குப் பணவெடை சிந்தூரம் தேனிலாவது நெய்யிலாவது நாலுவேளை அல்லது ஆறுவேளை கொடுக்கலாம். வேறே அனுபானம்; கொம்புத்தேன் பங்கு-1, பசுவின்நெய் பங்கு-2, சீனிச்சர்க்கரை பங்கு-3, இவைகளை ஒன்ருய்ச் சேர்த்து மேற்படி சிந்தூரத்தை வைத்துச் சாப்பிடுகிறது.

பத்தியம்:—பாலன்னத்திற் சர்க்கரை சேர்த்துச் சாப்பிடுகிறது. கடுகு, நல்லெண்ணெய், மிளகாய், இவற்றை நீக்கவும். அரையுப்பு அரைப்புளிப்பு சேர்த்துப் பகலில் உண்ணலாம். இரவில் பால் சர்க்கரை சேர்த்துச் சாப்பிட்டா லொழியக் குணமிராது. இவ்விதம் பதினுன்கு நாள் காலையு மாலையும் சாப்பிட்டால் தீபனவிர்த்தி, தாதுபுஷ்டி, இரத்த விர்த்தி யுண்டாகும். இதற்குத் திருஷ்டாந்தம், இருபது வருஷம் தாதுவிர்த்தி யில்லாமலிருந்து இந்த மருந்தைச் சாப்பிட்டு பின்பு சந்ததி யுண்டாகியிருக்கிறது. இப்படி

அனுபவத்திற்கு வந்திருப்பதால் இங்ஙனம் கூறலாயிற்று.

இம் மருந்தினல் வாய்வெந்தால் அதற்கு மாற்று:— விடசியிலையைக் கொதிக்கவைத்து அக்கஷாயத்தைக் கொப்புளித்தால் மருந்தின் குணமாருமல் வாய்வேக்காடு தீரும். ரசம் அல்லது ரசகர்ப்பூரம் சாப்பிட்டு வாய்வெந்தாலும் இப்படியே செய்க.

## கோமூத்திர சிலாசத்து பற்பம்

விதைநீக்கிய கடுக்காய், தான்றிக்காய்த்தோல், நெல்லி முள்ளி வகையொன்றுக்கு விராகனெடை-10 இந்த 30-விராகனெடையையும் நாலுசேர் சுத்தஜலத்திற் போட்டு எட்டொன்ருய்க் காய்ச்சி 20-விராகனெடை சிலாசத்தைக் கல்வத்திலிட்டு மேற்படி கஷாயத்தைவிட்டு ஒருஜாமம் அரைத்து வில்லைசெய்து காயவைத்து ஓட்டிலிட்டுச் சீலைமண் செய்து காயவைத்து வராகப்புடம் போடப் பற்பமாகும். இந்தப் பற்பத்துக்குத் தீரும் வியாதிகள்:—மேகம் இருபத்தொன்றும், மூத்திரக்கிரிச்சரம், நீரிழிவு, ஹஸ்மரிரோகம், ஜீரணசுரம் இவைகள் நீங்கும்.

அனுபானம்:—நெருஞ்சிமுள் கஷாயத்தில் பணவெடை பற்பம்கொள்ளில் சகல மேகநிவர்த்தி; விஷ்ணுகிரந்திக் கஷாயத்தில்கொள்ளில் ஜீரணசுரம் நிவிர்த்தி; பசுவின்நெய்யில் கெர்ப்பிணிக்குக் கொடுத்தால் கெர்ப்பம் விர்த்தியாகும்; கெர்ப்பத்திலுள்ள வியாதிநீங்கிச் சுகப்பிரசவமாகும். அரிசித்திப்பிலியை வறுத்துச் சூரணித்து தேன்சேர்த்து லேகியம்போற் செய்து வைத்துக்கொண்டு பாக்களவு லேகியத்தில் பணவெடை பற்பம் வைத்துண்ண க்ஷயம், சுவாசம், இருமல் நீங்கும். நெய்யில் கொள்ளில் இளைத்தசரீரம் புஷ்டியாகும். இந்தச் சிலாசத்துபற்பம் இரண்டுபங்கு, ஜாதிலிங்கச்சிந்தூரம் ஒருபங்கு, அப்பிரேகச் சிந்தூரம் ஒருபங்கு, இம்

மூன்றும் ஒன்ருய்ச் சேர்த்து வேளை யொன்றுக்கு இரண்டு குன்றிமணியெடை யெடுத்து ஐந்து மிளகு தூளில் தேன்சேர்த்து மத்தித்து அதிற் கலந்துகொள் ளில் மகா க்ஷயரோகங்கள் சொஸ்தமாகும்; தேனில் மத்தித்துக் கொள்ள மேகம், வெட்டைச்சூலை, சொறி சிரங்கு இவைகள் நீங்கும்; அனுபோகம்.

## கிருஷ்ணுப்பிரேக சிந்தூரம்

கிருஷ்ணுப்பிரேகம் தேவையானதை எடுத்துக் கொண்டு கொள்ளுவேகவைத்த தண்ணீரை இறுத்து வேறே ஒரு பாத்திரத்தில் ஊற்றிவைத்துக்கொண்டு மேற்படி அப்பிரேகத்தைத் உலையில்வைத்து துருத்தி யால் ஊதிச் சிவந்தபின் மேற்படி கொள்ளுத் தண்ணீ ரில் நனைத்து மறுபடி கல்லுரலிற்போட்டு கட்டப் பாரையா லிடித்துத் தூள்செய்து அழுத்தமான நான்குமுழத்துணிச் சவுக்கத்தை தொட்டில்போல் இரண்டு முந்தாணியுங்கட்டி அதற்குள் அப்பிரேகத் தூளும் அதிற்பாதி சம்பாநெல்லும் போட்டு அடியி லொரு பாத்திரத்தை வைத்து சிறுகச் சிறுகச் சுத்த ஜலம் விட்டுக் கையால் பிசைந்துகொண்டிருக்க, அடிப் பாத்திரத்தில் சன்னமாக அப்பிரேகம் இறங்கும். அவ் விதம் அடியிலிருக்கிற நவநீதத்தை ஜலமிறுத்துக் காயவைத்து எடுத்துக் கல்வத்திலிட்டு சிறு அம்மான் பச்சரிசி வெள்ளையேனும் சிவப்பேனும் இடித்துத் தனிச்சாறெடுத்து இந்தச்சாறுவிட்டு எட்டுச்சாமம் கையோமல் அரைத்து வில்லைதட்டிக் காயவைத்து வில்லையை ஒட்டிலிட்டுச் சீலைமண்செய்து காய்ந்தபின் பூமியில் பள்ளம்வெட்டி கெஜபுடம்போடவும். இவ்விதம் மேற்படி சாற்ருல் ஐந்துபுடமும் பின்பு வெங்காயச் சாற்ருலரைத்து மூன்றுபுடமும் போட்டால் வெளுப் பும் சிவப்புமான சிந்தூரமாகும். மாதுளம்பழச் சாற்ரு லரைத்து மேற்சொல்லியபடி ஏழுபுடம் போடலாம். இச்சிந்தூரத்தை எல்லா மருந்துகளோடும் சேர்த்து

எல்லா ரோகங்களுக்கும் கொடுக்கலாம். தேன் ஒரு பங்கு, நெய் இரண்டுபங்கு சர்க்கரை மூன்று பங்காகச் சேர்த்துத் தனியாக ஒரு விராகனெடை சிந்தூரத்தை மத்தித்து வேளையொன்றுக்கு இரண்டு குன்றிமணி யளவு காலைமாலை சாப்பிட்டால் சகல ரோகங்களும் நிவர்த்தியாகும். இச்சாபத்தியம்.

புருஷோத்தம,

## வெள்ளைத்தாளக பஸ்பம்

எருக்கிலைச் சாற்றை ஒரு கலையத்தில் நிறைய விட்டு அதில் நான்குதுலா தாளகத்தைப் போட்டு வில்லைமூடிச் சீலைமண்செய்து ஒரு கெஜ ஆழக்குழியில் காட்டெருவு அரைவாசிபோட்டு நடுவில் மேற்படி கலை யத்தை வைத்து மேற்பாதியிலும் எருமுட்டையையும் போட்டுத் தீயிட்டுப் புடம்போட்டு மூன்றும்நாள் ஆறின பின் எடுத்துப் பார்த்தால் துல்லியமான பஸ்பமா யிருக்கும் அரைவிராகனெடை சீரகத்தைத் தூள் செய்து தேனிற் குழைத்து மேற்படி பஸ்பத்தில் அரைக்குன்றிமணியெடை மத்தித்து இரண்டு வேளை யும் உண்க. பத்தியம்: சுரக்காரருக்குச் சொல்லும்படி யான பத்தியம் எதுவோ அதுவேயாம்.

சீதசுரம், சாதுர்த்திகசுரம் முதலிய சகல சுரமுந் தீரும். மேற்படி சீரகத்துடன் ஒரு அரிசித்திப்பிலியை வறுத்துத் தூள்செய்து அதனோடு சேர்த்துச் சாப்பிட் டால் சகல க்ஷயரோகங்களும் தீரும். சமயோசிதமான பத்தியம். அனுபவ மருந்து.

புருஷோத்தம,

## மகாவில்வாதி லேகியம்

மேற்றோல் நீக்கிய வில்வவேர் பலம்-8, பாதிரி வேர், தூதுவளைவேர், குட்டிவிளாவேர், மேற்றோல் நீக் கிய வேப்பம் ஈர்க்கு இவை வகைக்குப் பலம் நான்கு. நருக்கி வறுத்து இந்த ஐந்தையும் பொடியாக்கி ஒரு

பானையிலிட்டு 20-சேர் ஜலம்விட்டு இரண்டுநாள் ஊற வைத்து சிறுதீயாக எரித்து நாலுசேராகச் சுண்டினவுடன் இறக்கிக்கொண்டு, சுண்ணும்பு நீக்கிய இஞ்சிரசம் சேர்-1¼, துரிஞ்சிப்பழச்சுளைரசம் சேர்-¾ மாதுளம் பழரசம் சேர் காலே அரைக்கால் சீனிச்சர்க்கரை சேர்-2½ இவைகளைக் கஷாயத்தில் சேர்த்துக் காய்ச்சி லேகியமாகிற பதத்தில் சேர்க்கும் மருந்துகள்: சுக்கு, திப்பிலி, மிளகு, யானைத்திப்பிலி, கண்டத்திப்பிலி, செவியம், சித்திரமூலம், கடுக்காய்த்தோல், தான்றிக்காய்த்தோல், நெல்லிமுள்ளி, சன்னலவங்கப்பட்டை, லவங்கப்பத்திரி, ஏலம், சிறுநாகப்பூ, சீரகம், கொத்துமல்லிவிதை, தாளிசப்பத்திரி, சடாமாஞ்சில், பேய்ப்புடல்கோரைக்கிழங்கு, அதிமதுரம், கோஷ்டம், கிராம்பு, நெற்பொரி, பருத்திக்கொட்டைப் பருப்பு இவ்விருபத்தைந்து சரக்கும் வகையொன்றுக்கு விராகனெடை-4 வறுத்துப் பொடி செய்துகொண்டு முன்னே 2½-பலம் பசுவின் நெய்யை மேற்படி லேகியத்தில் விட்டுப் பின்னிந்தப் பொடிகளைப் போட்டுக் கிண்டி, பக்குவமான பின்னிறக்கி ஆறினபதத்தில், வடிக்கட்டின 1¼-பலம் தேனைவிட்டுப் பிசைந்து நல்ல பாத்திரத்திற் போட்டு மூடி பத்து நாள் தானியபுடத்தில் வைத்து அதற்கு மேல் எடுத்துக் கொட்டைப்பாக்குப் பிரமாணம் காலை மாலை உட்கொள்ளவும். இச்சாபத்தியம்.

தீரும் வியாதிகள்:—சகல பித்தங்கள், வாந்தி, கயம், அக்கினி மந்தம், அரோசிகம் முதலியவைகள் போகும்; இரத்த உற்பத்தியாகும்.

புருஷோத்தம,

## இலைகு வில்வாதி லேகியம்

பட்டைநீக்கிய வில்வவேர் இழைத்த தூள் பலம்-10 ஒரு பானையில் போட்டு 20-சேர் ஜலம்விட்டு இரண்டு நாள் ஊறவைத்து எரித்து 2½-சேர் கஷாயமாக இறக்கி, சுண்ணும்பு நீக்கிய இஞ்சிரசம் சேர்-1, சீனிச்

சர்க்கரை சேர்-2 கூடச் சேர்த்துக் காய்ச்சவும் லேகிய பதத்தில் சேர்க்கும் மருந்துகள்: சுக்கு, திப்பிலி, மிளகு, கடுக்காய்த்தோல், தான்றிக்காய்த்தோல், நெல்லி முள்ளி, லவங்கப்பட்டை, லவங்கப்பத்திரி, ஏலம், தாளி சப்பத்திரி, ஜடாமாஞ்சில், கிராம்பு, கோஷ்டம், அதி மதுரம், சீரகம், ஓமம், வாய்விளங்கம், கோரைக்கிழங்கு, கொத்துமல்லிவிதை, கொடிமுந்திரிப்பழம், பேரீச்சங் காய் இவ்விருபத்தொரு வகையும் வகையொன் றுக்கு விராகனெடை-4 ஆகப் பொடிபண்ணி மேற் படி லேகியத்தில் போட்டுப் பதமாகக் காய்ச்சி இறக்கி ஆறினபின், வடிக்கட்டின கால் சேர் தேனை விட்டுப் பிசைந்து நல்ல பாத்திரத்திற்போட்டு மூடி பத்து நாள் தானியபுடத்தில் வைக்கவும் அதற்கு மேல் எடுத்துக் காலை மாலை இரண்டு வேளையும் கொட் டைப்பாக்குப் பிரமாணம் உட்கொள்ளவும். இதனால் அக்கினிமந்தம், அரோசிகம், இருமல், அஸ்திசுரம், பித்தவாதம், பேதி, பித்தச்சூலை, இவைகள் நிவர்த்தி யாகும். பத்தியம் வாய்வு பதார்த்தம் தள்ளவும்.

### புருஷோத்தம,
## மகா சந்தனாதித் தைலம்

மலாக்கா சந்தனக்கட்டை சேர்-2 மெல்லீசாக இழைத்துப் பானையிற்போட்டு 32 சேர் ஜலம் விட்டு மூன்று நாள் ஊறவைத்துக் கமலாக்கினிபோலெரித்து நாலு-சேர் கஷாயமாக இறக்கி வடிகட்டி வீட்டு நல் லெண்ணெய் பத்து சேர் உடனே சேர்த்து மூடிக் கட்டிவைக்கிறது. மேற்படி சந்தனச் சக்கையில் மறு படியும் 20-சேர் ஜலம்விட்டு ஒரு சேராகச் சுண்டக் காய்ச்சி வடிகட்டி முன் எண்ணெயில் விடவும். விலா மிச்சம்வேர், நன்னாரிவேர், கோரைக்கிழங்கு, அதி மதுரம், ஏலம், இலந்தைமரத்துப்பட்டை, தண்ணீர் விட்டான்கிழங்கு, கிருஷ்ணாஅகர் இவ் வெட்டு வகைச் சரக்கையும் வகைக்குப் பலம்-2 நன்றாயிடித்து வேறு

பானையிற் போட்டு 32-சேர் ஜலம் விட்டு ஒருநாள் ஊறவைத்து இரண்டாம் நாள் எரித்து நான்கு சேர் கஷாயமாக எடுத்து வடிக்கட்டி மேற்படி எண்ணெயில் விடவும். சன்னலவங்கப்பட்டை, பெருலவங்கப்பட்டை, லவங்கப்பத்திரி, கிராம்பு, பூஞ்சாந்துப்பட்டை, கிளியூரம்பட்டை, தாளிசப்பத்திரி, சரளதேவதாரம், சிற்றரத்தை, மஞ்சிஷ்டி, அஸ்வகந்தி, மரமஞ்சள், விலாமிச்சம்வேர், ஜாதிக்காய், நன்னாரிவேர், அகர் இவை வகையொன்றுக்கு விராகனெடை-2, ஏலம், சடாமாஞ்சி, கோஷ்டம், அதிமதுரம், சண்பகமொட்டு, கஸ்தூரிமஞ்சள், சதகுப்பை, வகையொன்றுக்கு விராகனெடை-3, சோம்பு, கெவுளா, குண்டோசனைக் கிழங்கு வகையொன்றுக்கு விராகனெடை-4, கச்சோலம், கோரைக்கிழங்கு, வெட்டிவேர் வகையொன்றுக்கு விராகனெடை 5, மகிழம்பூ விராகனெடை-6, மருவு விராகனெடை-8, கற்பாசி விராகனெடை-10 இவைகளையெல்லாம் பால் விட்டரைத்து அந்த எண்ணெயில் குழப்பி பசுவின்பால் 8-சேர் கூடவிட்டு உஷ்ணகாலமானல் ததிமஸ்து 4-சேர் விடவேண்டும்; சீதள காலமானல் பால் மட்டும் விட்டு தைலபாகமாய்க் காய்ச்சி வடிக்கட்டி ஒரு பாத்திரத்தில் வைத்து ஒருநாள் தெளியவைத்து தெளிந்தபின் பச்சைக்கற்பூரம், கோரோசனை, குங்குமப்பூ வகைக்கு விராகனெடை-1, புனுகு விராகனெடை-½, ஜவ்வாது விராகனெடை-¼, குலாப்அத்தர் விராகனெடை-½ தைலத்திற் சேர்த்து, செந்தாமரையின் ஒரு பூவின்மடலை யெடுத்துத் தைலத்திற்போட்டுப் பீங்கான் சாடியில் மேற்படி தைலத்தை விட்டு வாய்க்குத் துணிகட்டி துணியின்மேல் மல்லிகை முல்லை, சாதிப்பூ, சண்பகப்பூ, மருவு, கொழுந்து, மகிழம்பூ, மருதோன்றிப்பூ, குலாப்பூ, வெட்டிவேர் முதலிய வாசனையுள்ள பூவுகள் அகப்பட்டவரையில் மேற்படி துணிமேல் வைத்து மேலேமூடி இரண்டு மூன்று நாள் அல்லது அதிக நாள் வாசனை கூட்டவும்.

இந்தத் தைலம் இராஜாக்களுக்கு யோக்கியமானது இதை ஸ்நானம் பண்ணினால் அவர்களுக்குள்ள வியாதிகளெல்லாம் பரிதியைக்கண்ட பனிபோற் பறக்கும்.

புருஷோத்தம,

## இலகு சந்தனாதித் தைலம்

ஒன்றரைசேர் சந்தனக் கட்டையைக் கடைசல் பிடித்து அந்தத் தூளை ஒரு பானையிற்போட்டு 50-சேர் ஜலம்விட்டு 4-நாள் ஊறவைத்து 6-சேர் கஷாயமாகக் காய்ச்சி வடிக்கட்டி ஒரு பாண்டத்தில் வார்த்து வைக்கிறது. அரைச்சேர் விலாமிச்சம்வேரை யிடித்து வேறு ஒரு பாண்டத்திற் போட்டு 12-சேர் ஜலம்விட்டு 2-சேர் ஜலமாகக் காய்ச்சி வடிகட்டி மேற்படி கஷாயத்தோடு சேர்த்து அதில் 8-சேர் நல்லெண்ணெய் விட்டு மகா சந்தனாதித் தைலத்திற்குச் சொல்லியிருக்கிற கற்க வகைகளை யிதிற் சேர்த்துத் தைலமாகக் காய்ச்சி யிறக்கி வடிகட்டி பெரிய பீங்கானில் விட்டு வேடுகட்டி மகா சந்தனாதிக்குச் சொல்லியபடி வாசனை கூட்டிக் கொள்ளுகிறது. சீதளகாலமானால் 8-சேர் பாலும் உஷ்ணகாலமானால் ததிமஸ்து என்னும் தயிர்த்தண்ணீர் 4-சேரும் சேர்த்துத் தைலம் வடித்துக்கொள்ளவும்.

குணம்:—மகா சந்தனாதித் தைலத்தின்குணமே ஆயினும் கொஞ்சம் குளிர்ச்சி அதிகமுள்ளது.

புருஷோத்தம,

## மூலவியாதி நெய்

ஜாதிப்பூச்செடியில் ஒரு பிடி இலையைப் பறித்து நசுக்கிச் சாறெடுத்து ஒரு பலம் பசுவின் நெய்யில் கலந்து பதமாகக் காய்ச்சி மூலமுளையில் தடவினால் சொஸ்தமாகும்.

ஐயாக்கண்ணுப் பிள்ளை,

## மேக ஊறல் எண்ணெய்

வெண்மையான மாவுள்ள பறங்கிப்பட்டை சேர்-2½ உரலிலிடித்து ஒரு பானையிற்போட்டு 32-சேர் தண்ணீர்விட்டு 8-சேர் கஷாயமாகக் காய்ச்சி யிறக்கி 4-சேர் சிற்ருமணக்கெண்ணெயை மேற்படி கஷாயத்தோடு சேர்த்து எலுமிச்சம்பழச்சாறு, வெங்காயச்சாறு, தேங்காய்ப்பால் இவை வகையொன்றுக்கு இரண்டுசேர் மேற்படி எண்ணெயோடு கலந்து காசா ஏலம் பலம்-1, வெட்பாலையரிசி பலம்-1, பூவந்திமரத்துப்பட்டை பலம்-2 இவைகளை நெகிழ அரைத்து மேற்படி எண்ணெயிற் கலந்து முதல்நாள் குழம்புப் பக்குவமாகக் காய்ச்சி இரண்டாம் நாள் மெழுகுபதமாகக் காய்ச்சி இறக்கவும்.

சாப்பிடுகிற விதம்:—நாளொன்றுக்குக் காலையில் கால் சேர் எண்ணெய் சாப்பிடுகிறது; சௌரியமாய்ப் பேதியாகும். இப்படி 5-நாள் சாப்பிட வேண்டும். இந்த 5 நாளைக்கும் உப்பில்லாப் பத்தியம். இரண்டாவது 5-நாளைக்கும் மேற்சொல்லியபடி சாப்பிட வேண்டும். இந்த 5 நாளைக்கும் இச்சாபத்தியம். மற்ற நாட்களிலும் காலையில் அரைக்கரண்டி வீதம் சாப்பிட்டும் வரலாம்.

தீரும் வியாதிகள்:—ஊறல், கடி, மேக வூறல்கள் இன்னும் அநேக ரோகங்களும் சொஸ்தமாகும். இது அநுபோகமாகப் பார்த்தது. சுத்திசெய்த ரசகற்பூரம் அரைப்பணவெடை மேற்படி எண்ணெயில் உரைத்துக் கலக்கலாம்.

## நாயகம்

ரசம் சாப்பிட்டு வாய் வெந்தால் அதற்கு ரோஜாப்பூ இதழ்களை வெந்நீரிற்போட்டு வேகவைத்து அந்தச் சலத்தில் கொஞ்சம் தேன் சேர்த்து வாய் கொப்பளித்தால் வேக்காடு தீரும்.

ஐயாக்கண்ணுப் பிள்ளை,

## சம்சக்கர சூரணம்

அதிமதுரம், சீரகம், சோம்பு, கருவேப்பிலையீர்க்கு, விதை நீக்கின நெல்லிமுள்ளி, காசாஏலம், சடாமாஞ்சில், வெங்கம்பூர் சந்தனத்தூள், சிறுநாவற்பூ, சன்ன லவங்கப்பட்டை, பெருலவங்கப்பட்டை இவை வகையொன்றுக்கு விராகனெடை-2, கொத்துமல்லிவிதை விராகனெடை-22 இம் மருந்துகளிற் கல்லில்லாமற் பொருக்கி வெயிலிற் காயவைத்து இடித்து வஸ்திரத்தில் வடிக்கட்டி வைத்துக்கொண்டு 44-விராகனெடை கற்கண்டைத் தூள்செய்து மருந்திற் கலந்து புதுக்கலையத்திற் போட்டு வைத்துக்கொண்டு காலையிலும் மாலையிலும் வேளை யொன்றுக்கு 3-விராகனெடை வீதம் சாப்பிடுகிறது.

தீரும் வியாதிகள்:—நீரெரிச்சல், நீர்க்குத்தல், கண்ணெரிச்சல், பித்தவெட்டையா லுண்டாகிற கைகாலெரிச்சல், காலை வேளையில் வயிற்றிலுண்டாகிற எரிச்சல், பித்தரோகம், அரோசிகம், உஷ்ணரோகம், விக்கல், வாந்தி, வரட்சி, சொரி, பித்தரோகத்தால் தேகம் இளைத்தல் மேகசுரம் முதலியவைகளெல்லாம் சொஸ்தமாகும். இச் சூரணம் ஒரு மண்டலம் சாப்பிட வேண்டும்; மேலும் சௌக்கியா சௌக்கியம் பார்த்துச் சாப்பிடலாம்; இச்சாப் பத்தியம். இச் சூரணம் ஒருமண்டலம் சாப்பிடுவதற்கு மூன்றுதடவை செய்துகொள்ள வேண்டியது.

குறிப்பு:—காந்தசிந்தூரம், அயக்காந்த சிந்தூரம், அம்சமண்டூரம், வங்கபஸ்பம், நாகபஸ்பம், இவைகள் சாப்பிடும்போது இந்தச் சூரணத்தில் ஒரு நெல்லிக்காயளவு சேர்த்துச் சாப்பிட்டால் உத்தமமான அனுபானமாகும்.

சிதம்பர வைத்தியர்,

## காளகண்ட மேக நாராயண சிந்தூரம்

இது செய்யும்போது முன்னர் விக்கினேஸ்வரர் பூசை செய்து பின்னர் தங்கள் தங்கள் உபாசனைக் கடவுளைத் தியானஞ் செய்து ஆரம்பிக்கவேண்டியது. முதலில் திராவகஞ் செய்கிற விதம். நாலாங் காய்ச்சல் வெடியுப்பு சேர்-2, படிக்காரம் சேர்-2½, குதிரைப்பற் பாஷாணம் விராகனெடை முப்பத்தொன்பதரையே அரைக்கால் இம்மூன்று சரக்குகளையும் தூள் செய்து சிறுபானையிற்போட்டு மேலே திராவக யந்திரத்தைக் கவிழ்த்துச் சீலைமண்செய்து புகை வெளியில் வராத படி பத்திரப்படுத்தி அந்த வாலைக்குமேல் குளிர்ந்த ஜலம் விட்டு குழாய்வாயில் பீங்கானைவைத்து அடுப் பேற்றி வடவாக்கினியாக எரிக்கவும், மேலே சூடேறா மல் குளிர்ந்த ஜலம் விட்டுக்கொண்டே யிருக்கவேண்டி யது. முதலில் நீர்போலிறங்குவதைப் பிடிக்காமல் நீக் கிப் பின்பு மஞ்சள் நிறமாக இறங்குகிற திராவகத் தைப் பீங்கானில் பிடித்துக் கொள்ளவும். பீங்கா னுக்கு வாலை குறைவாக இருந்தால் பீங்கானுக்குச் சரி யான ஓலை வைத்துக்கொள்ளலாம். திராவக தீக்ஷ ணம் இரும்பை உருகப்பண்ணும். காரம் குறைவானல் சங்கைக் கரைக்கும். அதனுற்றான் இதற்குச் சங்கத் திராவகமென்று பெயர். மேற்படி மருந்து போட்டி ருக்கும் பானையில் வெடிப்பு சத்தங் காணுகிறவரைக் கும் திராவகம் இறக்கவேண்டியது. சிந்தூரம் செய்வ தற்கு லிங்கரசம் எடுக்கிற விதம். உலாந்தாலிங்கம் விராகனெடை-47, சிவந்த சித்திரமூலம் ஒரு பிடி யெடுத்துப் பாதியைப் பொடித்து ஒரு குண்டுசட்டிக் குள் போட்டு மேற்படி லிங்கத்தைப் பொடித்து அதில் வைத்து மற்றப் பாதியையும் பொடித்து மேலே போட்டு மேலே சட்டிமூடி இரண்டு வாயுஞ் சேர்த்துச் சந்தில்லாமல் சீலைமண்செய்து செண்டு அடுப்பில்

வைத்து வடவாக்கினியாய் மூன்று ஜாமம் எரித்து இறக்கிப் பார்த்தால் சாம்பல்போல் கட்டியிருக்கும். அதைச் சுரண்டி வடிக்கட்டி ரசத்தையெடுத்து நிறுத்திப் பார்த்தால் விராகனெடை-30 இருக்கும்; குறைந்தால் இன்னொருமுறை மேற்சொன்னபடி மறுபடியும் செய்து 30-விராகனெடை ரசமும் சரியாக்கிக்கொண்டு லிங்கம் விராகனெடை-15, நெல்லிக்காய் கெந்தகம் விராகனெடை-12, பொன்னரிதாரம் விராகனெடை-1, மனோசிலை விராகனெடை-4, மேற்சொல்லிய முப்பது விராகனெடை ரசத்தோடு மற்ற 4-சரக்குகளையும் கல்வத்திலிட்டுத் தூள்செய்து மேற்படி திராவகத்தை விட்டு 3 நாள் அரைக்கிறது. அப்படி அரைக்கும் பொழுது சிவப்பு நிறம் போய் வெள்ளையில் கொஞ்சம் கருமை நிறமாகக் காண்பிக்கும். அப்படியானபிறகு அந்தத் தூளை 7-சீலைமண் செய்த காசிக்குப்பிக்குள் போட்டு சிந்தூரம் எரிக்கும் வளைய அடுப்புப்போட்டு அந்த அடுப்பில் ஒருமுழ அகலமும் ஒரு ஜாண் ஆழமுமுள்ள சட்டியை வைத்து அடுப்பில் இடுக்குத் தெரியாமலிருக்கச் செய்து மேற்படி சட்டிக்குள் 1-படி மணல்போட்டு குப்பியை வைத்து மேல்குப்பியளவுக்குச் சரியாய் மணல்போட்டு இரண்டு விரற்கடை குப்பி கழுத்துமாத்திரம் தெரியவேண்டியது. குப்பி வாயளவுக்கு ஒரு ஓட்டுச்சல்லியால் சும்மாமூடி 7-ஜாமம் எரிக்கவேண்டியது. இந்த 7-ஜாமத்துக்குள் 2½-நாழிகை தீபாக்கினி, 5-நாழிகை கமலாக்கினி, மற்ற ஆறு ஜாமமும் வடவாக்கினியாக எரிக்கவேண்டியது. 2-நாழிகைக்கு ஒருதரம் இருப்புச் சலாகையால் குப்பியுள் மருந்தைக் கிளறி உடனே மேற்படி ஓட்டு வில்லையால் மூடிவிடுகிறது. அதிகத்தீயினால் குப்பிக்குள்ளிருந்து புகைவந்தால் கற்றூழம்சோற்றால் குப்பிவாயை மூடுகிறது. 7-ஜாமத்துக்குள் குப்பியின் மேல்பாகத்தில் மருந்து கட்டிக்கொள்ளும். ஒரு நாள் முழுமையும் ஆறவைத்து குப்பியையுடைத்து மருந்தை எடுத்து வைத்

துக்கொள்ளுகிறது. மருந்தின் வேகம் போகும்படி சீந்தில்கொடிக் கஷாயம் செய்து ஒரு பானையில்விட்டு மேற்படி சிந்தூரத்தை கட்டியாகவே கிளிக்கட்டி வேக வைத்தால் மருந்துவேகம் தணிந்துபோகும். இந்த மருந்து சகல ரோகங்களுக்கும் பிரயோசனப்படும். சிசுபாலர்களுக்கும் அனுபானங்களோடு சேர்த்துக் கொடுக்கலாம். இந்த உத்தமமான ஔஷதம் மிக வும் அனுபோகத்துக்கு வந்தது.

மேற்படி மருந்துக்கு அனுபான விபரம்:—

1-வது: தூதுவளை, கண்டங்கத்தரி, ஆடாதோடை, இம் மூன்று வகையையும் ஒரு பானைவாயில் வேடுகட்டி அதன்மேல் வைத்துப் புட்டுப்போல் அவித்துச் சாறு பிழிந்து அந்தச் சாற்றில் திரிகடுகுத்தூள் மூன்று விரல் அளவு யெடுத்துச் சேர்த்து மேற்படி சிந்தூரத் தில் ½-பணவெடை கலந்து காலையிலும் மாலையிலும் 20-நாள் உட்கொண்டால் சுவாசகாசம், க்ஷயசம்பந் தம், கபசம்பந்தம், எலிகடி, மூர்ச்சை இவை முதலிய நூற்றெட்டு வகையான ரோகங்களும் சொஸ்தமாகும்.

2-வது: அரிசித்திப்பிலியை வறுத்துப் பொடி செய்து மூன்றுவிரல் அளவெடுத்துத் தேன் சேர்த்து ½-பணவெடை சிந்தூரம் சேர்த்துக் காலை மாலை 20-நாள் உட்கொண்டால் சூலை 18-ம், குன்மம் 8-ம், குஷ் டம் 18-ம், இரணம், மண்டைசூலை, பீனசம், மார்புவலி, காதுவீக்கம் 6-ம் இவையெல்லாம் சொஸ்தமாகும்.

3-வது: வெள்ளைப்பூண்டுத் தைலத்தில் ½-பண வெடை சிந்தூரம் கலந்து 2-வேளையாக 10-நாள் சாப் பிட்டால் சிலேட்டுமமூச்சு, உதரவாதம், வாதமூர்ச்சை, பித்தமூர்ச்சை, கரப்பான், ஜன்னி இவைகளெல்லாம் சொஸ்தமாகும்.

4-வது: ஓமம், சுக்கு, மிளகு இவைகளை வறுத்துப் பொடிசெய்து முருங்கைப்பட்டைச் சாற்றில் 3-விரல்

கொண்ட தூள்கலந்து ½-பணவெடை சிந்தூரம்சேர்த்து இரண்டு வேளையாக ஒரு மண்டலம் சாப்பிட்டால் சன்னிவாதம், சர்வாங்கவாதம், முடக்குவாதம், குண்டலவாதம், முகவாதம், வாதபித்தம், சிலேட்டுமம், கபம், சர்வாங்க கபம், உள்வலிப்பு, புறவலிப்பு, சத்திகுன்மம், எரிகுன்மம், அஷ்டகுன்மம், மூலவாய்வு, உதிரக்கட்டி, கவுசி, கல்லடைப்பு, சதையடைப்பு, நீரடைப்பு இவை முதலிய 37-உபாதிகள் சொஸ்தமாகும்.

5-வது: நிலவாகைச் சாற்றில் மேற்படி சிந்தூரத்தை ½-பணவெடை சேர்த்து ஒன்றைவிட்டொரு நாள் இரண்டு நேரமும் பத்து நாளைக்குச் சாப்பிட்டால் கெர்ப்பவிப்பிருதி, உளமாந்தம், விலாவிப்புருதி, பக்கவாயு, அண்டவாயு, துடைவாதம், யோனிச்சூலை, நாபிச்சூலை, கிரிப்புழு, சிறுபுழு, உதரவாயு இவைகளைச் சேர்ந்த அறுபது வியாதிகளும் சொஸ்தமாகும். இரணசம்பந்தம், சூலையுபத்திரவங்களும் இந்த அனுபானத்தால் சொஸ்தமாகும்.

ஷேக்த,

## விரண தைலம்

எலும்பொடிந்தாலும் காயம்பட்டாலும் முழிபிசகினாலும், நரம்பு பிசகினாலும், இரணங்களானாலும், மேலும் காயங்களுக்கெல்லாம் உபயோகமானது. வெள்ளைப்பூவுள்ள வட்டக்கிலுகிலுப்பையிலை, தேள்கொடுக்கியிலை, சிறுசெருப்படையிலை, பெருசெறுப்படையிலை, கருவூமத்தையிலை, காட்டுத்துளசியிலை, கிருஷ்ணதுளசியிலை இவைகளை தனித்தனி யிடித்து வகையொன்றுக்கு ஒருசேர் சாறெடுத்துக் கொள்ளுகிறது. பாலைப்பட்டை, மருதோன்றிப்பட்டை, ஆலம்பட்டை, அரசம்பட்டை, இச்சிப்பட்டை, கல்லிச்சிப்பட்டை, மைக்கொன்றைப்பட்டை, பொன்முருங்கைப்பட்டை, முருங்

கைப்பட்டை, இவ்வொன்பது பட்டைகளிலும் வகை யொன்றுக்கு ஒரு சேர் கஷாயமாக ஒன்பது சேர் கஷாய மெடுத்துக்கொள்ளுகிறது. ஒரு சேர் காசுக்கட்டியைத் தூள்செய்து வஸ்திரகாயம் பண்ணு கிறது. ஒரு சேர் களிப்பாக்கையும் அப்படியே வஸ்திர காயம் பண்ணுகிறது. சங்கம்வேர்ப்பட்டை சேர்-1, பூதகரப்பன்பட்டை சேர்-1 இவ்விரண்டையும் தனித் தனி ஒவ்வொரு சேர் கஷாயமாக எடுத்துக்கொள்ளு கிறது. கிராம்பு சேர்-2 பெருந்தூளாகச் செய்து கொள்ளுகிறது. இச்சரக்குகளைச் சேர்க்கும் விபரம்: நல்லெண்ணெய் சேர் 7, விளக்கெண்ணெய், இலுப்பை யெண்ணெய், புங்கெண்ணெய் இம்மூன்றும் வகை யொன்றுக்குச் சேர்-$\frac{1}{4}$, வேப்பெண்ணெய் சேர்-$\frac{1}{8}$ இந்த 5-எண்ணெய்களையும் ஒன்றாய்ச் சேர்த்து ஒரு பாத்தி ரத்தில் விட்டு மேலே சொல்லிய கஷாய வகைகளையும், சாறுவகைகளையும், மருந்து வகைகளையும் மேற்படி எண்ணெயிற் சேர்த்து மூன்று நாள் சூரியபுடத்தில் வைத்து நான்காம் நாள் பெரிய பானையில் ஊற்றி அடுப்பேற்றி மேற்படி மருந்துகள் மெழுகுபதமாகிற வரையில் காய்ச்சி இறக்கி எண்ணெயை வடிக்கட்டிச் சீசாவில் வார்த்து வைத்துக்கொள்ளுகிறது. இதை உபயோகப்படுத்தும் விபரம்: கீழேவிழுந்து வழு வுண்ட இரணங்களுக்கும் துணியில் தடவிப்போட்டால் ஆறிப்போகும். சுளுக்கினாலும், நரம்பு பிசகினாலும், மூழி பிசகினாலும் இந்த எண்ணெயைத் தடவி வழிக் கிறது, சுடுதண்ணீர் ஊற்றி வழிக்கிறது. எலும்பு ஒடிந்தாலும் காயம் பட்டாலும் இரணங்களானாலும் மேற்படி எண்ணெயைத் தடவிப் பட்டிகட்டுகிறது; முழங்காலில் ரோகம் வந்தால் மேற்படி எண்ணெய் தடவி பட்டிகட்டுகிறது; நெருப்பு பட்டுக் கொப்புள மானல் கொப்புளத்தை யுடைத்து இந்த எண்ணெய் போட்டால் சொஸ்தமாகும்.

ஷேக்த,

## விரண தைலம் (வேறு)

வேம்பாடம்பட்டை, குங்கிலியம், களிப்பாக்கு, கிராம்பு, கார்போகஅரிசி, இவ் வைந்தும் வகையொன்றுக்குத் தனித்தனி ஜலம் வார்த்து அரைத்து உருண்டை சேர்-1, காசுக்கட்டி அரைத்த உருண்டை சேர்-¼, நாவல்பட்டை, மகிழம்பட்டை, உதிரவேங்கைப் பட்டை, பாலைப்பட்டை, நுணாவேர், அரசம்பட்டை, முருங்கப்பட்டை புரசம்பட்டை, மருதம்பட்டை, ஆலம் பட்டை, இச்சிப்பட்டை, கல்லிச்சிப்பட்டை, மைக் கொன்றைப்பட்டை, பொன்முருங்கைப்பட்டை, கரு வேலம்பட்டை இவை பதினைந்து வகைகளையும் வகை யொன்றுக்குத் தனித்தனி கஷாயம் சேர் ஒன்று. சிறுசெருப்படியிலை, துளசியிலை, பெரிய செருப்படி யிலை, கிருஷ்ண துளசியிலை, தேள்கொடுக்கியிலை, வெள்ளைப் பூவுள்ள வட்டக்கிலுகிலுப்பையிலை, கரு ஊமத்தையிலை இவ்வேழுவகை யிலைகளின் சாறு வகை யொன்றுக்குத் தனித்தனி சேர் ஒன்று. எல்லா வகை களையும் 20-சேர் நல்லெண்ணெயிற் போட்டுக் காய்ச்சி மெழுகு பதமான பக்குவம் பார்த்து இறக்கி வைத்துக் கொள்ளுகிறது. முதல் முறையிற் சொன்னதுபோல் உபயோகிக்கவும்.

ஷேக்த,

## விரண சிவப்புத் தைலம்

வேம்பாடம்பட்டை சேர்-1, கிராம்பு, கார்போக அரிசி, காசுக்கட்டி, குங்கிலியம் இவை வகையொன்றுக்குச் சேர்-½ ஐந்தையும் நெகிழ அரைத்து நல்லெண்ணெய் 4-சேரில் போட்டு மெழுகுபதம்வருகிற பக்குவமாகக் காய்ச்சி இறக்கிக் கொள்ளுகிறது.

ஷேக்த,

## விரண மஞ்சள் முலாம்

மஞ்சள்மெழுகு சேர்-3, மிருதார்சிங்கி சேர்-⅛, வெள்ளைக்குங்கிலியம் சேர்-1, சாதிலிங்கம் விராகனெடை-2, மஞ்சள் விராகனெடை-2, பசுவின் நெய் சேர்-1 முன்சொல்லிய மெழுகைக் காய்ச்சித் தண்ணீரில் விட்டு அந்த மெழுகு கெட்டியானபின் எடுத்துக் கொண்டு மறுபடியும் காய்ச்சி மேற்சொல்லியவைகளை யெல்லாந் தூள்செய்து போட்டுக் காய்ச்சி வஸ்திரத்தில் வடிகட்டி டப்பாவில் போட்டு வைக்கவும். இந்த முலாம் மஞ்சள் நிறமாக இருக்கும். காயங்களெல்லாம் ஆறும்.

வாட்டான்கியானியார்,

## கண எண்ணெய்

முலைப்பால் படி-¼ சிற்றாமணக்கெண்ணெய், பசுவின்பால், இளநீர்ச்சலம், நறுவுளியிலைச்சாறு, துளசிச்சாறு, நெல்லிக்காய்ச்சாறு, பொன்னாங்காணிச்சாறு, முசுமுசுக்கைச்சாறு, சீந்திலிலைச்சாறு, வல்லாரைச்சாறு, முடக்கற்றான்சாறு, கற்றாழைச்சாறு, தண்ணீர் விட்டான் கிழங்குச்சாறு, கையாந்தகரைச்சாறு, கர்ப்பூரவள்ளிச்சாறு, சிறுகீரைச்சாறு, கருப்பஞ்சாறு இப்பதினேழும் வகையொன்றுக்குப் படி ஒன்றாகப் பதினேழுபடிகளும் எண்ணெயுள்பட ஒன்றாய்ச் சேர்த்துக் கொள்ளுகிறது. நிலப்பனைக்கிழங்கு, நன்னாரிவேர், வெட்டிவேர், விலாமிச்சைவேர், கோரைக்கிழங்கு, தாமரைவளையம், கொட்டிக்கிழங்கு, நெய்தறகிழங்கு இவை வகையொன்றுக்கு ஒருபலமாக எடுத்து இடித்து எட்டுப் படி தண்ணீரிற் போட்டுக் காய்ச்சி இரண்டு படியாக இறக்கி வடிக்கட்டி மேற்படி எண்ணெயோடு சேர்த்து, சுக்கு, மிளகு, திப்பிலி, கடுக்காய்த்தோல், தான்றிக் காய்த்தோல், நெல்லிமுள்ளி, சிற்றரத்தை, ஏலம், அதிமதுரம், சீரகம்,கருஞ்சீரகம், சந்தனம், வெந்தயம், மாசிக்

காய், ஜாதிக்காய், ஜாதிப்பத்திரி, கிராம்பு வகையொன்றுக்கு இரண்டு விராகனெடையாக எடுத்து எல்லாவற்றையும் இளநீர்த் தண்ணீர் விட்டரைத்து மேற்படி எண்ணெயிற் சேர்த்துப் பதமாகக் காய்ச்சி இறக்கிக் கொள்ளுகிறது. கொடிமுந்திரிப்பழம், பேரீச்சம்பழம், சீனிச்சர்க்கரை, கற்கண்டு இவை வகையொன்றுக்கு இரண்டு விராகனெடை மேற்படி எண்ணெயிற்போட்டு காலையில் ஒரு வேளை அரைக்கரண்டி அளவு யெண்ணெய் அரைமண்டலம் சாப்பிட்டால் 18-வகைக் கணங்களும் சொஸ்தமாகும். இச்சாபத்தியம்.

வாட்டான்கியானியார்,

### கண எண்ணெய் (வேறு)

பிரமியவழுக்கை, வல்லாரை, கற்றாழை, மணித்தக்காளி, பொன்னாங்காணி, வில்வஇலை, முடக்கற்றான் சிறுபுள்ளடி, கையாந்தகரை வகையொன்றுக்குச் சேர்-1 ஆகச் சாறெடுத்துக் கொள்ளுகிறது. பசுவின் பால் சேர்-1, எலுமிச்சம்பழரசம் சேர்-1, வெங்காயச் சாறு சேர்-1, இவைகளை யெல்லாம் இரண்டு சேர் சிற்றாமணக் கெண்ணெயோடு சேர்த்துக் கொண்டு இரண்டு விராகனெடை கிராம்பையும் இரண்டு விராகனெடை வெந்தயத்தையும் அரைத்துப் போட்டு எண்ணெயைப் பதமாகக் காய்ச்சி இறக்கி வைத்துக் கொள்ளுகிறது. 12-வயதுக்குட்பட்ட பிள்ளைகளுக்குக் காலையில் ஒருவேளை ஒரு விராகனெடை வீதம் ஒரு மண்டலம் அல்லது அரைமண்டலங் கொடுத்தால் சகல ரோகங்களும் தீரும். இச்சாபத்தியம். பழையது தள்ளுபடி.

வாட்டான்கியானியார்,

### கற்றாழைத் தைலம்

இரண்டுபடி நல்லெண்ணெயில் இரண்டுபடி கற்றாழைச் சாற்றை விட்டுக் காய்ச்சி இந்தத் தைலத்தைத்

தேய்த்து முழுகிக்கொண்டு வந்தால் உஷ்ணம், சூடு, காங்கை முதலியவைகளெல்லாஞ் சௌக்கியமாகும்.

அப்புராவ்,

## கருப்பவதி நீலி எண்ணெய்

அவுரியிலை, கையாந்தகரையிலை, பொற்றலைக்கையாந்தகரையிலை, வெள்ளைக்காக்கட்டானிலை, கருப்புக்காக்கட்டானிலை, இவ்வகை யிலைகளையும் காயவைத்து இடித்து வஸ்திரகாயம் செய்ததூள் வகையொன்றுக்கு ஒரு சேராக எடுத்துக்கொண்டு எல்லாம் ஒன்ருய்க் கலந்து இரண்டு பலம் மிளகும் இரண்டு பலம் வெள்ளைப் பூண்டும் சேர்த்துக் கற்ருழைச் சாறு விட்டுநெகிழ அரைத்துத் துட்டுப் பிரமாணம் வில்லைகளாகச் செய்து காயவைத்த வடகம் அரைச் சேருக்கு ஒருசேர் சிற்ருமணக்கெண்ணெயாக ஐந்தரைச் சேர் வடகத்துக்கும் பதினெரு சேர் சிற்ருமணக்கெண்ணெய் விட்டுப் பதினைந்துநாள் சூரியபுடத்தில் வைக்கவும். இந்த எண்ணெய் மூன்றுவீசம் சேர் அல்லது கால்சேர் அளவாகக் கருப்பவதிகளுக்குக் கொடுக்கலாம். அதுவும் மாதம் ஒன்றுக்கு மூன்று நாள் காலையில் ஒருவேளைதான் கொடுக்கலாம். உப்பில்லாப் பத்தியம். எத்தனை நாள் எண்ணெய் சாப்பிடுகிருர்களோ அத்தனை நாள் மறுபத்திய மிருக்கவேண்டும். மறுபத்தியத்தில் வறுத்த உப்பு சேர்த்துக்கொள்ளலாம். புளி கூடாது. சரீரம் பலவீனமாயிருந்தால் மாதம் ஒன்றுக்கு ஒரு நாள் கொடுக்கவேண்டும். இப்படி ஏழு மாதமட்டும் கொடுக்கவேண்டும். திடசரீரமாக இருந்தால் மூன்ருவது மாதம் மூன்றுநாள் ஐந்தாவது மாதம் மூன்று நாள் ஏழாவது மாதம் மூன்று நாள் கொடுக்கலாம். இப்படிக் கொடுத்தால் குழந்தைக்குக் கருங்கிரந்தி யுபத்திரவமுதல் எவ்வித உபத்திரவமும் இராது.

வேஷக்து,

## மேல்பற்று

நரம்பு பிசகினாலும், இரத்தங் கட்டினாலும், மூழி பிசகினாலும், அடிபட்டு எலும்பொடிந்து பட்டிகட்டியதன்மேல் இரத்தங் கட்டினாலும், வாயுவினால் வலியிருந்தாலும், அவைகளெல்லாம் நீங்கும். கரியபோளம் பலம்-1, காசுக்கட்டி பலம்-1, கடுக்காய் சேர்-2 இவைகளைத் தூள் செய்துகொண்டு பாலைப்பட்டை கஷாயம் கால்சேரும், எலுமிச்சம்பழச்சாறு ஒன்றரைச்சேரும் சேர்த்து மேற்படி தூளில் விட்டு சிறுகச்சிறுக அரைக்கிறது. இவ்விதம் சாறெல்லாம் விட்டு நன்றாய் மெல்லிதாயரைத்து பற்றுப்போட மேற்படி வியாதிகள் தீரும்.

வேஷக்து,

## மூலாம்

இரணம், சிரங்கு, காயாத இரணம் இவைகளுக்குத் துணியில் தடவிப் போட்டால் தீர்ந்துபோகும்.

பட்டைச்சாறாயம் இரண்டுசேரில் கால்சேர் துருசைப்போட்டுச் சீசாவை நன்றாய்க் குலுக்கி கார்க்குப் போட்டு ஒன்றைவிட்டொருநாள் வெய்யிலில் வைத்து வந்தால் இரண்டும் கலந்து மூலாமாகும். இதை மேற்சொல்லியபடி போட மேற்படி வியாதிகள் தீரும்.

அப்புராவ்,

## கிராணிக் கபாடம்

அபின், இலவம்பிசின், மாசிக்காய், ஜாதிக்காய், மாதுளம்பழத்தோல், காசுக்கட்டி, புளியங்கொட்டைத் தோல் இவை வகையொன்றுக்குப் பலம் ஒன்று. இவ்வேழு வகைச் சரக்கையும் எருமைத் தயிரில் நெகிழ அரைத்துக் காய்ச்சுகிறது. சுண்டினபின் முன்போல தயிர்விட்டரைத்துக் காய்ச்சுகிறது. இப்படி ஏழு தடவை யரைத்துக் காய்ச்சியானபின் தூதுவளைக் காய்ப் பிரமாணம் உருண்டை செய்து காயவைத்துக்

கொண்டு லவங்கப்பட்டைக் கஷாயத்தில் ஒரு உருண்டையை உரைத்துக் கொடுக்கவும். கிராணி சொஸ்தமாகும். இச்சாப் பத்தியம்.

முத்துசாமி தீக்ஷிதர்,

## தங்க பஸ்பம்

தங்கரேக்கு விராகனெடை-5, ரசம் விராகனெடை-5, நெல்லிக்காய்க் கெந்தகம் விராகனெடை-5, மனோசிலை விராகனெடை-5 இந்த நான்கையும் கல்வத்திலிட்டு எருக்கம்பால் விட்டு நாளொன்றுக்கு நான்கு ஜாமமாக ஐந்து நாளைக்குக் கையோயாமல் அரைத்து மெல்லீசாக வில்லைசெய்து காயவைத்து இடுக்கில்லாமல் அகலை நன்றாய்த் தேய்த்து வில்லையை வைத்து மேல் அகல்மூடி ஐந்து சீலைமண் செய்து நன்றாய்க் காயவைத்து அரைக்கெஜம் அகலமும், முக்கால்கெஜம் ஆழமுள்ள சக்கரமாகக் குழிவெட்டி அந்தக் குழியில் பாதி காட்டெருவைப் போட்டு மிதித்து அதன்பேரில் மருந்துகளை வைத்து மேலே எருவை யடுக்கிக் கையால் மெதுவாய் அமுக்கிக் குழியை நிரப்பி குழிக்குமேல் ஒன்றரைச் சாண் உயரம் எருவடுக்கிப் புடம்போடவும். புடம் ஆறினபிறகு மருந்தை யெடுத்து மறுபடியும் கல்வத்திலிட்டு தங்கரேக்குத் தவிர மற்ற மூன்று சரக்குகளையும் முன்னெடைப்படி கூடப்போட்டு மேற்படி எருக்கம்பால்விட்டு ஐந்து ஜாமம் அரைத்து வில்லைசெய்து ஓட்டில் வைத்து முன்போலப் புடம்போடவும், இந்தப்பிரகாரம் எருக்கம்பால் விட்டரைத்து ஐந்துபுடம் போடுகிறது. மருந்தின்மேல் தங்கச்சாயலிருந்தால் அந்த நிறம் மாறுகிற வரையில் எருக்கம்பால் விட்டரைத்துப் புடம்போட வேண்டியது. பின்பு கற்றாழம் சோற்றில் ஐந்து ஜாமம் அரைத்து முன் சொல்லியபடி புடம் போடுகிறது. அப்பால் எலுமிச்சம்பழச்சாறு விட்டரைத்து இரண்டு புடம் போடுகிறது. சொல்லிய புடங்களுக்கெல்லாம் தங்கரேக்கைத் தவிர மற்ற மூன்று

சரக்குகளையும் மேலே சொல்லிய எடைப்படி புதிதாய்ச் சேர்த்தே புடம் போடவேண்டியது. பின்பு இம்மூன்று சரக்கையும் சேர்க்காமல் மருந்தில் புளிப்பு மாதுளம் பழரசம் விட்டு ஐந்து ஜாமம் அரைத்து இரண்டு புடம் போட்டெடுத்தால் பஸ்பம் சுத்தமாகும். கொஞ்சம் சிவந்த வர்ணமா யிருக்கும். குப்பியில் பத்திரம் பண்ணவும்

தங்கபஸ்பத்திற்கு அனுபானமும்
அதனால் சொஸ்தமாகிற வியாதிகளும்:—

இந்தப் பஸ்பம் இரண்டு குண்டுமணி யளவெடுத்து இரண்டு பணவிடை மிளகுத்தூளோடு சேர்த்து பசுவின் நெய்யில் மத்தித்துக் கொடுத்தால் க்ஷயரோகம், அக்கினிமந்தம் சுவாசரோகம், இருமல், கிராணி, பாண்டு ரோகம், அதிசாரம் ஆகிய இவை அனுகூலமாகும். மேலும் சரீரத்தில் விஷதோஷமிருந்தால் நிவர்த்தியாகும். இளைத்திருந்தவர்கள் புஷ்டியாவார்கள். சரீரத்தில் காந்தியும் பலமும் தாதுவிர்த்தியும் உண்டாகும். மேலும் இந்தத் தங்க பஸ்பம் சகல ரோகங்களுக்கும் கொடுக்கலாம். க்ஷயரோகம், சீரணரோகம், சுவாசம், இருமல், கபரோகம், அக்கினிமந்தம், அரோசிகம், விஷபேதி இவை முதலிய ரோகங்களுக்கு அந்தந்தச் சரீர பலம், வியாதிபலம், பிரகிருதிபேதம். வயதுபேதம் தெரிந்துகொண்டு காற்பணவெடை, அரைப்பண வெடை, முக்கால் பணவெடை, ஒருபணவெடை வரையில் அந்தந்த ரோகங்களுக்குத் தக்க அனுபானங்களோடு சேர்த்துக் கொடுக்கவேண்டியது.

பத்தியம்:—வியாதிகளுக்குத் தக்கபடி வைக்கவும். இந்த மருந்துக்காகாதவை வாழைக்காய், வாழைப் பழம், வாழைப்பூ, வாழைத்தண்டு, வாழையிலையாகிய கதலி பஞ்சகமும். வில்வக்கஷாயம், வில்வஊறுகாய், வில்வவடகம், வில்வ லேகியம் ஆகிய வில்வ விருட்சத்தைச் சேர்ந்தவையும் எப்போதுமாகாது.

மேற்படி ரோகங்களுக்கு
வெவ்வேறு அனுபானமும் பத்தியமும்:—

மேற்படி தங்கபஸ்பம் கொடுப்பதற்கு முந்தி அந்தந்தச் சரீர பலத்துக்குத் தக்கபடி வாந்திக்கு அல்லது பேதிக்குக் கொடுக்கிற விதம். க்ஷயம், காசம், சுவாசம், அக்கினிமந்தம், அரோசிகம், அதிசாரம் இவ்வகை ரோகமுள்ளவர்களுக்கு தேகத்தினுடைய பலம்பார்த்துத் திடமாயிருந்தால் முதலில் வாந்திக்குக் கொடுத்துப் பின் மருந்து கொடுக்கலாம். துர்ப்பலமா யிருப்பவர்களுக்கும், வாந்திக்குப் பயப்படுகிறவர்களுக்கும், எப்போதும் வாந்தி யெடுப்பவர்களுக்கும் வாந்தி மருந்து கொடுக்கவே கூடாது. உபாயமாகப் பேதிக்குக் கொடுக்கலாம். அப்படிக் கொடுப்பதிலும் க்ஷயரோகக்காரர்களுக்கும் துர்ப்பலமா யிருப்பவர்களுக்கும் பேதிக்குக் கொடுக்கலாகாது.

க்ஷயரோகத்திற்கு
மேற்படி மருந்து கொடுக்க அனுபான வகை:—

வில்வவேரின் பட்டையை யெடுத்துவிட்ட வேர்க்குச்சி, முன்னைவேர், வாகைவேர், பாதிரிவேர், குமிளம் வேர், சுண்டைக்காய்வேர், முள்ளுக்கத்திரிவேர், மூக்குத்திப்பூண்டுவேர், சிறுபூளைவேர், நெரிஞ்சிவேர், சிறுகாஞ்சிரவேர், தூதுவளைவேர் இப் பன்னிரண்டு வகையிலும் வகைக்கு ஒவ்வொரு சேராகப் பன்னிரண்டு சேர் வேரையும் மெதுவாயிடித்து, ஒருபானை யிற்போட்டு 48-சேர் தண்ணீர்விட்டு, மூன்றுநாள் ஊறவைத்து அடுப்பேற்றிச் சிறுதீயாக எரித்து 12-சேர் கஷாயமாயிறக்கிக் கொண்டு வடிக்கட்டி, அதனுடன் வேறே ஒரு பாத்திரத்தில் 12-சேர் பசுவின் பாலைக் காய்ச்சிச் சூடாயிருக்கிற மேற்படி கஷாயத்தோடு சூட்டுடன் பாலை விடுகிறது. கஷாயம் ஆறியிருந்தால் மறுபடியுஞ் சுடவைத்துத்தான் சூட்டோடு பால் சேர்க்கவேண்டியது. அப்போதுதான் பால்

மூறியாது. மேல் கஷாயமெல்லாம் சுண்டி, பால்மாத்திர மிருக்கும்படியாகக் காய்ச்சி பக்குவத்தில் இறக்கி புறைக்குத்துகிறது. அதற்குமேல் அந்தத் தயிரைக் கடைந்து வெண்ணெயை யெடுத்துருக்கி நெய் செய்து ஒருபங்கு நெய்யும், அரைப்பங்கு தேனும் மேற்சொல்லியபடி சொர்னபஸ்பம் ஓரளவும், அதற்கு இரட்டிப்பு மிளகுத் தூளும் சேர்த்துக் கொள்ளுகிறது. உஷ்ண மிகுதியாயிருந்தால் தேன் சேர்க்கலாகாது. கபசம்பந்தமாய் இருந்தால் அரிசித்திப்பிலியை வருத்துப் பொடி செய்து மிளகுதூள் அளவாகச் சேர்த்துக்கொள்ளவும். மலப்போக்கு அதிகமாயிருந்தால் பஸ்பத்தினெடைக்கு இரட்டிப்பு கிராம்பை வறுத்துப் பொடிசெய்து சேர்த்துக்கொள்ளுகிறது. இவ்விதம் கொடுத்து அதன்மேல் சீத உபலாதிச் சூரணம் அல்லது இலகுதாளிசச் சூரணம் சரீரத்துக்கு எது அநுகூலமாயிருக்குமோ அதைக் கொடுக்கிறது. அதற்குமேல் மாமிசம் சாப்பிடப்பட்டவர்களுக்கு மாமிசத்தின் சூப்பு செய்து கொடுக்கிறது; மாமிசம் சீரணத்துக்கு வராத மற்றவர்களுக்கும் சூப்பு செய்து கொடுக்கலாம். இந்தப் பிரகாரம் கொடுத்தால் க்ஷயரோகம் சொஸ்தமாகும்.

அப்படியே பதினொருவகைச் சின்னங்களுடன் இருக்கின்ற க்ஷயரோகிகளுக்கு சிவந்தாதி கிருதம் செய்து, அந்தக் கிருதத்தில் மேற்படி பஸ்பம் கொடுத்தால் மேற்படி க்ஷயரோகம் சொஸ்தமாகும். இதனடியிற் சொல்லியிருக்கிற சீத உபலாதிச் சூரணம், இலகுதாளிசச் சூரணம், அஜரசம், வாசாதிக் கஷாயம், சிவந்தி கிருதம் இவைகளின் விபரம் சொல்கிறோம்.

## சீத உபலாதி சூரணம்

சீனிசர்க்கரை விராகனெடை-16, மூங்கிலுப்பு விராகனெடை-8, அரிசித்திப்பிலி விராகனெடை-4, ஏலம் விராகனெடை-2, கருவாப்பட்டை விராக

னெடை-1 இவைகளையெல்லாம் நெகிழத் தூள்செய்து சேர்த்து அந்தத் தூளில் ஒரு விராகனெடை கொடுக்கலாம். அதிகமாகவும் கொடுக்கலாம்.

## இலகுதாளிசச் சூரணம்

தாளிசபத்திரி விராகனெடை-1, மிளகு விராகனெடை-2, சுக்கு விராகனெடை-3, அரிசித்திப்பிலி விராகனெடை-4, ஏலம் விராகனெடை-5, கருவாப்பட்டை விராகனெடை-½, சீனக்கற்கண்டு விராகனெடை-32 இவைகளை யெல்லாம் தூள்செய்து இந்தத் தூளில் ஒரு விராகனெடை கொடுக்கலாம். அதிகமாகவும் கொடுக்கலாம்.

## வெள்ளாட்டு மாமிச சூப்பாகிய அஜீரசம்

அரிசித்திப்பிலி விராகனெடை-1, எவாச்சாரம் விராகனெடை-1, வறுத்த கருங்கொள்ளு விராகனெடை-1, சுக்கு விராகனெடை-1, காய்ந்த மாதுளம்பழத் தோல் விராகனெடை-1, நெல்லிமுள்ளி விராகனெடை-1, வெள்ளாட்டு மாமிசம் விராகனெடை-12, தண்ணீர் சேர்-1½ இவைகளையெல்லாம் சேர்த்துக் காய்ச்சி அரைச்சேர் கஷாயமாக இறக்கி அதில் இஞ்சிச் சாறும் கற்கண்டும் சேர்த்துக் கொடுக்கலாம். இஞ்சிச் சாறும் கற்கண்டும் ஒரு விராகனெடை முதல் மூன்று விராகனெடை வரையில் சேர்க்கலாம்.

## வாசாதிக் கஷாயம்

ஆடாதோடையிலை விராகனெடை-5, தூதுவளையிலை விராகனெடை-5 இவைகளை அறுத்து வறுத்துக் கொண்டு ஒரு விராகனெடை அரிசித்திப்பிலியும் போட்டு ஒருசேர் தண்ணீரும் விட்டுக் காய்ச்சி அரைக்காற்சேர் தண்ணீராக இறக்கி மேலே சொல்லிய அஜீரசத்தில் சேர்த்த நிறைப்படி இஞ்சி ரசமும் சர்க்கரையும் சேர்த்துக் கொள்ளவும்.

## ஜீவந்தி கிருதம்

ஊசிப்பாலைசமூலம், திராக்ஷப்பழம், அதிமதுரம், வெப்பாலையரிசி, கோஷ்டம், அக்கிராகாரம், சுண்டைக் காய்வேர், நெரிஞ்சிவேர், நீலோற்பலக்கிழங்கு, கீழ்காய் நெல்லிவேர், துராலெப்பை, அரிசித்திப்பிலி, இப்பனி ரெண்டும் வகை யொன்றுக்குக் கால்சேர் நிறுத்து எல்லாம் ஒன்ருய்ச் சேர்த்து இடித்து ஒரு பானையிற் போட்டு 44-சேர் தண்ணீர்விட்டு ஒரு நாள் வைத்து மறுநாள் சிறுதீயாக எரித்துப் பத்துச் சேராக்கி இறக்கிக்கொள்ளுகிறது. அதன்மேல் அந்தக் கஷாயத்தில் $2\frac{1}{2}$-சேர் பசுவினெய்யைக் கலந்து மேலே சொல்லிய பனிரண்டு வகையிலும் வகையொன்றுக்கு $2\frac{1}{2}$-விராகனெடை வீதம் நிறுத்து அவைகளை யெல்லாம் நெகிழ அரைத்து நெய்யிற் கலந்து மூன்று நாள் வைத்து நான்காம்நாள் நெய்யைக் காய்ச்சிப் பதமாக இறக்கிக் கொள்ளவும். இந்தக் கிருதத்தை $1\frac{1}{4}$-விராகனெடை யளவு முதல் $2\frac{1}{2}$-விராகனெடை யளவுவரையில் கொடுக்கலாம். இந்த ஜீவந்தி கிருதத்துடன் சொர்ண பஸ்பம் சேர்த்துக் கொடுத்தால் பதினொருவித சின்னங்களுடன் சேர்ந்திருக்கிற க்ஷயரோகம் சொஸ்தமாகும்.

சாத்திய க்ஷயரோகத்தின் சின்னங்கள்:

வாயுவினல் தொண்டைகம்முதல், விலாவலி, புஜவலி, இளைத்துப்போதல், பித்தாதிக்க சுரம், உடம்பெரிச்சல், கண்ணெரிச்சல், பேதி, ரத்தவாந்தி, கபம், தலைவலி, சோம்பல், அசக்தம். அன்னத்துவேஷம், தாகத்துவேஷம், இருமல், தொண்டையில் முள்ளுக் குத்துவதுபோலிருத்தல், இந்தப் பதினொரு குணங்களுடனிருக்கிற க்ஷயரோகம் சௌக்கியமாகும்.

க்ஷயரோகக்காரனுக்குப் பத்தியவகை:—இலகுவான சாப்பாடு; கைவிதைச்சம்பா, கத்தரிப்பிஞ்சு, புடலம் பிஞ்சு, கவுதாரி, வெள்ளாட்டுக்கறி ஆகிய இவை

கொடுக்கலாம். புளி, உப்பு, மிளகு வகைக்குக் கொஞ்சம் சேர்க்கவேண்டும். மிளகாய், கடுகு, கீரைத்தண்டு, பறங்கிக்காய் இவைகள் ஆகா.

அக்கினிமந்தத்துக்குச்
சொர்ண பஸ்பம் கொடுக்க அனுபானம்:—

இஞ்சிச்சாற்றை ஒரு பாத்திரத்தில் பிழிந்து சுண்ணம்பு படிந்தபின் தெளிவாய் இருத்துக்கொண்டு அந்தச்சாறு சரீரபலத்துக்குத் தக்கபடி மூன்று விராகனெடை முதல் ஏழு விராகனெடை வரையில் மருந்து சாப்பிட்டபின் குடிக்கக் கொடுக்கிறது. அப்படிக் கொடுக்கும்போது அக்கினிமந்தமானது வாதத்தையனுசரித்திருந்தால் இஞ்சிச் சாற்றோடு ஒரு விராகனெடை துரிஞ்சிப்பழச்சாறும், ஒரு விராகனெடை பழையவெல்லமும் சேர்த்துக் கொடுக்க வேண்டும். அந்த அக்கினிமந்தம் பித்தத்தைப்பற்றி யிருந்தால் இஞ்சிச்சாற்றோடு மாதுளம்பழச்சாறு, சர்க்கரை வகையொன்றுக்கு 1-விராகனெடை முதல் 2½-விராகனெடை வரையில் சேர்த்துக் கொடுக்கலாம். மேற்படி அக்கினிமந்தம் கபத்தைப்பற்றி யிருந்தால் இஞ்சிச்சாற்றுடன் ஒரு விராகனெடை தேனும் அரை விராகனெடை எவாச்சாரமும் சேர்த்துக் கொடுக்கவும்.

மேற்சொன்ன அக்கினிமந்தம், வாதயுத்தம், பித்தயுத்தம், கபயுத்தம் என மூன்றுவகைப்படும்.

வாதயுத்த அக்கினிமந்த லக்ஷணம்: வயிற்றுப்பிசம், வயிற்றில் ஆகாரமில்லாதிருந்தாலும் உப்பிசம், தேககனம், உடம்பில்வலி ஆகியவைகள்.

பித்தயுத்த அக்கினிமந்த லக்ஷணம்: வாய்கசப்பு, உடம்பெரிச்சல், கண்ணெரிச்சல், வயிற்றிலெரிச்சல், மலசலம் மஞ்சள் நிறமாக இருத்தல் ஆகியவைகள்.

கபயுத்த அக்கினிமந்த லக்ஷணம்: அன்னத்தை சீரணிக்கும் சக்தியில்லாமை, வயிறு கனமாக இருத்தல்,

அதிக சோம்பலாகவும் இருத்தல், அன்னம் தண்ணீரில் பிரீதியில்லாதிருத்தல், வாயில் நீரூறல், குமட்டல், மிகுந்த தூக்கம் ஆகியவைகள். இக்குறிகளையெல்லாம் பார்த்துத் தக்க அனுபானத்துடன் மருந்து கொடுக்கவும். கபத்தோடு அக்கினிமந்தம் சம்பந்தப்பட்டிருந்தால் அதற்கு முதலில் வாந்திக்குக் கொடுத்துப் பின்பு மருந்து கொடுக்கவேண்டும்.

சுவாசகாசத்துக்குச்
சொர்ணபஸ்பங் கொடுக்க அனுபானம்:—

கண்டங்கத்தரிசமூலம், அத்திஇலை, வெள்ளிண்டினிலை, தூதுவளையிலை, ஆடாதோடையிலை இந்த ஐந்துவகை யிலையும் வாடாததாய் வகையொன்றுக்கு 2-விராகனெடை யிலை கொண்டுவந்து இடித்து 10-சேர் தண்ணீர் கொள்ளும்படியான பாத்திரத்தில் 5-சேர் தண்ணீர்விட்டு வாய்க்குச் சவுக்கங்கட்டி அந்தத் துணி மேல் வேறொரு துணிபோட்டு அதன்மேல் இடித்த இலைகளில் பாதிபோட்டுப் பரப்பி அரிசித்திப்பிலி, கருஞ்சீரகம், சுக்கு, சிற்றரத்தை, சிறுதேக்கு, கஸ்தூரி மஞ்சள், கடுக்காய்த்தோல், தாளிசபத்திரி இவை வகையொன்றுக்கு அரை விராகனெடையாக எல்லாம் நெகிழ இடித்து முன்னே வேடுகட்டிப் பரப்பிய இலைகளின்மேல் வைத்து மற்றப் பாதியிலைகளையும் இந்தச் சரக்கின்மேல் போட்டு, ஆவிபோகாமல் ஒரு பாத்திரத்தால் மூடி அந்தப் பாத்திரத்தின் இடுக்கிற்கு ஈரத் துணி சுற்றி அடுப்பேற்றி, இரண்டு நாழிகையெரித்து இறக்கி ஆவிநீர் சுண்டுவதற்கு முன், பானை வேட்டுக்கு மேலே போட்ட துணியை அப்படியே மருந்துகளுடனும், பரப்பி மூடிய இலைகளுடனும் எடுத்துப் பிட்டு வைத்த இலையுடன் சேர்த்தே மருந்தையும் பிழிந்து கொள்ளுகிறது. அந்த ரசத்துக்குப் பிட்டுரசமென்று பெயர். அந்த ரசத்தின் அளவு வீசம் சேர் முதல் அரைக்கால் சேர் வரையில் சரீரபலம் பார்த்து யுக்தா

னுசாரம் கொடுக்கவும். அளவில் குறையுமானல் அதேபிரகாரம் இன்னமொரு தடவை அந்த மருந்தையே அடுப்பேற்றி யெரித்துப் பிழிந்துகொள்ளுகிறது. சொர்ணபஸ்பம் கொடுத்தபிறகு மேற்படி ரசத்தோடு ஒரு விராகனெடை தேன் கலந்து குடிக்கக் கொடுக்கிறது. சுவாசகாசம் சொஸ்தமாகும்.

இதனல் அனுகூலமாகாமற்போனல் ஐந்து விராகனெடை பேரீச்சங்காயை யிடித்து மேற்படி இலையின் மத்தியில் வைத்து முன்போல் பிட்டவித்துப் பிழிந்து குடிக்கக் கொடுக்கிறது. காரசாரம் பொறுக்காமற் போனல் பேரீச்சங்காயைத் தனியாய்க் கஷாயம் வைத்துக் கொடுக்கவும். பேரீச்சங்காய் ஐந்து முதல் பத்து விராகனெடை வரையிலும், தண்ணீர் ஒரு சேர்முதல் இரண்டு சேர் வரையிலும் சேர்த்துக் கஷாயம் செய்யவும். கஷாயம் அரைக்கால் சேர் முதல் கால்சேர் வரையில் கொடுக்கலாம். கஷாயத்தின் எரிப்புத்திட்டம் தீபாக்கினிக்கு அதிகமாகவும் கமலாக்கினிக்குக் குறைவாகவும் இருக்கவேண்டும்.

முன்சொன்ன வாந்திக்கு
சொர்ணபஸ்பம் கொடுக்க அனுபானம் :—

மிளகு, சீரகம், மயிலிறகு இவை வகையொன்றுக்கு விராகனெடை-2 இந்த மூன்றையும் இரண்டு சாண் அளவுள்ள ஒரு வெள்ளைச் சவுக்கத்திற்கட்டி, பசுவின் நெய்யில் நனைத்து ஒரு சட்டியில் வைத்து அடுப்பேற்றி, அடுப்பிலும் தீக்கொளுத்தி, சட்டியில் வைத்த முடிச்சையுங் கொளுத்திவிட்டு மேற்படி சரக்குச் சாம்பலானபின் அந்தச் சட்டியில் தானே கடைந்தெடுத்துக் கொள்ளுகிறது. அப்படிச் செய்து எடுத்த பஸ்பம் கால் விராகனெடையும், சொர்ண பஸ்பம் யுக்தானுசாரமான அளவும் சேர்த்து அரை விராகனெடை தேனில் மத்தித்துக் கொடுக்கவும்.

இதனால் குணமாகாவிட்டால் மேற்சொல்லிய அனுபானத்துடன் மருந்தைக் கொடுத்து அதன்மேல் இஞ்சிரசம், கரும்பின்ரசம், மாதுளம்பழரசம், துரிஞ்சிப்பழரசம், பந்தர்ப்பழரசம், சர்க்கரைநாரத்தம்பழ ரசம் இந்த ஐந்துவகை ரசங்களில் நோயாளிக்கு எதில் பிரியமிருக்கிறதோ அதையும், நோயின் வகையையும் தெரிந்து சமயத்திற் கேற்றபடி வாந்தி நிற்கிறவரையில் ஐந்து விராகனெடையாகிலும் ஏழு விராகனெடையாகிலும் இரண்டு மூன்று தடவையாகக் கொடுக்கவும். தொண்டை புண்ணுயிருந்தால் இரண்டு விராகனெடை செம்பஞ்சை நனைத்துப் பிழிந்துகொண்டு அதில் ஒரு விராகனெடை கற்கண்டைக் கலந்து கொடுக்கவும். இதற்கு ஆகாரம் நெற்பொரியும் கரும்புத்துண்டும் கொடுக்கலாம்.

வாந்திக்கு அனுபானம்: (வேறு)

ஒருசெரங்கை ஆற்றுமணலை யொருசட்டியிற் போட்டு நெருப்புப்போல் வறுத்து அதில் ஒரு சேர் தண்ணீர் விட்டு அதில் அரை விராகனெடை சுக்கும், அரைவிராகனெடை கொத்துமல்லி விதையும் போட்டு கால்சேர் கஷாயமாக இறக்கிக்கொண்டு அதில் இரண்டு விராகனெடை சர்க்கரை போட்டுக் கொடுத்தால் கட்டாயமாக நின்றுவிடும்.

இரத்த வாந்திக்கு அனுபானம்:

சுத்திசெய்த சொர்ணகாவியை இரண்டு விராகனெடை படிகாரம் ஒரு விராகனெடை, கற்கண்டு மூன்று விராகனெடை, இந்த மூன்றையும் நெகிழத் தூள்செய்து அந்தத் தூள் ஒரு விராகனெடை, பசுவின் வெண்ணெய் இரண்டு விராகனெடை, சொர்ண பஸ்பம் யுக்தானுசாரம் இம் மூன்றையும் கலந்து கொடுக்கிறது. இதற்குமேல் கரும்புரசம் அல்லது மாதுளம்பழரசம் கொடுக்கலாம்.

## சொர்ணகாவி சுத்தி

தேவையான சொர்ணகாவியைப் பசுவின்பாலில் ஊறப்போட்டு நன்ருயூறிக் கரைந்தபின் கையினுலும் கரைத்து ஒரு துணியில் வடிக்கட்டினல் அதிலிருக்கிற கல்லு மணலெல்லாம் போய் அந்தக்காவி சுத்தமாயிருக்கும். பின்பு காயவைத்து மருந்தோடு சேர்த்துக் கொள்ளலாம். காவி ஒருசேருக்குப் பால் நான்குசேர் வேண்டும்.

### வாந்திக்கு அனுபானம்: (இன்னெரு முறை)

கருவேப்பிலையீர்க்கு, எலுமிச்சையீர்க்கு, சர்க்கரை நாரத்தையீர்க்கு தோல்நீக்கிய வேப்பமீர்க்கு; புளியிலையீர்க்கு, நெல்லியீர்க்கு, குட்டிவிளாவினீர்க்கு இவை வகையொன்றுக்கு விராகனெடை-2 தனித்தனி நிறுத்து பரிமளவாசம் வரும்படித் தனித்தனி வறுத்து வைத்துக் கொள்ளவும். ஒரு செரங்கை பருத்திக் கொட்டையைச் சட்டியில் போட்டு உபாயமாக வறுத்துடைத்து எடுத்த பருப்பு விராகனெடை-1, இஞ்சியின் தோலைப்போக்கி அதைப் பொடியாகத் துண்டு செய்து பசுவின் நெய்யில் வறுத்து எடுத்தது விராகனெடை-1, இரண்டு விராகனெடை சீரகத்தை ஒரு துணியில் முடிந்து அந்த முடிச்சை பசுவின் நெய்யில் நனைத்து ஒரு சட்டியில்போட்டு எரித்து அது பஸ்பமானவுடன் அகப்பையால் கடைந்து அதில் இரண்டுசேர் தண்ணீர் விட்டு மேற்சொல்லிய ஈர்க்கு வகைகளையும், பருத்திக்கொட்டை பருப்பையும், இஞ்சி துண்டுகளையும்போட்டு, திராக்ஷப்பழம் விதைநீக்கி ஒரு விராகனெடை, விதையில்லாத திராக்ஷப்பழம் ஒரு விராகனெடை, விதைநீக்கிய பேரீச்சங்காய் விராகனெடை-2, நெற்பொரி விராகனெடை2, அதிமதுரம் விராகனெடை-½ இவைகளையெல்லாம் நசுக்கி அதிற் போட்டுக் காய்ச்சி, கால்சேர் கஷாயமாக இறக்கி

அதில் 2-விராகனெடை கற்கண்டுசேர்த்துவாந்தியாகிற வர்களுக்கு, கபமதிகமாயிருந்தால் சூடாகவும், பித்தம் அதிகமாயிருந்தால் இந்தக் கஷாயத்தில் கால்பண வெடை பச்சைக்கர்ப்பூரம் சேர்த்தும், இரத்த வாந்தி யானுல் ஆறின கஷாயமும் கொடுக்கவும். இந்தக் கஷாயம் உடனுக்குடனே புதிது புதிதாய்ச் செய்து கொடுக்கவேண்டும். இந்தக் கஷாயத்தில் வாந்தி நின்று விடும். ஒருவேளை நிற்காமல்போனுல் வாந்திக்குச் சாதகமான ஏலாதிச் சூரணம், கண்டாத்திரிகம் இவை களில் ஏதாவதொன்றில் வாந்தியை நிற்பாட்டத்தக்கது யெதுவோ அதை இக் கஷாயத்துடன் சேர்த்துக் கொடுக்கவும்.

## பித்தரோகத்துக்கு ஏலாதிச் சூரணம்

காசாஏலம், கிராம்பு, லவங்கப்பட்டை, லவங்கப் பத்திரி, சிறுநாகப்பூ, காய்ந்த இலந்தைப்பழத்தை யிடித்து வடிக்கட்டினதூள், நெற்பொரி, தினையின் பொரி, கோரைக்கிழங்கு, மலாக்காசந்தனம், பருத்திக் கொட்டைப் பருப்பு இவை வகையொன்றுக்கு விராக னெடை-2, பச்சைக்கர்ப்பூரம், அரிசித்திப்பிலி இவை வகையொன்றுக்கு விராகனெடை-1 இவைகளை யெல் லாம் நெகிழத் தூள்செய்து வஸ்திரகாயம் செய்து இதற்குச் சமபாகம் கற்கண்டுத்தூள் சேர்த்துக் கொள்ளவும். இந்தச் சூரணம் 2½-விராகனெடை முதல் 5-விராகனெடை வரையில் தேனில் மத்தித்து இதனுல் பித்தரோகங்களும் வியாதியஸ்தனுடைய பலனைப் பார்த்துக் கொடுக்கிறது. வாதம், பித்தம், கபம் சம்பந்தமான வாந்தியும் சொஸ்தமாகும். ஸர்தி யென்பது வாந்தி.

## கண்டாத்திரிகம்

இஞ்சி பலம்-16, கற்கண்டு பலம்-16, மிளகு விராக னெடை-12, திப்பிலி விராகனெடை-8, கண்டத்திப்

பிலி விராகனெடை-8, சுக்கு விராகனெடை-5, ஜாதிக் காய் விராகனெடை-5, ஏலம் விராகனெடை-5, கிராம்பு விராகனெடை-5, மூங்கிலுப்பு விராகனெடை-5, இஞ்சி, கற்கண்டு இவ்விரண்டும் தவிர மற்ற எட்டுவகைச் சரக்குகளையும் சூரணம் செய்து வடிக்கட்டி வைத்துக் கொள்ளுகிறது. இஞ்சியின்மேற் பிராணியைச்சீவி அதை மெல்லீசாக அரிந்து பசுவின் நெய் விட்டு, பொன்னிறமாக வறுத்துச் சூரணம் செய்து கற்கண் டையும் தூள்செய்து இரண்டையும் கலந்து எட்டுப் பலம் பசுவின் நெய் சேர்த்துக் கொஞ்சம் காய்ச்சி மேற்படி வஸ்திரகாயம் செய்த தூளையும் இதனேடு சேர்த்துக் கிளரி ஒரு பாத்திரத்தில்வைத்துக்கொண்டு சரீரபலம் பார்த்து 3-விராகனெடை முதல் 5-விராக னெடை வரையில் கொடுக்கலாம். சொர்ணபஸ்பம் கொடுக்கிற அளவின்படி கொடுத்து அதன்மேல் இந்தச் சூரணம் கொடுக்க வாந்தி, அக்கினிமந்தம் ஆகியவை சொஸ்தமாகும்.

## கண்டாத்திரிக வடகம்

மேற்சொல்லிய சாமான்களில் மிளகு முதல் மூங்கி லுப்பு வரையிலுள்ள எட்டுச்சரக்குகளையும் சூரணம் செய்து ஒரு பாத்திரத்தில் வைத்து 16 பலம் இஞ்சி யைக் கொஞ்சம் தண்ணீர் சேர்த்து நறுக்கிச் சாறு பிழிந்து தெளியவைத்துச் சுண்ணும்பைப் போக்கி 16-பலம் கற்கண்டைச் சேர்த்து அதைப் பாகுசெய்து கம்பிப்பதம் பார்த்து மேற்படி சூரணங்களைச் சேர்த்து அரைச்சேர் பசுவின்நெய் விட்டுக் கெட்டிப்பதத்தில் எடுத்து பலகைமேல் ஊற்றி ஆறினபின் முக்கால் அங்குல அளவுக்கு வில்லைகளாக அறுத்துக்கொள்ளு கிறது. இந்த வடகம் முன்னே சாப்பிடக்கொடுத்துப் பின் மருந்து சாப்பிடலாம். மருந்து சாப்பிட்ட பின் னும் இந்த வடகம் சாப்பிடலாம். இதனல் வாந்தி நிற்கும்; அக்கினிமந்தம் சொஸ்தமாகும்; அரோசிகம்

போகும்; பிரசவமான ஸ்திரீகளுக்கு 16 நாளைக்குப் பின் இந்த வடகம் கொடுத்தால் சூதகவாய்வு, சூசிகாக் கிராணி ஆகியவை வராது. இரத்த விர்த்தியாகும்; சரீரம் கெட்டியாகும்.

ஜீரணசுர லக்ஷணம்:

சீரணசுர மென்பது சுரம் வந்து 16-நாளைக்குப் பிறகு சீரணசுரமென்று சொல்லப்படுவது.

சன்னிவாத சுரம் இருந்தால் ஒரு மாதத்தின் பிறகு சீரணசுரமென்று சொல்லப்படும்.

சீரண சுரக்காரர், கபசீரண சுரக்காரர், பித்தசீரண சுரக்காரர், கபபித்தசீரண சுரக்காரர் ஆகிய இவர்களுக்கு மருந்து கொடுப்பதற்கு முன், வாந்திக்குக் கொடுப்பவர்களுக்கு வாந்திக்கும் பேதிக்குக் கொடுப்பவர்களுக்கு பேதிக்கும் கொடுக்கிற விபரம்:—

சீரண சுரத்தினால் ரொம்பவும் துர்ப்பலப்பட்டவர்களுக்கு வாந்திக்கும் பேதிக்கும் கொடுக்கலாகாது. கொஞ்சம் தெம்பிருந்தால் கப சுரத்துக்கு, வாந்திக்கும் பித்தசுரத்துக்கு பேதிக்கும், கபபித்த சுரத்துக்கு முதல் வாந்திக்குக் கொடுத்து பிறகு பேதிக்கும் கொடுக்கவேண்டும்.

பின்பு மருந்து கொடுக்கிற விதம்:—முதல்நாள் சுக்கு, நிலவேம்பு, சீந்திற்கொடி, கோரைக்கிழங்கு, கொத்து மல்லிவிதை இந்த ஐந்து வகையும் நோயாளி துர்ப்பலமா யிருந்தால் வகைக்கு ஒரு விராகனெடையும், தெம்பாயிருந்தால் வகைக்கு இரண்டு விராகனெடையுமாகச் சட்டியில் போட்டு மேற்படி சரக்கிற்கு எட்டுப் பங்கு தண்ணீர்விட்டு ஒருபங்காகக் காய்ச்சி அந்தக் கஷாயத்தில் வெள்ளைத்தாளகபஸ்பம் இரண்டு பணவெடைமுதல் நான்கு பணவெடை வரையில் கொடுக்கவும். இந்தவிதம் மூன்றுநாள் கொடுத்தால் சுரம் அவ

பக்குவமாக இருந்தாலும் பக்குவமாகும். பிறகு மருந்து கொடுக்கிறது.

வாத சம்பந்தமாயிருக்கிற சீரண சுரக்காரருக்கு சொர்ணபஸ்பம் கொடுக்கிற அனுபானம்:—

சொர்ணபஸ்பம் யுக்தானுசாரமாகவும், அதற்கிரண்டுபங்கு மிளகுதூளும் கலந்து நெய்யில் மத்தித்து சாப்பிடக் கொடுத்து, மேலுக்கு ராஜகுணாதி கஷாயமாவது, பலா கஷாயமாவது கொடுக்கவும். இதனால் உபத்திரவம் சொஸ்தமாகும்.

## ராஜகுணாதி கஷாயம்

சிற்றரத்தை, நெரிஞ்சிவேர், சிற்றாமணக்குவேர், தேவதாரு, வெள்ளைச்சாரணைவேர், சுக்கு, சீந்திற்கொடி, நன்னாரிவேர், குமிளம்வேர், திராக்ஷப்பழம் இவைகள் வகையொன்றுக்கு விராகனெடை - 1 இவற்றை ஒரு பாத்திரத்தில் போட்டு அதில் இரண்டு சேர் தண்ணீர் விட்டுக் காய்ச்சிக் கால்சேராகச் சுண்டவைத்து அந்தக் கஷாயத்தில் அரைக்கால் சேர் முதல் கால்சேர் வரையில் சரீரபலம் பார்த்து, கஷாயம் சுடுகையா யிருக்கும்போதே அதில் ஒரு விராகனெடை வெல்லமும், இரண்டு பணவெடை வெள்ளைத்தாளக பஸ்பமுங் கலந்து சாப்பிடக் கொடுக்கவும்.

## பலா கஷாயம்

பேராமுட்டி, சுக்கு, சிற்றரத்தை, சீந்திற்கொடி, குமிளம்வேர் இவைகள் வகையொன்றுக்கு இரண்டு விராகனெடையாக நிறுத்து இடித்து இரண்டுசேர் தண்ணீர்விட்டுக் காய்ச்சி காற்சேர் கஷாயமாக இறக்கிக்கொண்டு மேலே சொல்லிய ராஜகுணாதி கஷாயத்திற் சொன்னபடி கொடுக்கவும்.

வாத சம்பந்த ஜீரணசுர லக்ஷணம்:

சரீரம் வெளுத்தல், கருத்தல், வற்றுதல் உலர்தல், எலும்புவலி ஆகிய சின்னங்களாம்.

## பித்தசம்பந்த சீரண சுரத்துக்குச் சொர்ணபஸ்பம் கொடுக்க அனுபானம்:—

சொர்ணபஸ்பம் யுக்தானுசாரம், சீரகம், மிளகு இரண்டையும் சமனெடை வறுத்து பஸ்பம்செய்து அந்த பஸ்பம் முன் சொர்ண பஸ்பத்திற்கு இரட்டிப்பாக நிறுத்தெடுத்து இவ் விரண்டையும் கலந்து நெய்விட்டு மத்தித்து சாப்பிடக்கொடுக்கிறது. மேலே திராக்ஷாதி கஷாயம் அல்லது உசிராதிக் கஷாயம் கொடுக்கிறது.

## திராக்ஷாதிக் கஷாயம்

திராக்ஷப்பழம், துராலெப்பே, பற்பாடகம், கோரைக்கிழங்கு, கொத்துமல்லிவிதை, சுக்கு, சீந்திற் கொடி இவை வகையொன்றுக்கு விராகனெடை-1 இவற்றைச் சிதைத்து அதில் இரண்டுசேர் தண்ணீர் விட்டு எட்டில் ஒன்றாகக் காய்ச்சி வடிகட்டி தேகபலத் துக்குத் தக்கபடி அரைக்காற் சேர் முதல் காற்சேர் வரையிற் கொடுக்கும்போது ஒரு விராகனெடை தேன் சேர்த்துக் கொடுக்கவும்.

## உசிராதிக் கஷாயம்

வெள்ளை விலாமிச்சைவேர், துராலெப்பே, சிரா யித்து, பற்பாடகம், கோரைக்கிழங்கு, ஆடாதோடை, கடுகுரோகணி இவை வகையொன்றுக்கு விராக னெடை-1 மேற்சொல்லிய திராக்ஷாதிக் கஷாயத்தில் சொல்லியபடியே செய்து அந்த அளவின்படியே கொடுக்கிறது.

### பித்த சம்பந்த ஜீரணசுர லக்ஷணம் :

கண்ணெரிச்சல், உடம்பெரிச்சல், வயிற்றிலெரிச் சல், வாய்கசப்பு, மலமும் சலமும் மஞ்சள் நிறமாயிருத் தல், வாய் வேக்காடு, உடம்பில் வியர்வை, சுரத்தின் வேகம் அதிகமாய் இருத்தல், தலைசுற்றல், மிகவும் களைப்பாக இருத்தல், கால் கை சில்லிட்டிருத்தல் ஆகியவைகள்.

### கபசம்பந்த ஜீரண சுரத்திற்குச் சொர்ணபஸ்பம் கொடுக்க அனுபானம்:—

சொர்ணபஸ்பம் யுக்தானுசாரம், மிளகு திப்பிலி இவ்விரண்டையும் சமபாகம் சேர்த்து தூள்செய்து மேற்படி பஸ்பத்துக்கு இரட்டிப்பாக நிறுத்தெடுத்துக் கலந்து ஒரு விராகனெடை தேனில் மத்தித்துக் கொடுக்கிறது. அதன்மேல் கோஷ்டாதிக் கஷாயம் அல்லது திரிபலாதிக் கஷாயம் கொடுக்கவும்.

### கோஷ்டாதிக் கஷாயம்

கோஷ்டம், வெட்பாலையரிசி, மறள்கிழங்கு, பேய்ப் புடல், சுக்கு வகையொன்றுக்கு விராகனெடை-2 இவற்றைச் சிதைத்து அதில் 2-சேர் தண்ணீர்விட்டு எட்டிலொன்ருய்க் காய்ச்சி வடிக்கட்டி மிளகுத்தூள், திப்பிலித்தூள் வகையொன்றுக்கு அரை விராக னெடை சேர்த்து சுடச்சுடச் சாப்பிடக் கொடுக்கவும்

### திரிபலாதி கஷாயம்

கடுக்காய், தான்றிக்காய், நெல்லிமுள்ளி இந்த மூன்றையும் கொட்டை நீக்கியெடுத்து, பேய்ப்புடல், ஆடாதோடை, சீந்திற்கொடி, சிறாயித்து, கடுகு ரோகணி, சுக்கு, சிற்றரத்தை இந்தப் பத்து வகையும் வகையொன்றுக்கு விராகனெடை-1 ஆக மேற்சொல் லிய கோஷ்டாதிக் கஷாயம்போல் செய்து அந்த நிறையின்படியே கஷாயம் கொடுக்கவும்.

### கப சம்பந்தமாயிருக்கிற ஜீரணசுர லக்ஷணம்:

உடம்புவெளுத்தல், உண்ட அன்னம் ஜீரணமாகா திருத்தல், பசி தாகமில்லாதிருத்தல், ஆலசியம், தூக் கம் ஆகிய இவைகளாகும்.

வாயுபித்த சம்பந்த ஜீரணசுரத்துக்கு
சொர்ணபஸ்பம் கொடுக்க அனுபானம்:—

சொர்ணபஸ்பம் யுக்தானுசாரம், மிளகுத்தூள் விராகனெடை-1, தேன் விராகனெடை-1 இம்மூன்றை யும் கலந்து மத்தித்துச் சாப்பிடக் கொடுத்து மேலுக்கு கிராதாதி கஷாயம் அல்லது சீந்திலாதிக்கஷாயம் கொடுக்கவும்.

## கிராதாதிக் கஷாயம்

குச்சிசிராயித்து, சீந்திற்கொடி, திராக்ஷப்பழம், நெல்லிமுள்ளி, கஸ்தூரிமஞ்சள் இவைகள் வகைக்கு விராகனெடை-2 இவற்றைச்சிதைத்து அதில் இரண்டு சேர் தண்ணீர் விட்டு எட்டிலொன்றாய்க்காய்ச்சி வடிக் கட்டி அதில் ஒரு விராகனெடை வெல்லம் சேர்த்து குடிக்கக் கொடுக்கவும்.

## சீந்திலாதிக் கஷாயம்

சீந்திற்கொடி, பற்பாடகம், கோரைக்கிழங்கு, குச்சிசிராயித்து. சுக்கு இவை வகை யொன்றுக்கு விராகனெடை-2 ஆக எல்லாஞ் சேர்த்து மேற் சொல் லியபடி கஷாயம் செய்துக் கொடுக்கவும்.

வாயு பித்த சம்பந்த ஜீரணசுர லக்ஷணம்:

வாதசீரண சுரலக்ஷணம் பித்தசீரணசுரம் ஆகிய இரண்டும் சேர்ந்திருப்பதே.

பித்தகப ஜீரணசுரத்துக்கு
சொர்ணபஸ்பம் கொடுக்கிற அனுபானம்:—

சொர்ணபஸ்பம் யுக்தானுசாரம், சீரகம், திப்பிலி இரண்டையும் தனித்தனி சூரணஞ்செய்து மேற்படி பஸ் பத்துக்குத் தனிச்சமமாய்ச் சேர்த்துத் தனி ஒரு விராக னெடை தேன் விட்டு மத்தித்து சாப்பிடக் கொடுத்து அதன்மேல் கண்டகாரியாதிக் கஷாயம் கொடுக்கவும்.

## கண்டகாரியாதிக் கஷாயம்

கண்டங்கத்தரி, சீந்திற்கொடி, சிறுதேக்கு, சுக்கு, வெட்பாலையரிசி, துராலெப்பை, குச்சிச்சிராயித்து, செம்மரக்கட்டை, கோரைக்கிழங்கு, பேய்ப்புடல், கடுகுரோகணி வகை யொன்றுக்கு-2 விராகனெடை வீதம் சேர்த்திடித்து அதில் இரண்டு சேர் தண்ணீர் விட்டு எட்டிலொன்ருய் காய்ச்சி வடிகட்டி அதில் இரண்டு விராகனிடை தேன்சேர்த்துக் குடிக்கக் கொடுக்கவும்.

## மல்லியாதிக் கஷாயம்

கொத்துமல்லிவிதை, செம்மரக்கட்டை, கோஷ்டம், பேய்ப்புடல், மறள்கிழங்கு, பொன்முசுட்டை, குச்சிச் சிராயித்து, சீந்திற்கொடி இவை வகை யொன்றுக்கு விராகனெடை-1 மேற்படி சொல்லிய கண்டகாரியாதிக் கஷாயம் செய்தபடி செய்துக் கொடுக்கவும்.

### பித்தகப ஜீரண சுரலக்ஷணம்:

பித்தஜீரண சுரலக்ஷணம், கபஜீரண சுரலக்ஷணம் ஆகிய இரண்டும் சேர்ந்திருப்பதே.

### வாத சிலேட்டும சம்பந்த ஜீரணசுரத்துக்கு சொர்ணபஸ்பம் கொடுக்க அனுபானம்:—

சொர்ணபஸ்பம் யுக்தானுசாரம், மிளகுத்தூள் மேற்படி பஸ்பத்துக்குச் சமமாய்ச் சேர்த்து ஒரு விராகனெடை தேனில் மத்தித்துக் கொடுத்து பஞ்சகோல கஷாயமாகிலும் அல்லது ஆரங்குவதாதிக் கஷாயமாகிலும் கொடுக்கவும்.

## பஞ்சகோல கஷாயம்

திப்பிலி, கண்டத்திப்பிலி, செவியம், சித்திரமூல வேர்ப்பட்டை, சுக்கு இவை வகையொன்றுக்கு விராகனெடை-2 இவற்றைச் சிதைத்து அதில் இரண்டு சேர் தண்ணீர் விட்டு எட்டிலொன்ருகக் காய்ச்சி வடிகட்டி

அதில் ஒரு விராகனெடை தேன் சேர்த்துக் கொடுக்கவும்.

## ஆரங்குவதாதிக் கஷாயம்

சரக்கொன்றைப் பட்டை, கண்டத்திப்பிலி, கோரைக்கிழங்கு, குச்சிச்சிராயித்து, கடுக்காய்த்தோல் இவை வகை யொன்றுக்கு விராகனெடை-2 மேற் சொல்லிய பஞ்சகோல கஷாய முறைப்படி செய்து கொடுக்கவும்.

### வாதசிலேட்டும ஜீரணசுர லக்ஷணம்:

வாதஜீரண சுரலக்ஷணமும் சிலேட்டுமஜீரண சுர லக்ஷணமும் சேர்ந்திருப்பதேயாம்.

### வாதம் பித்தம் கபம் இம்மூன்றும் தொந்தித்த ஜீரண சுரத்திற்கு சொர்ணபஸ்பம் கொடுக்கும் விதம்:—

சொர்ணபஸ்பம் யுக்தானுசாரமான அளவு, திப்பிலித்தூள் அதற்குச் சமனெடை, தேன் விராகனெடை-1 இம்மூன்றையும் கலந்து கொடுத்து அதன் மேல் சதுர்தேசாங்க கஷாயமாகிலும், அஷ்டதசாங்க கஷாயமாகிலும் குடிக்கக் கொடுக்கவேண்டும்.

## சதுர்தேசாங்க கஷாயம்

குமிளம்வேர், முன்னைவேர், பாதிரிவேர், வாகைவேர், பேராமுட்டிவேர், நெரிஞ்சிவேர், முள்ளிக்கத்திரிவேர், கண்டங்கத்திரிவேர், சிறுபூளைவேர், குச்சிச்சிராயித்து, துராலப்பை, சிறுதேக்கு, கடுக்காய்த்தோல், பேய்ப்புடல் இவை வகையொன்றுக்கு விராகனெடை முக்கால் இவற்றைச் சிதைத்து இரண்டுசேர் தண்ணீர் விட்டு எரித்து எட்டிலொரு பாகமாகக் காய்ச்சி அதில் திப்பிலிதூள் விராகனெடை-½ போட்டுக் குடிக்கக் கொடுக்கவும்.

### அஷ்டதசாங்க கஷாயம்

மேற்படி சதுர்தேசாங்க கஷாயத்திற்கண்ட பதிஞன்கு வகைச் சரக்குகளுடனே கஸ்தூரிமஞ்சள், கடுக்காய்ப்பூ, கோஷ்டம், வெட்பாலையரிசி ஆக வகை 18-ம் வகை யொன்றுக்கு விராகனெடை-½ இவற்றை மேற்சொல்லியபடி கஷாயம் செய்து கொடுக்கவும்.

### வாதம், பித்தம், கபம் இம்மூன்றும் சம்பந்த ஜீரணசுர லக்ஷணம்:

வாத ஜீரணசுர லக்ஷணம், பித்த ஜீரணசுர லக்ஷணம், கப ஜீரணசுர லக்ஷணம் இம்மூன்றும் சேர்ந்திருப்பதேயாம்.

### ஆகெந்துக சுரம்

அபிசாரத்தினுல் அல்லது அபிசாபத்தினுல் அல்லது பயத்தினுல் அல்லது விஷத்தினுல் அல்லது விஷையத்தினுல் அல்லது கோபத்தினுல் அல்லது காமத்தினுல் அல்லது சோகத்தினுல் அல்லது பேய் பிசாசின் பயத்தினுல் உண்டாகும் சுரமாம். இவ்விதமுண்டான சுரத்திற்கு ஆகெந்துகசுர மென்று பெயர். அபிசாரமென்பது சூனியம். அபிசாபமென்பது முறைப்பாடு.

### மேற்படி ஆகெந்துக சுரத்திற்கு சொர்ணபஸ்பம் கொடுக்க அனுபானம்:—

முன்னர் சொர்ணபஸ்பம் யுக்தானுசாரம்கொடுத்து பின்னர் அந்தச் சுரமானது தனித்தனி வாதகுணமதிகரித்ததா? பித்தகுணமதிகரித்ததா? கபகுணமதிகரித்ததா? வென்றும் அல்லது இம் மூன்றில் இரண்டிரண்டின் தொந்தகுண முள்ளதாவென்றும் நிதானித்து அதற்கேற்றபடி அல்லது அவையவைகளுக்கேற்றபடி மேற்சொல்லிய கஷாயம் கொடுக்கவேண்டும். இன்னும் அபிசாரத்தினுல் அல்லது அபிசாபத்தினுல் உண்டான ஜன்னிக்கும் சுரத்திற்கும் ஓம முதலிய சாந்திகள் செய்விக்கவேண்டும். பயத்தினுல் உண்டா

கிய சுரத்திற்கு தானம், ஜெபம், நல்லோர்கள் போசனம் செய்விக்கவேண்டும். விஷத்தினால் வந்த சுரத்திற்கு கீழ்க்காணும் விஷ அநுபானம் கொடுக்கவேண்டும். முன்னர் விஷபேதங்களைத் தெரிந்து செய்ய வேண்டும்.

விஷ பேதங்களாவன:

விஷமானது ஸ்தாவரம், ஜங்கமம், கிரித்திரமம் என மூன்றுவிதப்படும். ஸ்தாவர விஷமென்பது: பாஷாணம் பச்சைநாபி முதலிய விஷ கெர்ப்பங்களால் உற்பத்தியாகிறது. ஜங்கமவிஷமென்பது: ஜந்துக்களினாலுண்டாகிறது. கிரித்திரம விஷமென்பது: மருந்தீடு முதலிய பிரயோகங்களினால் நேரிடுகிறது.

இம் மூன்று விஷத்திற்கும் விஷ அநுபானம்:—

சொர்ணபஸ்பம் யுக்தானுசாரம் கொடுத்து அதன் மேல் மண்டூகபரணி கிருதம் அல்லது மலடிவந்தியா சிகிக்ஷா கல்யான கிருதம் கொடுக்கவும். கிரித்திரம விஷத்திற்கு மாத்திரம் முதலில் வாந்திக்குக்கொடுத்து மறுநாள் பேதிக்குக்கொடுத்து மூன்றாம்நாள் மருந்து கொடுக்கவேண்டும்.

## மண்டூகபரணி கிருதம்

வல்லாரைச்யிலைச்சார் சேர்-4, பசுவின் பால் சேர்-4, பசுவின் நெய் சேர்-2, அவுரிவேர்க் கஷாயம் சேர்-2, இளநீர் சேர்-2, தண்ணீர்விட்டான்கிழங்குச்சார் சேர்-2, கரும்பு சார் சேர்-2 இவைகளையெல்லாம் ஒரு பானையில்விட்டு சுக்கு, திப்பிலி, மிளகு, கடுக்காய்த் தோல், தான்றிக்காய்த்தோல், நெல்லிமுள்ளி, லவங்கப் பட்டை, லவங்கப்பத்திரி, சிறுநாகப்பூ, ஏலம், கிராம்பு, சாதிக்காய் இவை வகையொன்றுக்கு விராகனெடை-2 இவற்றை பசுவின் பாலினால் மெல்லிதாக அரைத்து மேற்சொல்லிய சார் வகைகளிற் கலந்து காய்ச்சி

மெழுகு பதத்தில் இறக்கிக்கொள்ளுகிறது, ஸ்தாவர விஷங்களுக்கு தேங்காய்ப்பால் சேர்-½, கடுக்காய்த் தூள் விராகனெடை-2½ இவ்விரண்டையும் சேர்த்து முன்னர் பேதிக்குக் கொடுத்து பின்பு சொர்ண பஸ்பம் யுக்தானுசாரத்திற்கு இரட்டிப்பு மேற்படி கிருதத்துடன் சேர்த்துக் கொடுக்கவும். கிருதத்தின் அளவு: இரண்டு விராகனெடை முதல் 5-விராகனெடை வரையில் முதல் நாள் பேதியாகாவிட்டால் மறுநாளும் பேதிக்குக் கொடுத்து மூன்றும்நாள் மேற்சொன்னபடி அவிழ்தம் கொடுக்க வேண்டும். பேதியாகாதவரையில் மருந்து கொடுக்கலாகாது.

இவ்விதம் இரண்டு வேளையும் அரைமண்டலம் கொடுத்தால் முன் கண்டரோகம் சொஸ்தமாகும்.

## மலடிவந்தியா சிகிக்ஷா கல்யாண கிருதம்

கைப்புக்குமட்டிவேர், கடுக்காய்த்தோல், தான்றிக்காய்த்தோல், நெல்லிமுள்ளிதோல், ரேணுகம், வால்மிளகு, செம்பைநாத்திக்கட்டை, முசுமுசுக்கைவேர், மூக்குத்திப்பூண்டுவேர், சிறுபூளைவேர், மரமஞ்சள், விரலிமஞ்சள், கிரந்திதகரம், நன்னாரிவேர், மரவள்ளிக்கிழங்கு, கௌவுளாவேர், ஏலம், ஏலக்காய், மந்திஷ்டி, மாதுளம்பழம், வாய்விளங்கம், கோஷ்டம், மலாக்கா சந்தனம், செஞ்சந்தனம், தாளிசபத்திரி, கண்டங்கத்திரிவேர், முள்ளிக்கத்திரிவேர், முல்லைப்பூ, நீலோற்பலம், சிறுநாகப்பூ, சாதிக்காய், சவுதவேர், தாமரைக்கிழங்கு, வெட்டிவேர், விலாமிச்சவேர், திராக்ஷைரசம், தழுதாழைவேர் ஆக வகை 37-ம் வகையொன்றுக்கு பலம்-1 இவற்றுள் சிதைக்க வேண்டியவைகளைச் சிதைத்தும் மற்றவைகளையும் சேர்த்து ஒரு பாண்டத்தில் போட்டு அதில் 40-சேர் தண்ணீர்விட்டு ஒருநாள் ஊறவைத்து மறுநாள் அதை அடுப்பேற்றி தீபாக்கினியாக எருமுட்டையால் எரித்து 10-சேர் கஷாயமாக

இறக்கி ஒரு பாத்திரத்தில் வைத்துக்கொள்ளுகிறது. வேறே பசுவின் பால் கலக்காமல் ஒரே பசுவின் பால் சேர்-5, கரும்பு ரசம் சேர்-5, ஒரு நிறமான பசுவின் நெய் சேர்-5 இவைகளையெல்லாம் மேற்சொல்லிய கஷாயத்துடன் சேர்த்து நெய் காய்ச்சுகிற பாத்திரத்தில் விட்டு மேற்சொல்லிய 37-வகையும் வகையொன்றுக்கு ஒரு விராகனெடை, பச்சைக்கற்பூரம் விராகனெடை-1, குங்குமப்பூ விராகனெடை-1 ஆக 39-சரக்குகளையும் பசுவின்பால் விட்டு மெல்லிதாக அரைத்து முன் சித்தப்படுத்தி வைத்திருப்பதில் கரைத்து தீபாக்கினியாக காட்டு எருமுட்டையால் எரித்து மெழுகு பதத்தில் இறக்கி வடிக்கட்டி இஷ்டதேவதையை ஆராதனையோடு பூசைசெய்து நெய்யைப் பத்திரப்படுத்தவும். இதை வேளையொன்றுக்கு விராகனெடை-2 முதல் விராகனெடை-4 வரையில் சொர்ணபஸ்பம் யுக்தானுசாரம் கலந்து இரண்டு வேளையும் கொடுக்கலாம்.

மேற்படி கிருதத்தினால் தீரும் நோய்கள் :—

உன்மாதம், அபஸ்மாரம், சுரம், இருமல், உடம்பு வற்றல், அக்கினிமந்தம், க்ஷயரோகம், வாதரோகம், சளி, பீனிசம், முறைக்காய்ச்சல், இரண்டாம் முறை சுரம், தினசுரம், சாதுர்த்திகசுரம், வாந்தி, மூலரோகம், நீர்ச்சுருக்கு, மூத்திரரோகம், உடம்பு வீக்கம், உடம்பு அரிப்பு, சொரி பாண்டு, ஸ்தாவரவிஷம், ஜங்கமவிஷம், கிருத்திரம விஷம், பேயினால் புத்தி கஷ்டமாயிருத்தல், பெண்களுக்கு உதிர சம்பந்தமான யோனிச்சூலை, கடிசூலை, உதிரசூலை, மேகசூலை இவைகள் எல்லாம் நிவாரணமாகும். இன்னும் அடிக்கடி பிள்ளைபிறந்து இறந்து போகிற கருப்பை துர்ப்பலப்பட்ட ஸ்திரீகளுக்கு இந்த அவுஷதங்கொடுத்து அனேகருக்கு அவ்விததோஷம் நீங்கி கருப்பை பலப்பட்டுப் பின்பு பிறந்த பிள்ளைகள் அனேகம் கருப்பச்சிக்க ஜீவிகளாயிருக்கின்றன.

மலடியாய்ப்போகிற பெண்களுக்கு இந்த கிருதங் கொடுத்தால் கருப்பந்தரித்து பிள்ளைபிறந்து சுக ஜீவியாயிருக்கும். அப்படியே பிள்ளைக்கு இந்த நெய் கொடுத்தால் புத்தி ஞாபகசக்தி ஆயுள்விருத்தி ஆகிய வையுண்டாகும். இலட்சுமீ கடாட்சமு முண்டாகும். பாவம், பூதம் இவையெல்லாம் நிவாரணமாகும். இந்த நெய் உஞ்சவனமருந்துகளில் சிரேஷ்டமென்றறிய வும். இந்த முறையில் சேர்க்கப்பட்ட நெய்யும் பாலும் கன்றுக்குட்டி இருக்கிற பசுவினதா யிருக்கவேண்டும்.

மேற்கண்டபடி மருந்து கொடுத்து
அப்பியங்க ஸ்நானஞ் செய்கிற விபரம்:—

அரக்குத் தைலம் நல்ல பக்குவமாய்ச் செய்து அதனுல் ஸ்நானம் செய்து வருகிறது.

வாதசுரமுதல் விசோத்பன்னசுரம் வரையிலுள்ள எட்டுவித சுரமும் மேற்சொல்லிய அனுபானங்களினுல் அல்லது வேறு அனுபானங்களினுல் சொஸ்தமாகாமற் போனுல் கீழ்க்காணும், சுதர்சன சூரணம் அரக்குத் தைலம் ஆகிய இவைகள் செய்து உபயோகிக்கலாம்.

சுதர்சன சூரணம்

கடுக்காய்த்தோல், தான்றிக்காய்த்தோல், நெல்லி முள்ளி, கஸ்தூரிமஞ்சள், மரமஞ்சள், கண்டங்கத்திரி வேர், முள்ளிக்கத்திரிவேர், மஞ்சள், சுக்கு, திப்பிலி, மிளகு, கண்டத்திப்பிலி, மரள்கிழங்கு, சீந்திற்கொடி, தூராலெப்பே, கடுகுரோகணி, பற்பாடகம், கோரைக் கிழங்கு, விலாமிச்சம்வேர், வேப்பம்பட்டை, மிளகரணை வேர், அதிமதுரம், வெட்பாலையரிசி, ஓமம், கார்போக அரிசி, சிறுதேக்கு, முருங்கைவிதை, வசம்பு, லவங்கப் பட்டை, கிரந்தித்தகரம், வெட்டிவேர், மலாக்காசந்த னம், அதிவிடையம், சிற்றுமுட்டிவேர், பேராமுட்டிவேர், மூக்குத்திபூண்டுவேர், சிறுபூளைவேர், வாய்விளங்கம், அக்கிராகாரம், சித்தரமூலம், தேவதாரம், செவியம்,

பேய்ப்புடல், கிராம்பு, மூங்கிலுப்பு, கோஷ்டம், லவங்கப்பத்திரி, தாளிசப்பத்திரி, சாதிபத்திரி, ஏலம் வகையொன்றுக்கு விராகனெடை-1, குச்சிச்சிராயித்து விராகனெடை-25 இவைகளையெல்லாம் காயவைத்து, மெல்லிதாக இடித்து வடிக்கட்டி காற்றுப்படாத விடத்தில் ஒரு பாத்திரத்தில் வைத்துக்கொள்ளவும். இந்தச் சூரணம் 2½-விராகனெடை முதல் 5-விராகனெடை வரையில் குளிர்ந்த ஜலத்திற் கரைத்துக் கொடுக்கவும்.

சுதர்சன சூரணத்தினால் தீரும் வியாதிகள்:—

பித்தப்பிரகோபம், கபப்பிரகோபம், வாதப்பிரகோபம், வாதசுரம், பித்தசுரம், கபசுரம், வாதபித்தசுரம், பித்தகபசுரம், சன்னிபாதசுரம், அபிகாதவிஷம், பூதசுரம், சீதசுரம், அஸ்திகதசுரம், ஏகாயிகசுரம், துவாதயிகசுரம், திரயாயிகசுரம், சதுர்க்கசுரம், பதினைந்து நாளைக்கொருதரம் வருகிறசுரம், மாதம் ஒருதரம் வருகிறசுரம், சொஸ்தமாகிச் சொஸ்தமாகித் திரும்பித் திரும்பி வருகிறசுரம், இன்னும் மனோகதசுரம், மோகம், மயக்கம், தாகம், திகரடி இருமல், உடம்பு வெளுப்பு, மார்வலி, காமாலை, பிரடிவலி, முதுகுவலி, இடுப்புவலி, விலாவலி, முழங்கால்வலி இவைகள் எல்லாம் சொஸ்தமாகும். விஷ்ணு சக்கரமானது இராக்ஷதர்களைச் சம்மாரம் செய்ததுபோல, இந்தச் சூரணமானது ஸமஸ்த சுரங்களையும் நிர்மூலமாக்குகின்றபடியால் இதற்குச் சுதர்சனசூரணமெனப் பெயரிடப்பட்டது.

இந்தச் சூரணத்தினால் மேற்சொல்லிய வியாதிகள் அனேகருக்குச் சொஸ்தமாகி இது அனுபோகப்பட்டது.

இந்த சுதர்சன சூரணத்திற்குப் பத்தியம்

கத்திரிப்பிஞ்சு, புடலம்பிஞ்சு, முருங்கைப்பிஞ்சு, அரைக்கீரை, மணத்தக்காளிவற்றல், தூதுவளையிலை, தூதுவளைவற்றல் இவைகளெல்லாம் ஆகும். புளி, நல்

வெண்ணெய், நெய், பால், தயிர், கடுகு, உப்புக்கண்டம், மீன், உளுந்து இவைகளாகாது. வெள்ளாட்டு சூப்பு, கௌதாரி, காடைசூப்பு இவைகள் சேர்த்துக் கொள்ள லாம். சுரம் நின்ற பிறகு பசுவின் மோர், கால் புளி சேர்த்துக்கொள்ளலாம். முற்றும் சௌக்கியமான பிற்பாடு அரக்குத் தைலத்தால் அப்பியங்க ஸ்நானஞ் செய்து சகலமான பதார்த்தமும் சேர்த்துக்கொள்ள லாம். இந்த அவுஷதஞ் சாப்பிட்ட பிறகு ஒருபோதும் சுரம் வராது.

## அரக்குத் தைலம்

கொம்பரக்கு நடுவிலிருக்கும் குச்சியை நீக்கியது சேர்-4, தூள் செய்து ஒருபாத்திரத்திற்போட்டு அதில் 16-சேர் தண்ணீர் விட்டு வெள்ளிலோத்திரம்பட்டை அதில் விராகனெடை-5 சேர்ந்தால் உத்தமம். அது அகப்படாவிட்டால் பாதக மில்லை. அடுப்பேற்றிக் காய்ச்சி 4 சேர் கிஷாயமாக இறக்கி அதில் ததி மஸ்து சேர்-16, நல்லெண்ணெய் சேர்-4 இவை மூன்றும் கலந்து இவை கொள்ளும்படியான வேறுபானையி லூற்றி அதில் மரள்கிழங்கு, கோரைக்கிழங்கு, தேவ தாரம், கடுகுரோகணி, அதிமதுரம், அசுவகெந்திவேர், சிற்றரத்தை, ரேணுகம், பெருஞ்சீரகம், சந்தனத்தூள், கோஷ்டம், விரலிமஞ்சள் ஆகப் பன்னிரண்டு வகை யும் வகை 1-க்கு விராகனெடை-4, பசுவின் பால் சேர்-4 மேற்படி சரக்குகளைக் கொஞ்சம் பால் விட்டரைத்து முன் சித்தப்படுத்தியதிற் கலந்து தீபாக்கினியாக எரித்து மெழுகு பதமாக இறக்கிப் பத்திரப் படுத்தவும்.

இதனால் ஸ்நானஞ் செய்துவர தீரும் வியாதிகளாவன:—

சுரம், சந்தாபம், தூர்ப்பலம் ஆகியவைகளும், சுர சம் பந்த மல்லது க்ஷயசம்பந்தமானவைகளும் சொஸ்த மாகும். இவையன்றி சுரம் அஸ்தியைப்பற்றி நின்று லும், உடம்பு சூம்பிப்போ யிருந்தாலும் இந்த அரக்குத்

தைலம் விராகனெடை-2, நெய்ச்சுண்டி சார் விராக னெடை-1, வெள்ளைப்பூண்டு தைலம் விராகனெடை-1 இந்த மூன்றும் அரைக்கால் சேர் புளித்த காடியில் சேர்த்துச் சாப்பிடத் தீரும்.

ததி மஸ்து எடுக்கும் விபரம்:—

பசுவின் தயிர் வெள்ளைத்துணியிற்கட்டி தொங்க வைத்து அதற்குக் கீழ் ஈயம்பூசினபாத்திரம் வைத்து முடிச்சியிலிருந்து சொட்டுகிற ஜலத்தைச் சேகரித்துக் கொள்ளவும். இவ்விதம் தயிரிலிருந்து எடுத்த ஜலத் திற்குத் தான் ததி மஸ்து யென்று பெயர்.

கபம் கட்டிகட்டியாக விழுகிறதற்கு
சொர்ணபஸ்பம் கொடுக்கிற அனுபானம்:—

சொர்ணபஸ்பம் யுக்தானுசாரம், மிளகு, சீரகம் இவ்விரண்டையும் சமபாகமாகச் சேர்த்து ஒரு துணி யில் முடிந்து நெய்யில் நனைத்து முன் சொன்னபடி எரித்து பஸ்பம் செய்து அந்த பஸ்பம் சொர்ணபஸ் பத்திற்கு இரட்டிப்பு இவ்விரண்டையும் நெய்யில் மத் தித்துக் கொடுத்து அதற்குமேல் கடுக்காய் விராக னெடை 2, சுக்கு விராகனெடை-2, சுண்டைக்காய்ச் சமூலம் விராகனெடை-6 இவை மூன்றும் சேர்த்து இரண்டுசேர் தண்ணீர்விட்டு எட்டில் ஒன்றாகக் காய்ச்சி அதில் தேன் விராகனெடை-1, திப்பிலித்தூள் விராக னெடை-½ சேர்த்து உள்ளுக்குக் கொடுக்கவும். கபக் கட்டி விழுகிறது சொஸ்தமாகும்.

அரோசிகத்துக்குச்
சொர்ணபஸ்பம் கொடுக்கிற அனுபானம்:—

மேற்படி வியாதியஸ்தர்களுக்கு மேற்படி பஸ்பம் கொடுக்குமுன் துருஞ்சிப்பழச் சுளைகள் தேவை யானவை அந்தப் புளிப்புக்குத் தகுந்த இந்துப்புத் தூள் அவ்விதமே சுக்குத்தூள் இவை மூன்றும் சேர்த்து நெய் தாளிப்பு செய்து அதை வாயில் வைத்து

அடக்கி அந்த ரசத்தை உட்கொண்டு சக்கையைத் துப்பிவிடும்படி செய்வித்துப் பின்பு சொர்ணபஸ்பம் யுக்தானுசாரம் கொடுத்து மறுபடியும் முன்செய்தது போல செய்விக்கவும்; இப்படி சிலதடவைகள் செய்ய மேற்படி வியாதி தீரும்.

பேதிகட்ட

சொர்ணபஸ்பம் கொடுக்கிற அனுபானம்:—

சொர்ணபஸ்பம் யுக்தானுசாரம் கொடுத்து அதற்குமேல் வச்சகாதி கஷாயமாகிலும் தாடிமி புட பாகமாகிலும் குடசப்புட பாகமாகிலும் கொடுக்கவும். இதில் நிற்காமற் போனால் மரீச லேகியத்துடனாகிலும் மாதுளம்பழ வடகத்துடனாகிலும், தாளிச வடத்துட னாகிலும் பஸ்பத்தைச் சேர்த்து கொடுக்க பேதிகட்டும். ஆசனம் வெளியில் தள்ளியிருந்தால் ஜாங்கேடிகிரு தத்துடன் சேர்த்துக் கொடுக்கவும்.

## வச்சகாதி கஷாயம்

வெட்பாலையரிசி, அதிவிடையம், காய்ந்த வில்வக் கொழுந்து, விலாமிச்சவேர், வெட்டிவேர், கோரைக் கிழங்கு, சிறுநாகப்பூ, கிராம்பு இவைகள் வகைக்கு விராகனெடை-1¼, இவற்றை பொன்னிறமாக வறுத்து அதில் இரண்டு சேர் கழுநீர் சேர்த்து தீபாக்கினியாகத் தீபோட்டு ¼ சேர் இறக்கி அந்த கஷாயத்தை வேறொரு சட்டியில் முறித்து அதனுடன் தேன் விராகனெடை-1 சேர்த்துக் கொடுக்கிறது. சுரம் கூடவிருந்தால் சிறு நாகப்பூவிற்குப் பதிலாகப் பொன்முசுட்டை சேர்த்து கஷாயஞ் செய்து கொடுக்கத் தீரும்.

## தாடிமி புடபாகம்

நன்றாய்ப் பழுத்த மாதளம்பழம் ஒன்று கொண்டு வந்து அதன்மேல் வேப்பிலைக் கொழுந்தாகிலும், நாகைக் கொழுந்தாகிலும், மாங்கொழுந்தாகிலும் கொண்டுவந்து அதற்குமேல் நூலினாற்கட்டி அதற்கு

மேல் இரண்டு விரற்கனடைக் கனம் சாணிதடவி காய வைத்து அந்த உண்டையைச் சுடுகிறது. அந்த உண்டையின்மேல் இருக்கப்பட்ட சாணி சிவந்து வந்தால் மாதளம்பழம் பக்குவமாச்சுதென்று அறியவும். உடனே அதையெடுத்து அதன்மேல் இருக்கப்பட்ட சாணியும் தழையின் கொழுந்தும் எடுத்துவிட்டு அந்தப் பழத்தைப் பிழிந்த ரசம் அரைக்கால்சேர் ஒரு பாத்திரத்தில்விட்டு அதில் தேன் விராகனெடை-1 விட்டு கலந்து கொடுக்கிறது. ஒவ்வொரு வேளைக்கு வெவ்வேறு புடம்போட்டு அதை ரசம் எடுத்துக் கொடுக்கிறது.

## குடசப் புடபாகம்

வெட்பாலைப் பட்டையைத் தண்ணீர்விட்டு அரைத்து சர்க்கரைநாரத்தம்பழத் தளவெடுத்து உண்டை செய்துக் கொண்டு அதற்குமேல் மேற்சொல்லியபடி தழைகளைச் சுத்தி சுட்டுக்கொண்டு ரசம் பிழிந்து முன்சொல்லிய மாதளம்பழம் விழுக்காடு செய்து உள்ளுக்குக் கொடுக்கிறது.

## மரீச லேகியம்

மிளகு சேர்-¼, பொக்குசீரகம் சேர்-¼, அபின் விராகனெடை-5, சீரகம், மிளகு இவ்விரண்டயும் பொன்னிறமாக வறுத்து அபினியையும் சேர்த்து பின்பு விடத்தலைப்பட்டை சேர்-1 நசுக்கிச் சட்டியில் போட்டு நன்ருய் வறுத்து 4-சேர் கழுநீர் விட்டு மெது வாய் எரித்து ஒரு சேராக சுண்டவைத்து வடிக்கட்டின கஷாயத்தில் கொஞ்சம் விட்டு முன் மூன்று சரக்கையும் அரைத்து மேற்படி கஷாயத்தில் கரைத்து அடுப்பேற்றிப் பக்குவமாக எரித்து கெட்டியானவுடன் தேன் சேர்-¼ விட்டு இறக்கிக்கொள்ளவும். அந்த லேகியத்தை ஒரு பாத்திரத்தில் எடுத்துவைத்துப் பத்திரப்படுத்தவும். இந்த லேகியம் அரை விராக

னெடை முதல் ஒரு விராகனெடை வரையில் மருந்துடன் சேர்த்துக் கொடுக்கவும்.

## மாதளம்பழ வடகம்

ஜாதிக்காய், லவங்கம், சிறுநாகப்பூ, அதிவிடையம், முள்ளிலவம்பிசின் இவைகள் சம பாகமாக நல்லெண்ணெயில் வெவ்வேருக வறுத்து யெல்லாவற்றையும் தூள் செய்து அந்தத் தூளுக்கு நான்கிலொருபாகம் அபின் சேர்த்து மறுபடியும் நன்ருய்த் தூள் செய்து வைத்துக்கொள்ளவும். பின்பு முக்காற் பழமாக இருக்கிற மாதளம்பழத்தை 4-பிளப்பாகப் பிளந்து மேற்சொல்லிய சரக்குகளை அந்தப் பழத்தில் ரொப்பி மேற்சொல்லியபடி கொழுந்துகளைச் சுத்தி சாணிதடவி சுட்டு எடுத்து அந்த கவசத்தை நீக்கி மேற்படி பழத்தை உள்ளேவைத்த சரக்குகளுடன் அரைத்து வடகம் செய்து வெய்யிலில் காயவைத்து ஒரு பாத்திரத்தில் பத்திரப்படுத்தி மருந்து கொடுக்கும்போது வறுத்த கிராம்புத்தூள் விராகனெடை-1, கழுநீர் தண்ணீர் சேர்-½ இவ்விரண்டும் கலந்து அரைக்கால் சேர் கஷாயமாகக் காய்ச்சி இறக்கி அதில் மாதளம் பழ வடகம் விராகனெடை 1 சேர்த்துக் கொடுக்கவும். கிராம்பு கஷாயம் ஒவ்வாவிட்டால் தயிரில் கலந்து கொடுக்கவும்.

## தாளிச வடகம்

தாளிசபத்திரி பலம்-1, மிளகு பலம்-1, செவியம் பலம்-1, திப்பிலி பலம்-2, கண்டதிப்பிலி பலம்-2, சுக்கு பலம்-3, லவங்கப்பட்டை பலம்-¼, லவங்கப்பத்திரி பலம்-¼, ஏலம் பலம்-¼, சிறுநாகப்பூ பலம்-¼, விலாமிச்சம்வேர் பலம்-¼ இவற்றை வெய்யிலில் காயவைத்து இடித்து வஸ்திரகாயம் செய்து சீனக்கற்கண்டு பலம்-45 பாகுசெய்து பாகுபதத்தில் மேற்சொல்லிய சூரணங்களைக் கொட்டி நன்ருய்க்கடைந்து சமமாகிய

பலகையின்மேல் ஊற்றி முக்கால் அங்குல பிரமாண வில்லைசெய்து பத்திரப்படுத்தவும். இதில் 2½-விராகனெடை பொடிசெய்து தேன்விட்டு மத்தித்து அதில் மருந்து கலந்து கொடுக்கவும்.

## ஜாங்கேடி கிருதம்

புளியாரைச்சார் சேர்-1, காய்ந்த இலந்தைப்பழத்தூள் சேர்-1, ஒரு பாத்திரத்தில் போட்டு தண்ணீர் வார்த்து ஒருநாள் ஊறவைத்து மறுநாள் தீப்போட்டு ஒரு சேர் கஷாயமாக இறக்கி பசுவின்பால் சேர்-2, பசுவின் நெய் சேர்-1 இந்த நான்கும் ஒன்ருய் ஒரு பாத்திரத்தில் விட்டு சுக்கு பலம் ஒன்றை பசுவின் பால் சேர்-1 விட்டரைத்து முன் சித்தப்படுத்தினதிற் கலந்து அடுப்பேற்றி மெதுவாயெரித்து மெழுகு பதத்தில் இறக்கிக்கொள்ளவும். இரண்டு முதல் ஐந்து விராகனெடை வரையில் இந்த நெய்யில் மருந்து கலந்து கொடுக்கவும்.

முத்துசாமி தீக்ஷிதர்,

## சொர்ணமால்ய வசந்த மாத்திரை

மடல்துத்தம் கொண்டுவந்து பொன்னுருக்கும் குகையிற்போட்டு நெருப்பில் வைத்து துருத்தியால் ஊதுகிறது. அது சிகப்பானவுடன் கோமூத்திரத்திற் போட்டு இந்தப் பிரகாரம் மூன்று தடவை ஊதுகிறது பிறகு மூன்று தடவை எலுமிச்சம்பழ ரசத்தில் மேற் சொல்லியபடிக்குப் போடுகிறது. இந்தப் பிரகாரஞ் செய்தால் மடல்துத்தம் சுத்தியாகிறது.

## முத்துச் சுத்தி

எலுமிச்சம்பழ ரசம், புளிப்புத் தயிர் இவை இரண்டிலொன்றில் இரண்டு ஜாமம் ஊறப்போட்டு அதில் இரண்டு உப்பு போட்டால் முத்துச் சுத்தியாகிறது. எலுமிச்சம்பழ ரசத்தில் லிங்கமொரு ஜாமம் அரைத்தால் லிங்கம் சுத்தியாகிறது.

## மேற்படி மாத்திரை

சொர்ணபஸ்பம் விராகனெடை-1, முத்து விராகனெடை-2, லிங்கம் விராகனெடை-3, மிளகு விராகனெடை-4, மடல்துத்தம் விராகனெடை-8, பசுவின் வெண்ணெய் விராகனெடை 1 இவைகளெல்லாம் கல்வத்திலிட்டு எலுமிச்சம்பழ ரசத்தை விட்டரைக்கிறது.

அரைக்கிறதென்றால் சாஸ்திரப்படி செய்கிற வழக்கம் எப்படியெனில்: —

முதல் லிங்கம் விராகனெடை-3 நிறுத்துக்கொண்டு எலுமிச்சம்பழச்சாற்றால் ஒரு ஜாமமரைத்து அந்த லிங்கத்தை வேறே எடுத்து வைத்துக்கொள்ளுகிறது. லிங்கம் அரைத்த கல்வத்தில் இரண்டு விராகனெடை முத்து எலுமிச்சம்பழச் சாற்றால் ஒரு ஜாமமரைத்து அதற்குப் பிறகு அந்த முத்துடன் சொர்ணபஸ்பம் விராகனெடை-1, லிங்கம் விராகனெடை-4, மிளகு விராகனெடை-8, சுத்தி செய்த மடல்துத்தம் விராகனெடை-1 பசுவின் வெண்ணெயிட்டு எலுமிச்சம்பழச் சாற்றால் அந்த வெண்ணெயின் சம்பந்தம் போகிற வரையில் நான்குநாளாவது ஐந்துநாளாவது அரைத்து அதற்குமேல் மாத்திரை செய்து நிழலில் உலரவைத்து மூங்கில் டப்பியில் அடக்கம் செய்து வைக்கவும்.

சொர்ணமால்ய வசந்த மாத்திரையின் குணம்:

ஜீரணசுரம் நீண்டகாலமாக இருக்கப்பட்டது. அதிசாரம், க்ஷயரோகம், விசேஷமாய் பித்தக்ஷயம், மேகக்ஷயம், மேகரோகம், இரத்தபித்தம், வாந்தி, விக்கல், இருமல், பிறதறம், அக்கினிமந்தம் இவைகளெல்லாம் அந்தந்த வியாதிக்குத் தகுந்தபடி அனுபானம் செய்து இந்த அவுஷதம் ஒரு பணவெடை கொடுத்தால் சொஸ்தமாகும்; இரத்தபுஷ்டி யுண்டாகும்; இளைத்த உடம்பு பெருக்கும்; சரீரத்தின் வளர்ச்சி குறைந்திருந்தால் இந்த அவுஷதம் கொடுத்தால் சரீரம் வளரும்;

கெற்பமில்லாதவர்களுக்கு திரேக நிலைமைப்பார்த்து அனுபானமாகக் கொடுத்தால் கெற்பமாகும். இந்த அவுஷதம் கண்ணுக்கு அனுபான விசேஷங்களால் கண்ணுக்கு உரைத்துப் போட்டால் காசந்தவிர மற்ற வியாதிகளெல்லாம் சொஸ்தமாகும்.

சொர்ணமால்ய வசந்த மாத்திரை கொடுக்க அனுபானம்:—

சொர்ணமால்ய வசந்த மாத்திரையினால் போகப் பட்ட வியாதிகளில் ஜீரணசுரம், அதிசாரம், க்ஷயம், வாந்தி, இருமல், அக்கினிமந்தம் இந்த உபத்திரவங் களுக்கெல்லாம் சொர்ணபஸ்பம் கொடுக்க எந்தெந்த அனுபானம் சொல்லியிருக்கிறதோ அந்தந்த அனுபா னத்துடன் சேர்த்துக் கொடுக்கிறது. பித்தக்ஷயம், மேகக்ஷயம், மேகரோகம், விக்கல், பிறதறம் இந்த வியாதிகளுக்கு வெவ்வேறாய் அனுபானம்.

பித்தக்ஷயத்துக்கு சொர்ணமால்ய வசந்த மாத்திரை

வாசாகண்டம் என்கிற அவுஷதஞ் செய்து அதற் குச் சொர்ணமால்ய வசந்த மாத்திரை யுக்தானுசாரம் சேர்த்துக்கொடுக்கிறது. வாசாகண்டம் பொறுக்கா மற் போனால் ஏலாதி குளிகைசெய்து அவுஷதம் முதல் தேனிலாகிலும், நெய்யிலாகிலும், வெண்ணெயிலாகி லும் உபத்திரவக்காரனுக்குப் பொறுக்கும்படியாகக் கொடுத்து, மேலுக்கு அந்தக் குளிகை உள்ளுக்குக் கொடுக்கிறது. வாசாகண்டம், ஏலாதிகுளிகை இந்த விரண்டும் செய்கிற விபரம் சொல்லுகிறோம்.

## வாசாகண்டம்

ஆடாதோடைப்பூவுடன் பூச்சிப் புழுவில்லாமல் இலைபொறுக்கிக்கொண்டு சுத்தமாகச் சேர்-12½ நிறுத் துக்கொண்டு அதில் 100-சேர் தண்ணீர்விட்டு 25-சேராக கக் கஷாயம் காய்ச்சி இறக்கிக்கொண்டு அந்தக் கஷா யத்தில் எட்டு சேர் கடுக்காய்த்தோலின் தூள்சேர்த்து திரும்பக்கொஞ்சம் பக்குவம் செய்து அதில் 12½-சேர்

கற்கண்டு தூள்சேர்த்து லேகிய பதமாகக் காய்ச்சி இறக்கிக்கொள்ளுகிறது. பிறகு அதில் திப்பிலித் தூள் பலம் - 2, லவங்கப்பட்டை, லவங்கபத்திரி, ஏலம், சிறுநாகப்பூ இந்த நான்கு வகையும் தூள் செய்து வகையொன்றுக்கு பலம்-1, தேன் பலம்-4 சேர்த்து எல்லாம் ஒரு பாத்திரத்தில் வைத்துக் கொள்ளுகிறது. இதனுடைய அளவு 2½-விராகனெடை முதல் 5-விராகனெடை வரையில் கொடுக்கிறது. இதனால் சொஸ்தமாகிற வியாதி பித்தக்ஷயம், இரத்தபித்தம், இருமல், தெகரடி சொஸ்தமாகும்.

## ஏலாதி குளிகை

காசாயேலம் பலம்¼, லவங்கப்பட்டை பலம்-¼, லவங்கப்பத்திரி பலம்-¼, திப்பிலி பலம்-¼, கற்கண்டு பலம்-1, அதிமதுரம் பலம்-1, பேரீச்சங்காய் விரையன்னியில் பலம்-1, விரையில்லாத திராக்ஷப்பழம் பலம்-1 இந்த எட்டு வகை சரக்குகளையும் மெல்லிசாகத் தூள் செய்து அத்துடன் கெட்டித்தேன் சேர்த்து கொட்டைப்பாக்களவு உருண்டைசெய்து ஒருவேளைக்கு மேற்படி மருந்து கொடுத்து பிறகு இந்த உருண்டை கொடுக்கிறது. இதனால் வியாதிகள் சொஸ்தமாகும். பித்தக்ஷயம், இரத்தபித்தம், இருமல், தெகரடி, பித்த சம்பந்த சுரம், விக்கல், வாந்தி, மூர்ச்சை, மயக்கம், பிரமேகம், இரத்தம் விழுப்பட்டது, விலாமுதுகுவலி, அரோசிகம், ஈரக்குலைவலி, வாய்வு, உஷ்ணத்தினால் தொண்டைக் கம்முகிறது, ஈரல் வெடித்து அதனால் வரப்பட்ட க்ஷயம், அப்படியே சாமானிய க்ஷயம், சாதாரண க்ஷயம் இவைகளெல்லாம் சொஸ்தமாகும். பிரம்மதேவாங்குசரசம் அப்படியே பூரணசந்திர உதையரசம், காமதேவரசம், பஞ்சபாணரசம் இவைகளெல்லாம் வீரியவிருத்தியா யிருக்கப்பட்ட அவுஷதத்துடன் இந்தக் குளிகை சேர்த்துக் கொடுத்தால் குணமாகும்.

மேகக்ஷயம், மேகரோகம் இரண்டுக்கும் சொர்ணமால்ய வசந்தம்:—

சொர்ணமால்ய வசந்தம் யுக்தானுசாரம், மேலுக்குச் சீந்திற்கொடியின் சாராகிலும், நெக்குரோதாதிச் சூரணமாகிலும் கொடுக்கிறது. இவ்விரண்டின் விவரம் சொல்லுகிறோம்.

## சீந்திற்கோடி ரசம்

சீந்திற்கொடியின் மேற்பிராணியை யெடுத்துவிட்டு உள்ளிருக்கப்பட்ட சார் விராகனெடை-5, தேன் விராகனெடை-1, கோமூத்திர சிலாசத்து பஸ்பம் பணவெடை-2, வெள்ளைத்தாளக பஸ்பம் பணவெடை-2 இவைகளைக் கலந்து உள்ளுக்குக் கொடுக்கிறது. இதனால் இருபது மேகங்களுடன் கூடியிருக்கிற க்ஷயரோகம் சொஸ்தமாகும்.

## நெக்குரோதாதிச் சூரணம்

ஆலம்பட்டை, அத்திவேரின்பட்டை, அரசம்பட்டை, வாகைப்பட்டை, சரக்கொன்றைப்பட்டை, மாம்பட்டை, விளாவேரின்பட்டை, குமிழம்வேர்ப்பட்டை, அதிமதுரம், இலுப்பப்பட்டை, லோதரம்பட்டை, கடலுரிஞ்சிப்பட்டை, விடத்தரப்பட்டை, நீண்டகாலத்து வேப்பம்பட்டை, பேய்ப்புடல், வலம்புரிக்காய், ருபார்ப்வேர், சித்தரமூலம்வேர், புங்கம்பட்டை, காட்டுத்துவரம்பட்டை, கடுக்காய், தான்றிக்காய், நெல்லிமுள்ளி, குமட்டிவேர், சுத்திசெய்த சேங்கொட்டை இவைகளெல்லாம் சம்பாகமாய்ச் சேர்த்து தூள்செய்து வஸ்திரகாயம் செய்துகொள்ளுகிறது. இந்தச் சூரணம் வேளையொன்றுக்கு 2½-விராகனெடை முதல் 5-விராகனெடை வரையில் அதில் தேன் கலந்து சரீர நிலைமைப்பார்த்து அவுஷதஞ் சேர்த்துக் கொடுக்கிறது. மேலுக்குத் திரிபலாதி கஷாயம் கொடுக்கிறது.

## திரிபலாதி கஷாயம்

கடுக்காய், தான்றிக்காய், நெல்லிமுள்ளி இந்த மூன்றும் வகை யொன்றுக்கு 2-விராகனெடை, அதில் 2-சேர் ஜலம்விட்டு எட்டிலொன்ருகக் காய்ச்சி வடிக் கட்டி இறக்கிக்கொண்டு உள்ளுக்குக் கொடுக்கிறது.

## சேங்கோட்டை சுத்தி

புதுச் சேங்கொட்டையை மூக்கை நறுக்கிப் போட்டு செங்கமாவுபோட்டு தேய்க்கிறது. பிறகு ஜலம்விட்டுக் கழுவிக் காயவைத்துக் கொள்ளுகிறது. இதுதான் சேங்கொட்டை சுத்தி.

மேற்படி நெக்குரோதாதிச் சூரணத்திஞல்
சொஸ்தமாகும் வியாதி:—

மேகக்ஷயம், மேகரோகம், இருபதுவகை நீரு ரோகம் யாவும் சொஸ்தமாகும். பிறகு மேகத்திஞல் இரணங்கள் வாராது.

இரத்தபித்தத்தின் லக்ஷணம் :—

இரத்தபித்தம் மூன்றுவிதம் : ஊர்த்துவகதமென் றும், அதோகதமென்றும், உபயகதமென்றும் மூவகை யாம். ஊர்த்துவகதமென்ருல் : இரத்தவாந்தியாகிறது. அப்படியே மூக்கிஞல் இரத்தம் விழுகிறது. அதோகத மென்ருல்: இரத்தபேதி; அப்படியே நீர்த்தாரை வழி யாக இரத்தமிறங்குகிறது. உபயகதமென்ருல்: இவ் விரண்டுவித பேதங்களும் ஒருவிதமாய் இருக்கும்; இதில்,

ஊர்த்துவகத இரத்தபித்தம்

சுகசாத்தியம்; ஏனென்ருல், அந்த உபத்திரவத் திற்குப் பேதிக்குக் கொடுத்து சொஸ்தஞ் செய்யலாம். அப்படியே இந்த ரோகத்துக்குத் தகுந்த அவுஷதம் வெகுசாய் அகப்படும். ஆகையால் சுகசாத்தியம் என்றது.

### அதோகத இரத்தபித்தம்

சொல்ப கஷ்டசாத்தியம், ஏனென்றால், சாமானியமாய் பித்தசன்னி உபத்திரவத்துக்குப் பேதிக்குக் கொடுத்து சொஸ்தஞ் செய்யவேணும். அதோகத இரத்தபித்தம் பித்தசன்னி உபத்திரவமிருந்தாலும் பேதிக்குக் கொடுக்கலாகாது இதனால் ஒருதடவை இரண்டுதடவை இந்த உபத்திரவத்துக்கு வாந்திக்குக் கொடுத்து சொஸ்தம் செய்யவேணும். இதனால் சொல்ப கஷ்டசாத்தியம் என்றது.

### உபயகத இரத்தபித்தம்

அதைவிட கஷ்டசாத்தியம்; ஏனென்றால், வாந்திக்கு பேதிக்குக் கொடுத்து சொஸ்தம் செய்யலாகாது. இந்த இரண்டுவித சிகிச்சையினாலும் சொஸ்தமாகாததினால் கஷ்டசாத்தியம் என்றது.

### ஊர்த்துவகத இரத்தப்பித்தத்திற்குச் சொர்ணமால்ய வசந்த மாத்திரை :—

சொர்ணபஸ்பம் கொடுக்கிற அனுபானஞ் சொல்லிய விதங்களில் இரத்த வாந்திக்கு எந்த அனுபானம் சொல்லியிருக்கிறதோ அந்த அனுபானத்தில் சொர்ணமால்ய வசந்த மாத்திரை கொடுக்கிறது. உள்ளுக்கு அந்த அனுபானப் பிரகாரம் கரும்புச் சாராகிலும், மாதளம்பழச் சாராகிலும் கொடுக்கிறது. அப்படியே பித்த க்ஷயத்துக்குச் சொல்லிய அனுபானத்தில் ஏலாதி குளிகை கொடுக்கிறது அதனால் சொஸ்தமாகாமற்போனால் வாசா ரசம் கொடுக்கிறது.

### வாசா ரசம்

ஆடாதோடைச்சார் விராகனெடை-5 எடுத்துக் கொண்டு கரண்டியைக் காயவைத்து அதில் மேற்படி ரசத்தை விட்டு முறித்துக் கொள்ளுகிறது. அதில் 2-விராகனெடை கற்கண்டு, தேன் விராகனெடை-1 சேர்த்துக் கொடுக்கிறது. ஆடாதோடை மூலிகையா

னது தேவர்களால் சிருஷ்டியாயிருக்கிறது. பிழைக்க வேணுமென்ற ஆசைகொண்ட இரத்தபித்தரோகி, க்ஷயரோகி, காசரோகி, இவர்களெல்லாம் விசனமேன் அடையவேணுமென்று முந்தி வைத்தியர் லோலும்ப ராஜ் என்றிருந்தவரால் சொல்லப்பட்டிருக்கிறது.

மேற்படி ஊர்த்துவகத இரத்தபித்தத்தில் மூக்கின்வழியாய் இரத்தம் ஒழுகுகிறதற்கு நிவர்த்தி :—

நெல்லிமுள்ளித்தோலைப் பசுவின் நெய்யில் வறுத்து பசுவின்பாலினல் அரைத்து உச்சிக்குப்பற்று போடுகிறது; இரத்தம் நிற்கும். இரத்தம் ஒழுகும் போது குளிர்ந்த ஜலம் மூக்கிலிழுக்கிறது. இரத்தம் நிற்காமற்போனல் பசுவின்பாலில் கற்கண்டு சேர்த்து மூக்கிலிழுக்கிறது. இழுத்தால் இரத்தம் நிற்கும். நிற்காதவரையில் திராக்ஷப்பழம் பலம்-½, தண்ணீர் சேர்-½ இரண்டும் சேர்த்துக் காய்ச்சி ஒருபலம் கஷாயமாக இறக்கிக்கொண்டு அதிற் கற்கண்டுத்தூள் விராகனெடை 2 போட்டு ஆறவைத்து உள்ளுக்குக் கொடுக்கிறது. அல்லது கருப்பஞ்சாற்றில் மாதளம்பூச்சார் சர்க்கரை பணவெடை 2 இது இரண்டையும் கலந்து மூக்கிற் பிழிகிறது; இரத்தம் நிற்கும்.

அதோகத இரத்தபித்தத்துக்கு சொர்ணமால்ய வசந்த மாத்திரை

சொர்ணமால்ய வசந்தம், யுக்தானுசாரம், வறுத்த கசகசாத்தூள் ஒருபாகம், கடையிலிருக்கிற காட்டெருமைப்பால் இரண்டுபாகம், கற்கண்டு மூன்றுபாகம் இது மூன்றும் சேர்த்துத் தூள்செய்து அதில் மூன்று விராகனெடை தேன், ஒரு விராகனெடை வெண்ணெய் இவைகளெல்லாம் கலந்து அதில் மருந்து சேர்த்துக் கொடுக்கிறது. மேலுக்கு அறுகம்புல் கிருதம் கொடுக்கிறது. காட்டெருமைப்பால் அகப்படாமற் போனல் கூகைநீர் சேர்க்கிறது.

## அறுகம்புல் கிருதம்

அறுகம்வேர்சார் சேர்-10, நீலோற்பலக் கிழங்கு விராகனெடை-2½, மஞ்திஷ்டி விராகனெடை-2½, முசு முசுக்கைவேர் விராகனெடை-2½, வெட்டிவேர் விராக னெடை-2½, கோரைக்கிழங்கு விராகனெடை-2½, விலா மிச்சம் வேர் விராகனெடை-2½, தாமரைப்பூ கேசர் விராகனெடை-2½ இவைகளெல்லாம் வெள்ளாட்டுப் பாலில் அரைத்த உருண்டையை அறுகம்வேர் ரசத் தில் சேர்த்து அப்படியே வெள்ளாட்டுநெய் சேர் 2½, வெள்ளாட்டுப்பால் சேர்-10, கழுநீர் சேர்-10 இவைக ளெல்லாம் கலந்து ஒருநாள் ஊறவைத்து மறுநாள் தீபாக்கினியாக எரித்து மெழுகுபதமாகக் காய்ச்சி இறக்கிக்கொள்ளுகிறது. இதனுடைய அளவு 2½-விராக னெடைமுதல் 5-விராகனெடை வரையில் உபத்திரவத் தின் பலம் பார்த்து தேகத்தின் பலம்பார்த்து தீபன பலம்பார்த்து அதிகம் அல்லது குறைச்சலாகக் கொடு த்துவருகிறது. இந்தக் கிருதத்தில் மூன்றுவிதமான இரத்தபித்தங்களும் சொஸ்தமாகும். வாந்தி சொஸ்த மாகும். மூக்கினுல் வடிகிற இரத்தம் இந்த நசியத்தி னுல் தீரும். காதினுல் இரத்தம் ஒழுகிக்கொண்டிருந் தால் இந்தக் கிருதம் காதிற்போட்டால் இரத்தம் விழு கிறது சொஸ்தமாகும். கண்ணிலும் அப்படியே; ஆசன வழியாய் வருகிற இரத்தத்துக்கு இந்தக் கிருதம் அப் படியே பஞ்சவல்க்க கஷாயம் இது இரண்டும் சேர்த்து * வஸ்திபிண்டனம் செய்தால் நிற்கும். அப்படியே புரு ஷர்களுக்குச் சிசனவழியாகவும் ஸ்திரீகளுக்கு யோனி வழியாகவும் வரப்பட்ட இரத்தத்துக்கு இந்த கிருதம் அப்படியே பஞ்சவல்க்க கஷாயம் சேர்த்து உதிரவஸ்தி பிண்டனம் செய்தால் நின்றுபோகும்.

---

* வஸ்திபிண்டனமென்ருல் பீச்சாங்குழாய்.

## பஞ்சவல்க்க கஷாயம்

ஆலம்பட்டை, அரசம்பட்டை, மருதம்பட்டை, ஒதியம்பட்டை, மாம்பட்டை இவ்வைந்துவகையும் சமபாகமாய்ச் சேர்த்து அந்தப்பட்டையில் 16-பங்கு தண்ணீர் விட்டு நான்கில் ஒருபங்கு கஷாயமிறக்கிக் கொள்ளுகிறது. அந்தக் கஷாயத்தை வடிக்கட்டி வைத்துக் கொள்ளுகிறது.

பீச்சாங்குழாய்ப் பிரயோகம்:—

அந்தக் கஷாயம் சேர்-1, மேற்சொல்லிய கிருதத்தில் சேர் $\frac{1}{8}$, இவை யிரண்டும் கலந்து பீச்சாங்குழாயில் ரொப்பி ஆசனவழியாக அடிக்கிறது.

சிசனத்தில் பீச்சாங்குழாயால் அடிக்கிற விபரம்:—

சிசனவழியாக அப்படியே பெண்களுக்கு யோனிவழியாக வருகிற இரத்தத்துக்கு மேற்சொல்லிய கஷாயத்திற் சேர்-$\frac{1}{4}$, கிருதம் விராகனெடை-5 இது இரண்டும் சேர்த்து பீச்சாங்குழாயிற்போட்டு அடிக்கிறது. இரத்தம் நின்றுபோகும்.

பெரும்பாடு பிறதற ரோகத்துக்கு சொர்ணமால்யம்:—

சிகப்புப்பட்டுத் துணிசுட்ட பஸ்பம் விராகனெடை-1, தூள்செய்த காசிக்கட்டி வடிக்கட்டினது விராகனெடை-1, கற்கண்டுத்தூள் வடிக்கட்டியது விராகனெடை-1 இந்த மூன்று வகையும் ஆலம்பாலில் மத்தித்து மொந்தம்பழம் விராகனெடை-3, பசுவின் வெண்ணெய் விராகனெடை-3 இவைகளை யெல்லாம் ஒன்ருய்ச் சேர்த்து அதில் சொர்ணமால்ய வசந்தம் யுக்தானுசாரம் சேர்த்துக் கொடுக்கிறது. மேலுக்கு ஊர்த்துவகத இரத்தபித்தத்துக்குச் சொல்லிய அனுபானங்களில் வாசா ரசமாகிலும் அல்லது கீழ்நோக்கிய இரத்தபித்தத்துக்குச் சொல்லிய அனுபானங்களில் அறுகம்வேர் கிருதமாகிலும் கொடுக்கிறது. அதில்

சொஸ்தமாகாம லிருந்தால் சீந்திச்சாராகிலும் பலா கஷாயமாகிலும் லாச்சா ரசமாகிலும் அரணிக ரத்தம் ஆகிலும் பூஷாணுக சூரணமாகிலும் கொடுக்கிறது. இந்த நான்குவிதமான ஔஷதத்தின்விவரம் சொல்லுகிறோம்.

## சீந்திரசம்

கள்ளியின்பேரில் படராமலிருக்கும்படியான முற்றின சீந்திற்கொடி கொண்டுவந்து அதின்மேல் இருக்கப்பட்ட பிராணியை நீக்கி மற்றது பலம்-1 அந்தக் கொடியை நன்றாய் இடித்து அதற்குச் செல்லுமான கழுநீர்விட்டு அறைத்து ஐந்து விராகனெடை சார் பிழிந்துகொண்டு அந்த ரசத்தில் கற்கண்டு விராகனெடை-1 இவைகளை ஒரு விராகனெடை தேனில் மத்தித்துக் கொடுக்கிறது. பிறதறரோகம் சொஸ்தமாகும்.

## பலாரசம்

முற்றின பேராமுட்டி தொலை-1, சித்தாமுட்டி தொலை-1, துரித்திமுள்ளிவேர் தொலை-1 இந்த மூன்றும் மெல்லிதாக யிடித்து அதில் இரண்டு சேர் தண்ணீர் விட்டு பால்சேர்-¼ விட்டு கால்சேராகக் காய்ச்சிக் கொண்டு அதில் சர்க்கரை விராகனெடை-2½ சேர்த்து உள்ளுக்குக் கொடுக்கிறது. பிறதறம் சொஸ்தமாகும். (தொலையென்றால்-ஒரு ரூபா யெடை.)

## லாச்சா ரசம்

கொம்பரக்குத் தூள் சேர்-1, கழுநீர் சேர்-4 ஒரு பாத்திரத்தில் விட்டு நன்றாய்க் கொதிக்கவைத்து இந்த அரக்கையும் அதில் சேர்த்து லோதரம்பட்டை விராகனெடை-2½ சேர்த்து தீபாக்கினியாக எரித்து ஒருசேர் அளவு கஷாயம் வடிக்கட்டி சீசாவில்விட்டு வைத்துக் கொள்ளுகிறது. வேளையொன்றுக்கு விராகனெடை-5, கற்கண்டு விராகனெடை 2-ம் சேர்த்து உள்ளுக்குக்

கொடுக்கிறது. பிறதறரோகம் சொஸ்தமாகும். இந்தக் கஷாயம் செய்கிறதற்குச் சந்தற்பம் இல்லாவிட்டால் காய்ச்சின கழுநீர் விராகனெடை-5 அதில் தண்ணீர் இரத்தம்போலாகும்படியாக அரக்குச் சாயப்பஞ்சு எவ் வளவு செல்லுமோ அவ்வளவு பிழிந்துகொண்டு கற் கண்டு விராகனெடை-2 சேர்த்து உள்ளுக்குக் கொடுக் கிறது; பிறதறம் சொஸ்தமாகும்.

## அராணிக இரத்தம்

வியாதியன்னியிலிருக்கப்பட்ட வெளிமான் இரத் தம் விராகனெடை-5 சுமாராக எடுத்துக்கொண்டு அது சூடாக இருக்கும்போது கற்கண்டு விராகனெடை-2, தேன் விராகனெடை-1 இதுகளைச் சேர்த்து உள்ளுக் குக் கொடுக்கிறது. பிறதறரோகம் சொஸ்தமாகும்.

## பூஷாணுக சூரணம்

பொன்முசுட்டைவேர், நாகப்பழக்கொட்டை, மாங் கொட்டைப்பருப்பு, கல்மதம், முள்ளிலவம்பிசின், தொட்டாற்சுருங்கிவேர், தாமரைப்பூகேசர், வறுத்த பெருங்காயம், ரசாஞ்சினம், அதிவிடையம், கோரைக் கிழங்கு, வில்வப்பிஞ்சு காய்ந்தது, லோதரம்பட்டை, சுத்திசெய்த சொர்ணகாவி, குமிழம்வேர், மிளகு, சுக்கு, திராக்ஷபழம், செம்மரம், பெருமரப்பட்டை, வெட்பாலை யரிசி, அறுகம்வேர் முடிச்சு இல்லாதது, காட்டாத் திப்பூ, அதிமதுரம், மருதம்பட்டை இவைகளெல்லாம் பூசநக்ஷத்திரத்தில் கொண்டுவந்து காயவைத்து சம பாகமாக நிறுத்து சூரணம் செய்து வைத்துக்கொள்ளு கிறது. இந்தச் சூரணத்தின் அளவு விராகனெடை-2½ முதல் 5-விராகனெடை வரைக்கும் எடுத்துக்கொண்டு கழுநீரை முறித்து அரைக்கால் சேர் எடுத்துக்கொண்டு சூரணத்தில் தேன் கலந்து சாப்பிடவும்.

பூஷாணுக சூரணத்தால் சொஸ்தமாகும் வியாதிகள்:—

மூலரோகம், இரத்தமூலம் அதிசாரம், இரத்த அதிசாரம், பிள்ளைகளுக்குச் சுபாவமாய் உண்டாகிற இரத்தம், அப்படியே பூதசஞ்சாரத்தினுல் உண்டாகிற இரத்தம், யோனிரோகம், முழுமையும் யோனியிலிருந்து வருகிற பிரமியம், நீலப்பிரமியம், பித்தப்பிரமியம், அப்படியே சுபாவமாய் பிரவிர்த்திக்கு இரத்தத்தைவிட அதிகமாய் பிரவிர்த்திக்கிறதுகளெல்லாம் சொஸ்தமாகும்.

## ரசாஞ்சினம்

மரமஞ்சள் சேர்-4 கொண்டுவந்து நன்ருயிடித்துத் தூள்செய்து நன்ருய்கொதிக்கிற தண்ணீர் சேர்-16 ஒரு பாத்திரத்தில் வைத்து அதில் மேற்சொல்லிய தூளைச் சேர்த்து ஒருநாள் வைத்திருந்து மறுநாள் உபாயமாகத் தீபோட்டு 4-சேர் கஷாயமாயிறக்கி வடிக்கட்டிக் கொள்ளுகிறது. பால் காய்ச்சிய சட்டியில் ஊத்தி உபாயச் சூடாக்கி அதில் வெள்ளாட்டுப்பால் சேர்-1 சேர்த்துத் தண்ணீர் சுண்டும்படியாகத் தீபோட்டு தண்ணீர் சுண்டினவுடனே அந்த மருந்தை யெடுத்து வெய்யிலில் ஈரமில்லாமல் நன்ருய்க் காயவைத்து ஒரு பாத்திரத்தில் வைத்துக்கொள்ளுகிறது. இதுதான் ரசாஞ்சினம்.

கபசம்பந்தமாயிருக்கிற விக்கலுக்கு
சொர்ணமால்ய வசந்த மாத்திரை கொடுக்க அனுபானம்:—

சீரகம், மிளகு, மயிலிறகு இம் மூன்றும் சமபாகமாய் வெள்ளைத்துணியிற்கட்டி முடிச்சாகச்செய்து அதை நெய்யில் நனைத்து சட்டியில் வைத்து பஸ்பம் செய்கிறது. சொர்ணமால்ய வசந்த மாத்திரை யுக்தானுசாரம், அதற்கு நான்கு பங்கு மேற்சொல்லிய பஸ்பம் இவைகளைத் தேனிற் கலந்து மத்தித்துக் கொடுக்க விக்கல் நிற்கும்.

மேற்படி கபசம்பந்தமான விக்கல்

அரோசிகம், திரேகம் கனமாயிருக்கிறது, திரேகம் வெளுப்பாகக் காணுகிறது இந்த உபத்திரவம் கபசம் பந்தமென்று அறியவும்.

வாதசம்பந்தம், பித்தசம்பந்தம், பசியினால் உற்பத்தியாகிற அப்படியே உரப்புப் பதார்த்தங்கள் சாப்பிடுவதினால் உற்பத்தியாகிற விக்கலுக்கு சொர்ணமால்ய வசந்த மாத்திரை கொடுக்க அனுபானம்:—

சொர்ணமால்ய வசந்த மாத்திரை யுக்தானுசாரம், ஒரு தலைப்பூண்டு கொண்டுவந்து வென்னீரில் வேக வைத்து நன்றாய்ப் பக்குவமானபிறகு அதிலிருக்கப் பட்ட மூளையை யெடுத்துவிட்டு அந்தப் பூண்டுமட்டும் விராகனெடை-5, சர்க்கரை விராகனெடை-2, தேன் விராகனெடை-1 இந்த நான்கு வகையும் சேர்த்து ஒரு வெள்ளிப்பாத்திரத்தில் போட்டு நன்றாய் மத்தித் துக் கொடுக்க விக்கல் நிற்கும்.

வாதஜன்னி, பித்தஜன்னி விக்கல் லக்ஷணம்

வாதசம்பந்தமாக இருக்கப்பட்ட உடம்புவலி, விலா வலி, வயிறுவலி, மார்புவலி, தொண்டைவலி பித்தசம் பந்தங்களுக்கும் மேற் சொல்லியபடியே அவயவங்கள் வலி அப்படியே கண்ணெரிச்சல் சின்னங்களால் அறி யவும்.

பித்தவாய்வு சம்பந்தமாய் உண்டாகிற விக்கலுக்கு சொர்ணமால்ய வசந்த மாத்திரை கொடுக்க அனுபானம்:—

சொர்ணமால்ய வசந்தம் யுக்தானுசாரம், காய்ந்த இலந்தைப்பழத்தை நன்றாயிடித்து விரையெடுத்து விட்டு நன்றாய் வடிகட்டினதூள் ஒருபாகம், பிறதறம் சிகிச்சையில் சொல்லியிருக்கிற அனுபானப்படி ரசாஞ் சினமென்று சொல்லியிருக்கிற அவுஷதம் ஒருபாகம், நெற்பொரி ஒரு பாகம் இந்த மூன்றும் மெல்லீசாகத் தூள்செய்து அந்தத் தூளில் விராகனெடை-1¼, சர்க்

கரை விராகனெடை-$1\frac{1}{4}$, தேன் விராகனெடை-1 இந்த நான்கு வகையும் மத்தித்துக் கொடுக்கிறது. பித்த வாய்வு சம்பந்தத்தினல் உண்டாகிற விக்கல் சொஸ்த மாகும்.

பித்தகப சம்பந்தமா யுண்டாகிற விக்கலுக்கு
சொர்ணமால்ய வசந்த மாத்திரை கொடுக்க அனுபானம்:—

சொர்ணமால்ய வசந்தம் யுக்தானுசாரம், கடுகு ரோகணி, சொர்ணகாவி இந்த இரண்டும் வகைக்கு விராகனெடை-$\frac{1}{2}$, தேன் விராகனெடை-$\frac{1}{2}$ இந்த நான்கும் சேர்த்து மத்தித்துக் கொடுக்க பித்தகபசம்பந்த மாய் இருக்கப்பட்ட விக்கல் நிற்கும்.

வாதத்தினல் உண்டாகிற விக்கலுக்கு
சொர்ணமால்ய வசந்தங் கொடுக்க அனுபானம்:—

சொர்ணமால்ய வசந்த மாத்திரை யுக்தானுசாரம், உலர்ந்த பாதிரிப்பூ, மேற்படி காய், வகைக்கு விராக னெடை-$\frac{1}{2}$ நிறுத்து இந்த இரண்டும் தூள்செய்து அத் துடன் தேனில் மத்தித்துக் கொடுக்கிறது. வாதத்தி னல் உண்டாகிய விக்கல் சொஸ்தமாகும்.

திரிதோஷசன்னி விக்கலுக்கு
சொர்ணமால்ய வசந்தங் கொடுக்க அனுபானம்:—

சொர்ணமால்ய வசந்தம் யுக்தானுசாரம், வறுத்த திப்பிலித்தூள் விராகனெடை-$\frac{1}{2}$, கோரைக்கிழங்குத் தூள் விராகனெடை-$\frac{1}{2}$, பேரீச்சங்காய் இடித்தது விராக னெடை-1 இந்த நான்கு வகையும் சேர்த்து தேனில் மத்தித்துக்கொடுக்க திரிதோஷ சன்னிவிக்கல் நிற்கும்

வாய்வினலும் பித்தத்தினலும் அப்படியே இரத்த
வாந்தியினலும் உண்டாகிய விக்கலுக்கு
சொர்ணமால்ய வசந்தங் கொடுக்க அனுபானம்:—

சொர்ணமால்ய வசந்தம் யுக்தானுசாரம், படிக் காரம், சொர்ணகாவி, தவாசீரம் இந்த மூன்றும் சம பாகமாகச் செய்த தூள் விராகனெடை-1, தேன்

விராகனெடை-1, நெய் விராகனெடை-½ இந்த நான்கு வகையும் சேர்த்து மத்தித்துக்கொடுக்க மேற்சொல்லிய லட்சணத்துடனிருக்கப்பட்ட விக்கல் சொஸ்தமாகும்.

(இரண்டாம் முறை)

திரிதோஷ சன்னி விக்கலுக்கு அனுபானம் :—

வறுத்த திப்பிலித்தூள் விராகனெடை-½, சுக்குத் தூள் விராகனெடை-½, நெல்லிமுள்ளித்தூள் விராகனெடை - காலே அரைக்கால், சர்க்கரை விராகனெடை-1, சொர்ணமால்ய வசந்தம் யுக்தானுசாரத்தைத் தேனில் மத்தித்துக் கொடுக்கிறது. இதில் நிற்காமற்போனல் நசியம் பிழிகிறது.

வாதசன்னி விக்கலுக்கு நசியம் :—

சுக்கு விராகனெடை-¼, வெல்லம் விராகனெடை-¼ இரண்டும் சேர்த்து நன்ருயிடித்து மூலைப்பால் சேர்த்து மறுபடியும் இடித்துப் பிழிந்து கொள்ளுகிறது. இந்த ரசத்தை மூக்கு இரண்டிலும் இரண்டு சொட்டுப் பிழிகிறது. இப்படிப் பிழிந்தால் விக்கல் சொஸ்தமாகும்.

பித்தசன்னி விக்கலுக்கு நசியம் :—

அதிமதுரம் விராகனெடை-¼, தேன் விராகனெடை-¼, இவை இரண்டையும் சேர்த்து இடித்து மூலைப்பாலில் சேர்த்து ஒரு துணியினல் பிழிந்து கொள்ளுகிறது. அந்த ரசத்தை மூக்கில் இரண்டு சொட்டுப் பிழிந்தால் சொஸ்தமாகும்.

கபஜன்னி விக்கலுக்கு நசியம்:—

திப்பிலி விராகனெடை-⅛, கற்கண்டு விராகனெடை-¼ இந்த இரண்டும் சேர்த்து மூலைப்பால்விட்டு அரைத்து ரசம் பிழிந்துகொண்டு நசியம் செய்கிறது, உபத்திரவம் சொஸ்தமாகும்.

சமஸ்த விக்கலுக்கும் வேது

நொச்சியிலே, தழுதாழையிலே, மலைவேம்புயிலே, வேப்பிலே இந்த நான்குவகை யிலையும் அகப்பட்டமட்டுக்கும் அந்தத் தழைகளை ஒரு பெரிய பானையில் கால் பானைரொப்பி பானைக்கழுத்தளவு ஜலம்விட்டு தீப் போட்டு அரைப்பானையாகிறவரையிற் காய்ச்சி பிறகு கஷாயம் இறக்கிக்கொண்டு செங்கல் துண்டு எரிகிற அடுப்பில் போட்டு சித்தமாக வைத்துக்கொள்ளுகிறது. பிரம்பு பின்னின கட்டிலில் ஒன்றும் விரிக்காமல் அந்த உபத்திரவக்காரனை அதிற் படுக்கவைத்து அரைச்சேர் வேப்பெண்ணெயில் இந்துப்பு பலம்-1 தூள்செய்து கலந்து அந்த எண்ணெயை உபத்திரவக்காரன் உடம்பில் தடவி கழுத்துக்குமேல் ஆவிபோகாமல் உடம்பு சர்வாங்கமும் கம்பளியால்மூடி மேற்சொல்லிய கஷாயத்தில் ஒரு சட்டியெடுத்து கட்டிலுக்குக் கீழ் வைத்து அடுப்பி லிருக்கப்பட்ட காய்ந்த செங்கல் துண்டை அதில் போடுகிறது, போட்டால் ஆவிவரும்; அந்த ஆவி அந்த உடம்பு முழுமைக்கும் படும்படியாக பிடிக்கிறது. வேர்வை வரவர துடைக்கிறது. மேலுக்கு மேல் ஆவிகொடுக்கிறது. இதனுல் உடம்பின் அந்தந்த இடங்களிலிருக்கப்பட்ட நரம்புகள் தோலிலும் ஆவி பட்டு விக்கல் வாந்தி குணமாகும்.

முத்துசாமி தீக்ஷதர்

எருசெந்தூரஞ் செய்யும் விதம்:—

(எகு அரப்பொடி சுத்திசெய்கிற விபரம்)

இருப்புச்சட்டியில் எகு அரப்பொடியைப் போட்டு அந்தத்தூள் நனையும்படியாக முசல் இரத்தம்விட்டு அடுப்பில் வைத்து அந்த இரத்தமெல்லாஞ் சுண்டி அரப்பொடித்தூள் தணல்போலாகும்படியாகத் தீப் போட்டு பிறகு பசுவின் கோமயம்விட்டு ஆறவைத்து அந்த இருப்புச் சட்டியை கீழேயிறக்கி கரண்டியால்

கிளறி ஆறின பிறகு மறுபடியும் முசல் இரத்தம் விட்டு வருத்து கோமயத்தாலாறவைத்து இப்படி மூன்று தரஞ்செய்து மேற்படி அரப்பொடியில் சேர்-1 இருப்புச்சட்டியிற்போட்டு ⅛-சேர் பசுவின்நெய் இருப்புச் சட்டியில்விட்டு திரிபலாதி கஷாயஞ் சேர்-1 விட்டு அடுப்பிலேற்றி மேற்படி கஷாயமும் நெய்யுஞ் சுண்டு கிறவரையில் கையோயாமல் கிளரிக்கொடுத்து சுண்ட வைத்து சுண்டினபிறகு அந்த இருப்புச்சட்டியைக் கீழேயிறக்கிக்கொண்டு கரண்டியால் கிளறி ஆறவைக் கிறது. இந்தப்பிரகாரம் மூன்று தடவைசெய்தால் சுத்தியாகும்.

## திரிபலாதி கஷாயம்

கடுக்காய் சேர்-1, தான்றிக்காய் சேர்-1, நெல்லி முள்ளி சேர்-1 இந்த மூன்றும் விரைநீக்கி நிறுத்துக் கொண்டு அதில் 12-சேர் தண்ணீர்விட்டுக் காய்ச்சி 3-சேராக யெடுத்துக்கொள்ளுகிறது. இதுதான் திரி பலாதிக் கஷாயம்.

இந்தப்பிரகாரஞ் சுத்திசெய்த அரப்பொடி சேர்-1, இரசம் சேர்-½, கெந்தகம் சேர்-1 இந்தவிதமாக மூன் றும் நிறுத்துக்கொண்டு அதில் இரசமும் கெந்தகமும் போட்டு ஒரு பகல் முப்பதுநாழிகை அரைத்து அதி லொன்றும் பசை கொடுக்காமலரைத்தால் அந்தத் தூள் கறுப்பாகும். அதில் மேற்சொல்லிய அரப்பொடி யைச் சேர்த்து மறுபடியும் கற்றாழைச்சார் சேர்த்து ஒரு பகல் முப்பதுநாழிகை கைவிடாமல் அரைக்கவும். அப்படி அரைத்து உருண்டைசெய்து அந்த உருண் டையின் மேல் கொட்டைமுத்துயிலை சுத்தி ஒரு பாத்தி ரத்தில்வைத்து மூடி ஒரு இராத்திரிவரையில் வைக்கி றது. மறுநாள் அந்த இலையை யெடுத்துவிட்டு மேற் படி உருண்டையைத் தூள்செய்து தாம்பூரபாத்திரத் தில் போட்டு ஒரு நாள்முழுமையுஞ் சூரியபுடத்தில்

வைத்தால் அந்த மருந்தில் கைவைக்க ஆருமற் சூடு யேறி புகை யுண்டாகும். அந்த மருந்து கறுப்புநிற மாறி கொஞ்சஞ் சிவந்த வர்னமாகயிருக்கும். அதை மறுபடியுங் கல்வத்திற்போட்டு கற்ருழைச் சோற்றி ஞல் மூன்றுநாளரைத்து வில்லைதட்டி உலரவைக்கிறது. அது நன்ருய்க் காய்ந்தபிறகு சாணுக்கில் வைத்து சீலை மண்செய்து முக்கால்முழ வுயரப்புடம்போடுகிறது. மறு நாள் அந்த வில்லையை யெடுத்துக்கொண்டு அதில் 1-பலம் லிங்கம், 2½-விராகனெடை சவ்வீரம், 2½-விராக னெடை பூரீர் இவைகளெல்லாங் கல்வத்திலிட்டு நெல்லிக்காய்ச்சார் விட்டரைத்து பில்லைசெய்து நன் ருய்க் காயவைத்து முன்சொல்லிய பிரகாரம் சாணுக் கில் வைத்து மூன்று சீலைமண்செய்து முக்கால்முழ வுயரத்திற்புடம் போடுகிறது. இப்படியாக நெல்லிக் காய்ச் சாற்றிஞல் ஒருநாள் முழுமையும் அரைத்து இப்படி பத்துப் புடம் போடுகிறது. இதில் பூரீர்மட்டு முதல் புடத்திற்குச் சேர்க்கிறது. மற்ற ஒன்பது புடத் துக்கும் ⅛-சேர் லிங்கம், 2½-விராகனெடை சவ்வீரம், இந்தப் பிரகாரம் பத்துப்புடம் போட்டபிறகு நாகப் பட்டை கஷாயத்திஞல் ஒவ்வொருநாளுமரைத்து முன் போல சாணுக்கில்வைத்து மூன்று சீலைமண்செய்து ஐந்துபுடம் போடுகிறது. பிறகு கற்ருழைச்சோற்றி ஞல் ஒவ்வொருநாளும் அரைத்து முன்சொல்லியபடி சாணுக்கில்வைத்து சீலைமண்செய்து முன்சொல்லிய படிக்கு ஐந்து புடம்போடவும். இப்படிப் புடம்போட் டால் லோகசெந்தூரங் கட்டாயமாக ஆகும்.

இந்த லோகசெந்தூரத்தின் குணம்:—

அக்கினிமந்தம், பாண்டுரோகம், காமாலை, மூத்திர ரோகம், சிவித்திரரோகம், மேகரோகம், க்ஷயரோகம் இவைகளெல்லாம் அந்தந்த வியாதி அனுபானத்திஞல் சரீரத்திலிருக்கப்பட்ட வியாதி சரீரபலம் இந்த பலம் இரண்டையும் பார்த்து அரைப் பணவெடைமுதல்

ஒன்றரைப்பணவிடை வரையில் கொடுத்தால் மேற் சொல்லிய வியாதிகள் சொஸ்தமாகும்.

மேற்சொல்லிய அவுஷதம் மேற்சொல்லிய ரோகத் துக்கு ஆரம்பத்திற் கொடுக்கலாம். அல்லது வியாதி சொஸ்தமானபிறகு ஏதாவது வியாதி சேஷமாயிருந் தாலும் அதற்கு அப்படியே இரத்தபுஷ்டியாகிறதற் கும் சரீரபுஷ்டி யாகிறதற்கும் கொடுக்கலாம். வியாதி அதிக பலமாயிருக்கும்போது கொடுக்கலாகாது. மேற் சொல்லிய வியாதிக்கு வெவ்வேருக அனுபானஞ் சொல்லுகிரேம்.

அக்கினிமந்தத்துக்கு
லோகசெந்தூரம் கொடுக்க அனுபானம்:—

லோகசெந்தூரம் யுக்தானுசாரம், சித்திரக்குட பாகம்-5 விராகனெடை இரண்டுங் கலந்து கொடுக் கிறது.

### சித்திரக் குடபாகம்

சித்திரமூலவேர்பட்டை சேர்-5, சுண்டக்காய்வேர், முள்ளிகத்திரிவேர், நெருஞ்சிவேர், மூக்குத்திப்பூண்டு வேர், சீந்திற்கொடிவேர், சிறுபூளைவேர் இவைகளெல் லாம் வகையொன்றுக்கு சேர்-2½ இவைகளைக் காய வைத்து இடித்து ஒரு பானையிற்போட்டு அதில் நாலு மரக்கால் தண்ணீர்விட்டு ஒரு நாள்வைத்து மறுநாள் சிறுதீப்போட்டு ஒரு மரக்கால் அளவாகக் காய்ச்சி இறக்கிக் கொள்ளுகிறது. அதிற் பழைய வெல்லஞ் சேர்-12½ அதில் கலந்து வடிகட்டிக் கொள்ளுகிறது. அதன் பிறகு அந்தக் கஷாயத்தை அடுப்பில் வைத்து நன்ருய்க் காய்ச்சி சுண்டவைத்து தண்ணீர் இல்லாமற் பதமாக இறக்கிக்கொண்டு மறுநாள் அதிற் தேன் சேர்-4, சுக்கு, திப்பிலி, மிளகு, லவங்கப்பட்டை, லவங்க பத்திரி, ஏலம் இவைகளெல்லாஞ் சூரணஞ்செய்து வகை யொன்றுக்கு பலம்-2 சேர்த்து அந்த வெல்லப்பாகில்

சேர்த்து நன்றாய்க்கடைந்து எடுத்துவைத்துக்கொள்ளு கிறது. அதனுடைய அளவு விராகனெடை-5. இது தான் சித்திரக்குடபாக மென்கிற அவுஷதம். அக்கினி தீபனத்துக்குக்காக அசுவினிதேவர்கள் சொல்லியது.

இந்தச் சித்திர குடபாகத்தின் குணம் :—

இதனால் மரத்தைச் சாப்பிட்டாற்கூட சீரணத் துக்கு வரும். இதுதவிர இருமல், சுவாசம், க்ஷயம், குன்மம், உதரசூலம், குஷ்டம், பீநிசம், அண்டவாய்வு, வயிற்றில் ஜனிக்கப்பட்ட கிருமிகள் சொஸ்தமாகும். பலவித மருந்துகளால் சொஸ்தமாகாத அக்கினிமந் தம் அப்படியே பீநிசஞ் சொஸ்தமாகும்.

அக்கினிமந்தத்துக்குப் பத்தியம் :—

நன்றாய்த் தீட்டிய பழைய அரிசிபடி-⅛ வறுத்த பச்சைப்பயறு படி-⅛, சுக்கு விராகனெடை-1, கொத்து மல்லி விராகனெடை-2, காயம் கடலை பிரமாணம், கஞ்சிக்குத் தகுந்த உப்பு இவைகளையெல்லாம் சேர்த் துக் கஞ்சி காய்ச்சவும்.

கஞ்சி செய்கிற விவரம் :—

16-சேர் தண்ணீர் ஒரு மண் பாத்திரத்தில் விட்டுக் காய்ச்சி 8-சேராகச் சுண்டினபிறகு மேற்படி சுக்கும் மல்லியும் நறுக்கி ஒரு துணியில் முடிந்து மேற்படி ஜலத்தில் போட்டு மேற்படி அரிசியும் பருப்பையும் போட்டு கஞ்சி காய்ச்சி இறக்கிக்கொள்ளுகிறது. மேற் படி கஞ்சி குடிக்கும்போது பெருங்காயத்தைச் சுட்டுப் பொடிசெய்து கஞ்சியில் சேர்த்துக்கொள்ளுகிறது. இந்துப்புஞ் சேர்த்துக்கொண்டு கஞ்சி குடிக்கலாம்.

கஞ்சியின் குணம் :—

விஷமாக்கினியிருந்தாற் சமாக்கினியாகும்; மந் தாக்கினியிருந்தால் தீபாக்கினியாகும்; விஷமாக்கினி யென்றால், லகுவாகாரங்கூட சீரணமாகாது; குருத்துவ

மான ஆகாரஞ் சீரணத்துக்கு வரும். இந்தவிதமான மந்தாக்கினியென்றால்: லகுவாகாரமுங் குருத்துவமான ஆகாரமுஞ் சீரணத்துக்கு வராது. அப்படியே பசியிருந்து வாய்வு உபரியினால் மந்தமாயிருக்கிறதற்கு இந்தக்கஞ்சியினால் அக்கினி தீபனமாகும். ஆரோசிகமும் பரிகாரமாகும். மலமூத்திரமிரண்டும் தாராளமாகும். ஏனென்றால், அக்கினி தீபனத்தினால் கோசட்சுத்தியும் ஆகும். சுரமிருந்தாலும் நிற்கும். வாய்வு பித்தம் கபம் சமதாதுவாயிருக்கும். சிரம பரிகாரமாகும்.

பாண்டுரோகம், காமாலைக்கு எருசெந்தூரம் கொடுக்கிறதற்குமுந்தி, கோஷ்டம் சுத்தியாகிறதற்காக பேதிக்கும் வாந்திக்கும் கொடுக்கிற விபரம்:—

இந்தவியாதி உடையவனுக்கு மூன்றுநாள் காலை மாலை ஒரு கரண்டியளவு விளக்கெண்ணெயாவது நெய்யாவது கொடுக்கிறது. நாலாவதுநாள் அப்பியங்க ஸ்நானஞ் செய்து வைக்கிறது. தெம்பிருந்தால் பிறகு வாந்திக்குக் கொடுக்கிறது.

பேதிக்குக்கொடுக்கிற கிரமம் :—

கடுக்காய்த்தூள் 4-பங்கு, சுக்குத்தூள் 2-பங்கு, இந்துப்பு 1-பங்கு இவைகளை வஸ்திரகாயஞ்செய்து அந்தத் தூளில் தேகபலத்துக்குத் தகுந்த 3-விராகனெடை முதல் 6-விராகனெடைவரையில் வென்னீரில் கலந்து கொடுக்கிறது.

(இரண்டாம் முறை)

பேதிக்குக்கொடுகிற விதம் :—

சிவதைவேர் தூள்செய்து வஸ்திரகாயஞ்செய்த சூரணம் விராகனெடை 5, சர்க்கரை விராகனெடை 10-ல் பானகஞ்செய்து மேற்சொல்லிய தூளைக்கலந்து பேதிக்குக் கொடுக்கிறது.

(மூன்றும் முறை)

மணிபந்தசூரணம் பேதிக்குக்கொடுக்கிற விதம் :—

இந்துப்பு 1 பாகம், சீரகம் 2-பாகம், ஓமம் 3-பாகம், சுக்கு 4-பாகம், திப்பிலி 5-பாகம், கடுக்காய்த்தோல் 15 - பாகம் இவைகளையெல்லாஞ் சேர்த்து சூரணஞ் செய்து அந்தச் சூரணத்தில் 3-விராகனெடை முதல் 5-விராகனெடைவரையில் ஜலத்திலாகிலும், கோமூத்திரத்திலாகிலும், எருமைமூத்திரத்திலாகிலும், மோர்த் தெளிவிலாகிலும் கொடுக்கிறது. இந்தப்பிரகாரம் பேதிக்குக் கொஞ்சம் கொடுக்கிறது. பேதியாகாதபட்சத்தில் மறுநாளும் கூடக் கொடுக்கிறது.

பாண்டுரோகத்துக்கு காமாலைக்கு
எகு செந்தூரம் கொடுக்கிற அனுபானம் :—

எகுசெந்தூரம் யுக்தானுசாரம், வெங்காயச்சார் விராகனெடை-5, ஜாதிக்காய் விராகனெடை-¼, மாசிக்காய் விராகனெடை-¼, இந்த இரண்டையும் வெங்காயச் சாற்றி லுரைத்து கரண்டிக்காம்பு காயவைத்து மேற்படி சாற்றை முரித்துக் கொடுக்கிறது. பாண்டுரோகம், காமாலை சொஸ்தமாகும்.

(இரண்டாம் முறை)

பாண்டுரோகம் காமாலைக்கு அனுபானம்:—

எகுசெந்தூரம் யுக்தானுசாரம், கீழாநெல்லி சமூலம், கையாந்துரைசமூலம், வல்லாரைத்தழை இவைகளெல்லாம் வகை யொன்றுக்கு விராகனெடை-4, சுக்கு விராகனெடை - 2, கொத்துமல்லி விராகனெடை-2 இவைகளை யெல்லாஞ் சேர்த்து அதில் இரண்டுசேர் தண்ணீர்விட்டு அரைக்கால் சேர் தண்ணீராகச் சுண்டினவுடன் இறக்கிக்கொண்டு அதில் 5-விராகனெடை வெங்காயச்சார், ஜாதிக்காய் மாசிக்காய் இந்த இரண்டும் வகையொன்றுக்கு விராகனெடை-½ இவை யிரண்டும் வெங்காயச்சாற்றி லுரை

த்து கரண்டிக்காம்பைக் காய்ச்சி சாற்றை மூரித்துக் கொண்டு மேற்சொல்லிய மருந்திற்கலந்து உள்ளுக்குக் கொடுக்கிறது. பாண்டுரோகம், காமாலை இவைகள் சொஸ்தமாகும்.

(மூன்றும் முறை)

பாண்டுரோகம், காமாலைக்கு
ஏகு செந்தூரம் கொடுக்க அனுபானம்:—

இரும்புக்கிட்டான் சேர்-1, மெல்லிசாகச்செய்து இரும்புச்சட்டியிற் போட்டு அதைப் பழுக்கக்காய்ச்சி 8-சேர் கோமூத்திரத்தில் சுருக்குக் கொடுக்கிறது. அதற்குப் பிறகு அந்தச்சூரணம் விராகனெடை-1, ஏகுசெந்தூரம் யுக்தானுசாரம், நெய் விராகனெடை-1½, தேன் விராகனெடை-1 இவைகளையெல்லாம் கலந்து மத்தித்துச் சாப்பிடப்போகிற சமயத்தில் மருந்தைச் சாப்பிட்டு உடனே சாப்பிடுகிறது.

இதனால் சொஸ்தமாகும் வியாதிகள்:—

அக்கினி தீபனமாகும், சாடராக்கினியும் விர்த்தியாகும்; காமாலை, பாண்டுரோகம், வீக்கம் இவைகள் சொஸ்தமாகும்.

வாத சம்பந்தம், கப சம்பந்தமாயிருக்கப்பட்ட
பாண்டு காமாலைக்கு ஏகு செந்தூரம்
கொடுக்க அனுபானம்:—

வில்வவேர், பிராணிரீக்கியகட்டை, முன்னைவேர், பாதிரிவேர், குமிழம்வேர், வாகைவேர், கண்டங்கத்திரி வேர், முள்ளிகத்திரிவேர், சிறுபூளைவேர், மூக்குத்திப் பூண்டுவேர், சுக்கு இவைகள் வகையொன்றுக்கு விராகனெடை-1 இவைகளை நன்றாய்க் காயவைத்து இடித்துக் கொண்டு அதில் இரண்டுசேர் தண்ணீர்விட்டு கால்சேர் தண்ணீராகச் சுண்டினவுடன் இறக்கிக் கொண்டு அதில் ஏகுசெந்தூரம் யுக்தானுசாரம், தேன் விராகனெடை-1 சேர்த்துக்கொடுக்கிறது.

இதனால் சொஸ்தமாகும் வியாதிகள்:—

*வாத கபசம்பந்தமான காமாலை, பாண்டுரோக சுரம், அதிசாரம், கிராணி, வீக்கம், தெகரடி, அரோசிகம், தொண்டை கரகரப்பு, தொண்டைவலி, மார்வலி இந்த வியாதிகளெல்லாம் சொஸ்தமாகும்.*

பித்தசம்பந்தம் கபசம்பந்தமான பாண்டுரோகம் காமாலைக்கு
எகு செந்தூரம் கொடுக்க அனுபானம்:—

*கடுக்காய்த்தோல், நெல்லிமுள்ளித்தோல், தான்றிக்காய்த்தோல், சீந்திற்றண்டு மேல்தோல் நீக்கினது, பேப்புடல், ஆடாதோடைத்தழையாகிலும் வேராகிலும், நிலவேம்பு, முத்தினை வேப்பம்பட்டை இவைகள் வகைக்கு விராகனெடை-2, அதில் இரண்டு சேர் தண்ணீர்விட்டு ¼-சேராக இறக்கிக்கொண்டு அதில் எகுசெந்தூரம் யுக்தானுசாரம், தேன் விராகனெடை-2 இந்த இரண்டும் கலந்து கொடுக்கிறது. பாண்டுரோகம், காமாலை இவைகள் சொஸ்தமாகும்.*

பாண்டுரோகம் காமாலைக்கு எகு செந்தூரம்
கொடுக்க விசேஷ அனுபானம்:—

*எகுசெந்தூரம் யுக்தானுசாரம், அத்துடன் நவாயச் சூரணம் சரீரபலத்துக்குத் தகுந்தபடி ½-விராகனெடை முதல் ஒரு விராகனெடை வரையில் தேன் விராகனெடை-1, நெய் விராகனெடை-2 இவைகளையெல்லாம் கலந்து கொடுக்கிறது.*

நவாயச் சூரணத்தின் விபரம்:—

*குதிரைலாடங்கொண்டுவந்து கொல்லன் உலையிற் சிவக்கக்காய்ச்சி மும்மூன்று தடவை நல்லெண்ணெயில் மோரில் புளிச்சக்காடியில் கொள்ளுத்தண்ணியில் கோமூத்திரத்தில் பிரத்தியேகம் பிரத்தியேகமாக நனைத்து பிறகு அந்த லாடத்தை அறப்பொடிசெய்து அந்த அரப்பொடியை முசல் இரத்தத்தில் கலந்து*

உருண்டைசெய்து உடனே உரித்த ஆட்டுத்தோலால் மூன்று புரையாகச்சுத்தி அந்த உருண்டையை முழங் காலளவு பள்ளத்தில் புதைத்து வைத்து நாலாநா ளெடுத்து ஜலம்விட்டுக்கழுவி அந்த அரப்பொடியை இரும்புக்கடாயிற்போட்டு நெருப்பாக வறுத்து பிறகு அந்த அரப்பொடியைப் புதுச்சட்டியிற்போட்டு தெளிவு தண்ணீர் சேர்த்து கையினாற் றேய்த்தால் அந்த ஜலத்துக்கு லோகசம்பந்தமாகும். பிறகு அந்தத் தண்ணீரை ஒரு சட்டியிற் றெளியவைத்து வெய்யிலிற் காயவைக்கிறது. இந்தப் பிரகாரம் அந்த அரப்பொடித் தூளை ஜலத்தில் தேய்த்துத் தேய்த்து பொடி கரைகிற வரையில் கரைத்து வெய்யிலில் காயவைக்கிறது. அந்தத் தண்ணீர் வெய்யிலில் காயவைத்தால் அடியில் இந்தத் தூளிருக்கும். இந்தத்தூள் 9-பலம், சுக்குப் பலம்-1, திப்பிலி பலம்-1, மிளகுப்பொடி பலம்-1, கடுக் காய்த்தூள் பலம்-1, தான்றிக்காய்த் தூள் பலம்-1, நெல்லிமுள்ளித்தூள் பலம்-1, கோரைக்கிழங்குத் தூள் பலம்-1, வாய்விளங்கத்தூள் பலம்-1, கொடிவேலியின் பிராணித்தூள் பலம்-1 இவைகளை யெல்லாம் கலந்து ஒரு பாத்திரத்தில் வைக்கிறது.

இந்த நவாயச் சூரணத்தினால் சௌஸ்தமாகும் வியாதிகள் :—

பாண்டுரோகம், குஷ்டரோகம், மூலரோகம், மார் வலி காமாலை இவைகளெல்லாம் சொஸ்தமாகும்.

மூத்திரரோகம், பிரமியரோகம் இந்த இரண்டுக்கும் எகு செந்தூரங் கொடுக்காததற்கு முந்தி பேதிக்கும் வாந்திக்கும் கொடுக்கப்பட்ட கிரமம்:—

கொட்டைமுத்துயெண்ணெய் சேர்-1 கொண்டு வந்து அதில் இரண்டு விராகனெடை கற்கண்டு தூள் செய்து கலந்து வியாதிக்காரனுக்கு காலை மாலை வேளை யொன்றுக்கு விராகனெடை-1 ஆக சரீர பலத்துக்குத் தக்கபடிக்கு ஐந்து நாள்முதல் பத்துநாள் வரைக்கும்

கொடுக்கலாம். பிறகு வாந்தியாகும் படிக்கு ஏதாவது மருந்து கொடுக்கிறது.

மறுபடியும் பேதிக்குக் கொடுக்கிற கிரமம்:—

கடுக்காய்த்தூள் விராகனெடை-2, கொட்டைமுத் தெண்ணெய் சரீரபலத்துக்குத் தக்கபடி ⅛-சேர் முதல் ¼-சேர் வரையில் மேற்படி தூளைச் சேர்த்துக் கொடுக்கிறது.

மூத்திரரோகம் பிரமியரோகத்துக்கு
எகு செந்தூரம் கொடுக்க அனுபானம்:—

நெல்லிமுள்ளித்தோல் விராகனெடை-5 அதில் இரண்டு சேர் தண்ணீர்விட்டுக் காய்ச்சி ¼-சேர் தண்ணீராக சுண்டினவுடன் இறக்கிக்கொண்டு அந்தக் கஷாயத்தில் மஞ்சள்தூள் விராகனெடை-1, சீந்திற் கொடி சத்து விராகனெடை-½, தேன் விராகனெடை-2 இவைகளையெல்லாம் கலந்து அத்துடன் எகுசெந்தூரம் யுக்தானுசாரம் சேர்த்துக் கொடுக்கிறது, மூத்திர ரோகம், பிரமிய ரோகம், இவைகள் சொஸ்தமாகும்.

சீந்தில்கொடி சத்து எடுக்கிற விபரம்:—

கள்ளியின்மேற்படராத முத்தின சீந்திற்கொடியை நன்றாய்க்கழுவி மேல் பிராணியை நீக்கி உள்ளிருக்கப்பட்ட சத்து எடுத்து பஞ்சுபோல் நறுக்கி நன்றாய்த்துவைத்த சவுக்கத்தில் மேற்படி கொடி நசுக்கினதைக்கட்டி ஒரு சத்தலில் அரைக்கால் அல்லது கால் சத்தல் தண்ணீர் நிரப்பி இந்தத் துணியிற் கட்டிய மூட்டையை நன்றாய்க் கலக்கினால் அதிலிருக்கப்பட்ட சத்து ஜலத்தில் கலந்துபோகிறது. பிறகு அந்தத் தண்ணீரை இறுத்து வடித்தபிறகு அடியில் வெளுமையாக சத்திருக்கும்; அதையெடுத்து வைத்துக் கொள்ளுகிறது.

(இரண்டாம் முறை)

மூத்திரரோகம் பிரமியரோகத்துக்கு எகு செந்தூரம் கொடுக்க அனுபானம் :—

சீந்திற்கொடிரசம் விராகனெடை-5, சீந்தில் சர்க்கரை விராகனெடை-½, தேன் விராகனெடை-2 இவைகளையெல்லாம் கலந்து அத்துடன் எகு செந்தூரம் யுக்தானுசாரம் சேர்த்துக்கொடுக்கிறது. மேற்சொல்லிய ரோகம் சொஸ்தமாகும்.

(மூன்றும் முறை)

மேற்படி அனுபானம் :—

ஆக்குலிபஞ்சகச் சூரணம் விராகனெடை-2, எகு செந்தூரம் யுக்தானுசாரம் இரண்டும் கலந்து தேனிற் கலந்து கொடுக்கிறது. ஆலம்பாலிலும் உருண்டை செய்து கொடுக்கலாம்.

ஆக்குலிபஞ்சக சூரணத்தின் விபரம் :—

ஆவாரைவித்து, அப்படியே அதனுடைய பூ, அதன் கொழுந்து, அதன் வேர்ப்பட்டை, அதன் மரத்தின்பட்டை, இவ்வைந்து வகையுந் தனித்தனியாய்க் காயவைத்து ஒருமிக்க இடித்து சூரணம் செய்துவைத்துக்கொள்ளுகிறது. இதற்கு ஆக்குலிபஞ்சகமென்று சொல்லுகிறார்கள்.

(நான்காம் முறை)

மூத்திரரோகம் பிரமியரோகத்துக்கு செந்தூரம் கொடுக்க அனுபானம் :—

குராசானி ஓமம் விராகனெடை ½, பேரீச்சங்காய் விராகனெடை-½ இதை தண்ணீர்விட்டு நெகிழ அரைத்து எகு செந்தூரம் யுக்தானுசாரம் சேர்த்துக் கொடுக்கிறது. இந்த ஔஷதம் சாப்பிட்ட ஒரு ஜாமத்துக்குமேல் கொஞ்சம் மயக்கம் வரும்; அதனுற் கெடுதி வரமாட்டாது. இதைக் கொண்டு மதுமேகம், மூத்திர

ரோகம், பிரமியரோகம் யாவற்றும் சொஸ்தமாகும்; உடனே பத்தியம் வாங்கவும்.

க்ஷயரோகத்துக்கு எகு செந்தூரம் கொடுக்க அனுபானம் :—

சொர்ணபஸ்பம் கொடுக்கிற சமயத்தில் க்ஷய ரோகத்துக்குச் சொல்லிய அனுபானத்தில் எகுசெந் தூரம் சேர்த்துக் கொடுக்கிறது; க்ஷயரோகம் சொஸ்த மாகும்.

வெங்குஷ்டத்துக்கு எகு செந்தூரம் கொடுக்க அனுபானம் :—

இதற்கு மாபல்லாதக ரசாயனமாகிலும், பிருங் காதி சூரணமாகிலும், பாலரோகசிக்ஷசோதமாதி கிருத மாகிலும் கொடுக்கிறது. இந்த மூன்று மருந்தினுடைய விபரஞ் சொல்லுகிறோம்.

மாபல்லாதக ரசாயனஞ் செய்கிற விபரம்:—

எகுசெந்தூரம் சேர்-½, மூக்குயெடுத்த புதுச்சேங் கொட்டை சேர்-4 நிறுத்துக்கொண்டு பிறகு அந்தச் சேங்கொட்டை செங்கல் துண்டுகளுடன் கலந்து ரெட் டுப்பையில் போட்டு தண்ணீர்விட்டு தேய்த்துக்கழுவி னல் சேங்கொட்டை சுத்தியாகும். பிறகு அந்த சேங் கொட்டையை இரண்டு துண்டாய் நருக்கி நெய் புழுங் கின பானையிற் போட்டு 32-சேர் தண்ணீர்விட்டு அடுப் பில் வைத்து தீப்போட்டு 8-சேர் அளவிற்காய்ச்சி வடி கட்டிக்கொள்ளுகிறது. மிச்சப்பட்ட வண்டலை அப்ப டியே சத்து இல்லாத சேங்கொட்டை நீக்கிப்போடவும். மேற்படி பானையைச் சுத்தமாகக்கழுவி மேற்படி கஷா யத்தில் எட்டு சேர் பால் சேர்த்து அந்தப் பாத்திரத் திற்போட்டு அடுப்பிலேற்றி தீப்போடுகிறது. பால் சுண்டி கஷாயம் கெட்டியாகிற பதத்தில் அதிற் கற் கண்டு சேர்-4, நெய் சேர்-2 இந்த இரண்டும் சேர்த்துக் கடைந்து இறக்கிக் கொள்ளுகிறது. ஆறினபிறகு

கிராம்பு, ஏலம், ஜாதிக்காய், சீரகம், மிளகு இவைக ளெல்லாம் சமமாகச் சேர்த்து சூரணம்செய்து அந்தச் சூரணம் சேர்-½, வஸ்திரகாயஞ்செய்த கடுக்காய்த்தூள் சேர்-½, முத்தின நெல்லிக்காய்ச்சார் சேர்-½, தேன் சேர்-½ இதுகளெல்லாஞ் சேர்த்து சூரணஞ்செய்து மேற்சொல்லிய செந்தூரம் சேர்த்துக் கலந்து அந்த நெய்ப் பாத்திரத்தில்போட்டு நன்றாய்க் கலந்து தினந் தோறும் சூரிய புடத்தில் வைக்கவும். இந்த ரசாய னத்தினளவு 5-விராகனெடை வரையில் கொடுக் கலாம்.

மாபல்லாதக ரசாயனத்தினால் சொஸ்தமாகும் வியாதிகள்:—

வெங்குஷ்டம், ஊன்வடிவம் குஷ்டம், மூலரோகம், அக்கினிமந்தம், க்ஷயகாசம், சுவாசம், வெங்குஷ்டத் தினால் வந்த பலக்குறைவு, மயிர்வெளுப்பு, கால் கைவிரல் குறைவுபட்டு இருந்தபோதிலும் பழையபடி யாகும்; சந்தேகமில்லை அனுபோகத்துக்கு வந்த அவுஷதம்.

பிரங்காதிச் சூரணம் செய்கிற விபரம்:—

கிராம்பு, ஏலம், ஜாதிக்காய், சுக்கு, திப்பிலி, மிளகு, சீரகம், கழுவிய எள்ளு, கறுத்த சேங் கொட்டை, கடுக்காய், தான்றிக்காய், நெல்லிமுள்ளி, வகையொன்றுக்கு விராகனெடை-10, நிழலில் உலர்த் திய கையாந்தகரை சேர்-1½ இவைகளையெல்லாம் சேர்த்து இடித்து வஸ்திரகாயம்செய்து அந்தச் சூர ணத்தில் மூன்று விராகனெடை எகுசெந்தூரம் யுக் தானுசாரம் சேர்த்து நெய்யிற் கலந்து கொடுக்கிறது. மூத்திரரோகம் வெங்குஷ்டம், மூலரோகம் இவைகளெல் லாஞ் சொஸ்தமாகும்.

பாலசிக்ஷசோத்தக மாதகிருதம் செய்கிற விபரம்:—

ஆடாதோடைதழை, சீந்தில்கொடி, கடுக்காய், தான்றிக்காய், நெல்லிமுள்ளி, பேப்புடல், கண்டங்கத்

திரி, நாள்பட்ட வேப்பம்பட்டை, புங்கவேரின்பட்டை இவைகளையெல்லாம் வகையொன்றுக்கு சேர்-¼ ஆகக் கொண்டு வந்து பத்துசேர் தண்ணீர்விட்டு இரண்டரைச்சேர் தண்ணீராகக் காய்ச்சி இறக்கிக்கொண்டு அதில் பசுவின் நெய் சேர்-2½, மேற்சொல்லிய சரக்குகளில் வகையொன்றுக்கு விராகனெடை-2½ கொண்டு வந்து தண்ணீர்விட்டு அரைத்து அந்த நெய்யில் இந்தக் கல்க்கம் கரைத்து பிறகு நெய் காய்ச்சி மெழுகு பதத்தில் இறக்கிக்கொள்ளுகிறது. இதனுடைய அளவு 2½-விராகனெடை, எகுசெந்தூரம் யுத்தானுசாரம் இந்த இரண்டும் கலந்து கொடுக்கவும்.

பாலசிக்ஷுசோத்தகமாதி கிருதத்தினால்
சொஸ்தமாகும் வியாதிகள்:—

ஜீரணசுரம், பாண்டு, இருமல், பித்தரோகம், குஷ்டரோகம், சொரி இவைகளெல்லாம் சொஸ்தமாகும்.

முத்துசாமி தீக்ஷிதர்,
காந்த செந்தூரம் எகு செந்தூரம் செய்த பிரகாரம்
செய்துக்கொள்ளுகிறது
காந்த செந்தூரத்தின் குணம்:—

அக்கினிமந்தம், பாண்டுரோகம், சோபம், காமாலை, கும்பகாமாலை, அலிகம், மேகரோகம், பிரமியம், பிறதறரோகம் இந்த வியாதிகளுக்கு அந்தந்த வியாதிகளுக்கு அனுபானத்தினால் அந்தந்த சரீரகுணமறிந்து கொடுத்தால் மேற்சொல்லிய வியாதிகள் சொஸ்தமாகும். இதனடியில் அந்தந்த வியாதிக்கு அனுபானமும் விபரமும் தனித்தனியாகச் சொல்லுகிறோம்.

காந்த செந்தூரங் கொடுக்கிறதற்கு முந்தி
வாந்திக்கும் பேதிக்கும் கொடுக்கிற விபரம்:

எகு செந்தூரங் கொடுக்கப்பட்ட காலத்தில் சொல்லிய பிரகாரம் வாந்திக்கும் பேதிக்கும் கொடுக்கிறது.

அக்கினிமந்தத்துக்குக் காந்த செந்தூரம்
கொடுக்க அனுபானம்:—

*காந்த செந்தூரம் யுக்தானுசாரம்; அதற்கு சித்திரக்குட பாகமாகிலும் இந்த மூன்றுவித அனுபானங்களில் ஒன்று சேர்த்துக் கொடுக்கலாம். சித்திரக்குட பாக மென்னப்பட்ட அவுஷதம் அக்கினிமந்தத்துக்கு ஏகு செந்தூரம் கொடுக்கிற இடத்தில் சொல்லியிருக்கிறது. அந்தப் பிரகாரம்செய்து கொடுக்கிறதுந் தவிற, விடங்காதிக்குட மப்படியே இங்குவாதி சூரணம் இந்த இரண்டின் விபரமுஞ் சொல்லுகிறோம்.*

விடங்காதிகுட செய்கிற விபரம்:—

*வாய்விளங்கம் பலம்-1, கருப்புச்சேங்கொட்டை பலம்-1, கொடிவேலிப்பட்டை பலம்-1, சீந்திற்கொடி மேல்பிராணியை நீக்கி உள்ளிருக்கிற சதைப்பற்றியெடுத்துக்கொண்டது பலம்-1, சீவின சுக்கு பலம்-1 இவ்வைந்து வகையும் கல்லுரலிற்போட்டு இடித்துச் சூரணமாக்கி வஸ்திரகாயஞ்செய்து வைத்துக் கொள்ளுகிறது. அந்தச் சூரணத்துக்குச் சமபாகம் பழைய வெல்லம், பசுநெய் இந்த மூன்றும் நன்ராய்க் கலந்து வைத்துக்கொள்ளுகிறது இந்த அவுஷதத்தின் அளவு இரண்டரை விராகனெடை, இதனல் அதிசாரம், மூல ரோகம் சொஸ்தமாகும்.*

இங்குவாதி சூரணஞ் செய்கிற விபரம்:

*நல்ல சுத்தமான பெருங்காயம் வறுத்தது விராகனெடை-1, பச்சைவசம்பு விராகனெடை-2, சுட்ட வசம்புக்கரி விராகனெடை-2, திப்பிலி விராகனெடை-3, சுக்கு விராகனெடை-4, ஓமம் விராகனெடை-5, கடுக்காய்த்தோல் விராகனெடை-6, சித்திரமூலப் பட்டை விராகனெடை-7, கோஷ்டம் விராகனெடை-8 இவைகள் எல்லாம் சேர்த்து சூரணஞ்செய்து வஸ்திர காயஞ்செய்து வைத்துக்கொள்ளுகிறது. இதனுடைய*

அளவு 2½-விராகனெடை அவுஷதம் கொடுக்கும்போது இந்தச் சூரணத்துடன் ஒரு பலம் தண்ணீர் சேர்த்துக் கொடுக்கிறது. அல்லது மோரிலாகிலும், தயிரின் தெளிவுதண்ணீரிலாகிலும், சாராயத்திலாகிலும் அப்படியே சாராயத்தில் இந்தச் சூரணம் சேர்த்துக் கொடுத்தால் பேதி சொஸ்தமாகும்.

பாண்டு, சோகை, காமாலை, கும்பகாமாலை, அலிமக இதுக்குக் காந்த செந்தூரங் கொடுக்க விபரம்:—

காந்தசெந்தூரம் யுக்தானுசாரம், அதற்கு மண்டூக பரணி லேகியமாகிலும், சிந்தாதிலேகியமாகிலும், தெச மூலாதி லேகியமாகிலும் சேர்த்துக்கொடுக்கிறது. இந்த மூன்றின் விபரம் சொல்லுகிறோம்.

மண்டூகபரணி லேகியஞ் செய்கிற விபரம் :—

வல்லாரையிலையின்சார் சேர்-16, பசுவின் நெய் சேர்-4 இந்த இரண்டும் ஒரு பாத்திரத்திற்போட்டு அரைச் சேர் தண்ணீரளவில் இறக்கிக்கொண்டு அதில் இரண்டு சேர் கற்கண்டு தூள்சேர்த்து, சீனி சர்க்கரை சேர்-2, சீரகத்தூள் சேர் 2, மிளகுத்தூள் சேர்-2 இவைகளையெல்லாஞ் சேர்த்து நன்றாய்க்கடைந்து ஒரு பாத்திரத்திற்போட்டு வைத்துக்கொள்ளுகிறது. இந்த லேகியத்தின் அளவு ஒரு விராகனெடை; இதனால் மேற் சொல்லிய ஐந்துவிதமான வியாதிகளும் சொஸ்தமாகும்.

## சிந்தாதி லேகியம்

புளியங்கொழுந்தின் சார் சேர்-16, ஒரு பாத்திரத்தில் விட்டு, அதில் இரும்பு ஆணி சேர்-16 போட்டு 15-நாள் வைத்து; 16-ம் நாள் மேற்படி ஆணிகளையெடுத்து விட்டு மேற்படி சாரை வடிக்கட்டி அதில் பழையவெல்லஞ் சேர்-8 கலந்து காய்ச்சிபாகு பதத்தில் அதில் சுக்கு, திப்பிலி, மிளகு, கடுக்காய், தான்றிக்காய், நெல்லிமுள்ளி, வாய்விளங்கம், சித்திரமூலவேர்ப்

பட்டை, சீரகம், லவங்கப்பட்டை, லவங்கபத்திரி இவை வகையொன்றுக்கு பலம்-3 சூரணித்து வஸ்திரகாயஞ் செய்து தூவிக் கிளறி தேன் சேர்-2 கலந்து வைத்துக் கொள்ளவும். இந்த லேகியத்தின் அளவு விராக னெடை 5, இந்த லேகியத்தினால் மேற்சொல்லிய ஐந்துவிதமான வியாதிகளும் சொஸ்தமாகும்.

## தசமூலாதி லேகியம்

வில்வவேர்கட்டை, முன்னைவேர், பாதிரிவேர், சிறுவாகைவேர், குமிழம்வேர், கண்டங்கத்திரி, முள்ளிக்கத்திரி, நெருஞ்சிவேர், மூக்குத்திப்பூண்டுவேர், சிறுபூளைவேர், முருங்கைவேர், திப்பிலி, நாட்டுமூலம், செவியம், சித்திரமூலம், சுக்கு, தேவதாரம், வெள்ளைச் சாரணைவேர், சங்கம்வேர் இவை வகையொன்றுக்கு நாலுபலம் எடுத்து இடித்து அதில் 40-சேர் தண்ணீர் விட்டு மூன்றுநாள் ஊறவைத்து நாலாம்நாள் அடுப் பேற்றிக் கமலாக்கினி தீபோட்டு 10 சேர் தண்ணீராக சுண்டினவுடன் இறக்கிக் கொள்ளுகிறது. அதில் பழையவெல்லம் சேர்-6, இஞ்சி ரசம் சேர்-2 இந்த இரண்டும் அந்தக் கஷாயத்தில்சேர்த்துப் பாகுசெய்து பதமானபிறகு அதில் சுக்கு, திப்பிலி, மிளகு, கடுக் காய், தான்றிக்காய், நெல்லிமுள்ளி, லவங்கப்பட்டை, லவங்கப்பத்திரி, ஏலம், கோரைக்கிழங்கு, இரும்பு அரப் பொடி, சுட்ட பெருங்காயம், ஓமம் இவைகள் வகை யொன்றுக்கு விராகனெடை-5 ஆக இடித்து வஸ்திர காயஞ்செய்த சூரணமும், தேன் சேர் 1-ம் கலந்து நன்றாய்க்கடைந்து வைத்துக்கொள்ளுகிறது. இரண்டு விராகனெடை முதல் நாலு விராகனெடை வரையில் சாப்பிடலாம்.

இதற்குப் பத்தியம் :—

புளி, கடுகு, நல்லெண்ணெய், மிளகாய் இவைகள் ஆகா. தித்திப்பு, மோர், வெள்ளாட்டுப்பால், பழ

நெய், நெரிஞ்சிக்கீரை, இவைகளெல்லாஞ் சேர்த்துக் கொள்ளலாம்.

பிரமிய ரோகத்துக்கு
காந்த செந்தூரம் கொடுக்க அனுபானம்:—

எகுசெந்தூரத்தில் பிரமேகத்திற்குச் சொல்லிய அனுபானப்படி காந்த செந்தூரமும் கொடுக்கப் பிரமியரோகம் சொஸ்தமாகும்.

பிறதற ரோகத்துக்கு
காந்த செந்தூரம் கொடுக்க அனுபானம்:—

சொர்ணமால்ய வசந்தத்தில் பிறதற ரோகத்துக்குச் சொல்லிய அனுபானப்படி காந்த செந்தூரம் கொடுக்க பிறதற ரோகஞ் சொஸ்தமாகும்.

முத்துசாமி தீக்ஷிதர்,
தண்டவாளம் செந்தூரம்

தண்டவாளத்தை நன்றாய்ப் பொடிபண்ணி வஸ்திரகாயஞ் செய்த தூளை இரும்புச் சட்டியிற்போட்டு கோமூத்திரம் அந்தத்தூள் முழுகிறவரையில் விட்டு அடுப்பிலேற்றி தீப்போட்டுக் கரண்டியினால் கிண்டி சுண்டவைக்கிறது. இப்படி மூன்றுதடவை சுண்ட வைக்க தண்டவாளப்பொடி சுத்தியாகும். இப்படி சுத்திசெய்த தண்டவாளத் தூள் சேர்-1, நெல்லிக்காய் கெந்தகம் சேர்-1 இந்த இரண்டும் கல்வத்தில் போட்டு கருஊமத்தையிலைச் சாற்றினால் ஈரம் உலராமல் ஏழு தினம் அரைத்து அதை வில்லைதட்டிக் காயவைத்து ஓட்டில் வைத்து 5-சீலைமண்செய்து பூமிக்குமேல் 1½-சாண் உயரம் புடம்போடவும்; இப்படி கருஊமத்தைச்சாற்றினால் நாலுஜாமம் அரைத்து முன்சொன்ன விழுக்காடு ஐந்துபுடம் போடுகிறது. அதன்பிறகு கற்றாழைச் சோற்றினால் நவ்வாலுஜாமம் அரைத்து சீலைமண்செய்து இரண்டுஜான் உயரத்தில் ஐந்துபுடம் போடவும். அதன்பிறகு பார்வைக்கு நல்ல வர்ணமாக

வராவிட்டால் மறுபடியும் இரண்டுபுடம் போடவும். இந்தப்பிரகாரம் செய்தால் அவுஷதம் சித்தியாகும்.

இந்தத் தண்டவாள செந்தூரத்தின் குணம் :—

சீரணசுரம், அதிசாரம், கிராணி, அக்கினிமந்தம், மூலரோகம், குன்மரோகம், பாண்டுரோகம் ஆகிய இவையெல்லாம் அந்தந்த ரோகத்துக்குத் தக்க அனுபானத்தில் சரீரபலத்துக்குத் தக்கபடி கொடுத்தால் சொஸ்தமாகும். மேற் சொல்லிய அவுஷதம் மேற் சொல்லிய ரோகங்களுக்கு ஆரம்பத்தில் கொடுக்கலாம். அல்லது அந்த ரோகம் சொஸ்தமான பிறகு ஏதாவது சேஷ மிருந்தால் இரத்த புஷ்டிக்காகவும், சரீர புஷ்டிக்காகவும் கொடுக்கலாம். ரோகம் பலமாக இருக்கும் போது கொடுக்கலாகாது. இதனடியில் அந்தந்த வியாதிக்குத் தக்க பிரத்தியேக அனுபானஞ் சொல்வோம்.

சீரண சுரத்துக்குத் தண்டவாள செந்தூரம்
கொடுக்கும் அனுபானம் :—

சுக்கு விராகனெடை-$1\frac{1}{4}$, மல்லி விராகனெடை-$1\frac{1}{4}$, இந்த இரண்டும் ஜலம் வார்த்து நசுக்கிச் சார் பிழிந்து அதில் தேன் விராகனெடை-$\frac{1}{2}$, தண்டவாள செந்தூரம் யுக்தானுசாரம் சேர்த்து காலையிற் கொடுக்கவும். மாலையில் சுக்கு விராகனெடை - 2, மல்லி விராகனெடை-2, கோரைக்கிழங்கு விராகனெடை-2, இந்த மூன்றும் சேர்த்து இரண்டு சேர் தண்ணீர்விட்டு கால் சேர் தண்ணீராக இறக்கிக்கொண்டு அந்தக் கஷாயத்தில் தண்டவாள செந்தூரம் யுக்தானுசாரம் சேர்த்துக் கொடுக்கவும். இப்படிப் பத்துதினம் கொடுத்தால் சீரணசுரஞ் சொஸ்தமாகும்.

இதற்குப் பத்தியம்:—

புளி, நல்லெண்ணெய், நெய், தயிர், பால் ஆகிய இவைகள் ஆகாது.

### அதிசாரம், கிராணி, மூலரோகம் இவற்றிற்குத் தண்டவாள செந்தூரம் கொடுக்க அனுபானம் :—

தண்டவாள செந்தூரம் யுக்தானுசாரம்; தேன் விராகனெடை-¼ இதைச் சேர்த்து கொடுத்து அதன் மேல் லவங்காதி மோதகம் சாப்பிடக் கொடுக்கவும்.

### லவங்காதி மோதகம்

கிராம்பு, ஜாதிக்காய், சுக்கு, சிறுநாகப்பூ, ஏலம் வகை ஒன்றுக்கு விராகனெடை-2¼ இவற்றைப் பாதாம்நெய்யில் தனித்தனியாக வறுத்துக்கொள்ளவும். பாதாம் நெய்யகப்படாவிட்டால் பசுவின்நெய்யில் வறுத்துக்கொள்ளவும். எல்லாச் சரக்குகளையும் ஒன்றாய்ச்சேர்த்து சூரணஞ்செய்து இரும்புப்பாத்திரத்தில் அந்தச் சூரணத்தைப் போட்டு அதில் நல்ல தேன் சேர்-¼, சேர்த்து அடுப்பிலேற்றி நன்றாய்க் கிண்டி பக்குவமாயிறக்கிக் கொள்ளவும். இதன் அளவு விராகனெடை-2½ உருண்டைசெய்து சாப்பிடக்கொடுக்கவும்.

### அக்கினி மந்தத்திற்குத் தண்டவாள செந்தூரம் கொடுக்க அனுபானம்:—

தண்டவாள செந்தூரம் யுக்தானுசாரம், இஞ்சிச் சார் விராகனெடை-2½, கற்கண்டு விராகனெடை-1½ இம்மூன்றும் சேர்த்துக் கொடுக்க அக்கினிமந்தம் சொஸ்தமாகும்.

### பாண்டுரோகத்துக்குத் தண்டவாள செந்தூரம் கொடுக்க அனுபானம்:—

காந்தசெந்தூரத்தில் பாண்டுரோகத்துக்குச் சொல்லிய சிந்தாதிலேகியத்துடன் கொடுக்க பாண்டுரோகஞ் சொஸ்தமாகும்.

அப்புராவு

## கிராணி, உடும்புச் சூரணம்

வயதுசென்ற உடும்பு கொண்டுவந்து அதன் தலை, நகம், வயிற்றிலுள்ள கல்மிஷங்களெல்லாம் நீக்கிப் பிறகு காயம் பலம்-$\frac{1}{4}$, இந்துப்பு பலம்-$\frac{1}{2}$, வளையலுப்பு பலம்-$\frac{1}{4}$, பூண்டு பலம்-1, சுக்கு பலம்-1, திப்பிலி பலம்-$\frac{1}{2}$, மிளகு பலம்-1, சவுட்டுமண் பலம்-1, ஓமம் பலம்-2 இவைகளெல்லாவற்றையும் இடித்துச் சூரணஞ்செய்து மேல் சொல்லிய உடும்பு வயிற்றில் ரொப்பி கயிற்றினால் கட்டி பிரமியிலைச் சார் படி-4 ஒரு பானையிற் போட்டு மேல் சொல்லிய உடும்பை மேற்படி சாற்றிற் போட்டு வேக வைத்து ரசம் சுண்டின பிறகு மேற்படி உடும்பை யெடுத்து நன்று யிடித்துக் காயவைத்து மறுபடியும் இடித்து வஸ்திரகாயஞ்செய்து ஒரு பாத்திரத்தில் வைத்துக்கொள்ளவும். வேளை 1 க்கு 2-விரல் கொண்ட அளவு எடுத்துத் தேனில் மத்தித்துக் கொடுக்கவும். இந்தப்படி 2-வேளையும் $\frac{1}{2}$-மண்டலம் கொடுத்துவந்தால் ஆறுவிதமான கிராணி, மூலவாய்வு, சூசிகாவாய்வு இவைகள் சொஸ்தமாகும். இச்சாபத்தியம்.

பொன்னம்பலம்

## வெள்ளைபிளாஸ்திரி

கறபூரச்சிலாசத்து விராகனெடை-2 எலுமிச்சம் பழம் ஐந்தில் உள்ள ரசத்தில் மேற்படி கற்பூரச்சிலாசத்தை வேகவைத்து மேற்படி ரசம் சுண்டின பிறகு நல்ல ஜலம் விட்டலம்பி கல்வத்திலிட்டு பசுவின்னெய் பலம்-$\frac{1}{2}$ விட்டு அரைத்து, வெள்ளைக்குங்கிலியம் பலம்-$\frac{1}{2}$, அதை ஒரு சலாகையில் ஒட்டி அனலில் நன்றுயக்காய்ச்சின பிறகு அதைப் பிசைந்து திரும்பவும் அனலில் காட்டி இப்படி மூன்று தடவை அனலில் காட்டிப் பிசைந்து அழுக்கை நீக்கி ஆறினபின் முன் சித்தப் படுத்தின மருந்துடன் சேர்த்து அரைத்து மறுபடியும்

வெள்ளைக் குங்கிலியம் விராகனெடை-2, வெள்ளை மெழுகு விராகனெடை-2, இதுரெண்டும் காய்ச்சி வடிகட்டிக்கொண்டு முன் மருந்துடன் சேர்த்து அரைத்து ஒரு மணிநேரம் சென்ற பின் ஒரு சிறங்கை தண்ணீர் விட்டு வெள்ளையாகிற வரையிலரைத்து, பிறகு டப்பியில் வைத்துக்கொள்ளவும். இதை சிரங்குகளின்மேல் தடவிவர அவை சொஸ்தமாகும்.

## சிலந்தி ரணத்துக்கு மஞ்சள் பிளாஸ்திரி

முருதார்சிங்கு விராகனெடை-2, மனோசிலை விராகனெடை-½, எலுமிச்சம்பழம் 5-ன் ரசத்தில் வேக வைத்து சுத்தி செய்துகொள்ளுகிறது. பிறகு நல்ல ஜலம்விட்டு கழுவி இரண்டு விராகனெடை பசுவின் நெய் சேர்த்து அரைத்து மஞ்சள்மெழுகு விராகனெடை-3, வெள்ளைக் குங்கிலியம் விராகனெடை-5, பசுவின் நெய் விராகனெடை-3½ போட்டு கொதிக்க வைத்து வடிகட்டி முன் மருந்தோடு சேர்த்து இரண்டு மணிநேரம் அரைத்துச் சிமிழில் அடைத்துக்கொள்ளுகிறது.

## பச்சைப் பிளாஸ்திரி

(இரணங்களில் துர்மாம்சம் வெள்ளையாக இருக்கிறதற்குப் போட்டால் அதுநீங்கி இரணம் ஆறிப்போகும்)

துருசு விராகனெடை-3, வெற்றிலை-15 சார் பிழிந்து ஒரு கரண்டியில்விட்டு மேற்படி துருசைப் போட்டுக் காய்ச்சிச் சார் சுண்டினபிறகு அந்த துருசையெடுத்து நல்ல ஜலம்விட்டுக் கழுவியெடுத்து ஒரு விராகனெடை மஞ்சள் தூளுடன் சேர்த்து அரைப்பலம் பசுவின் நெய்யிற் கொஞ்சம் விட்டரைத்து, வெள்ளைக் குங்கிலியம் பலம்-½ ரசகற்பூரம் விராகனெடை ¼, மஞ்சள் மெழுகுபலம்-½ மேற்சொல்லிய நெய்யில் செலவானதுபோக பாக்கி நெய்யில் இதைக்காய்ச்சி வடிகட்டி முன் மருந்துடன் சேர்த்து

மூன்று நாழிகை அரைக்கிறது. பச்சைநிறம் அதிக மாயிருக்க வேண்டியதானால் வங்காளப்பச்சை விராக னெடை-1 சேர்த்து அரைத்துச் சிமிழில் வைத்துக் கொள்ளுகிறது.

## சிவப்புப் பிளாஸ்திரி

(இதனால் கட்டியுடையாமல் உள் அமுங்கும்)

அரைச்சேர் மோரை ஒருகரண்டியில் விட்டு அதில் நல்ல ஜாதிலிங்கம் விராகனெடை-2 போட்டு நன்றாய்க் கொதிக்க வைத்து மோரை ஊத்திவிட்டு ஜாதிலிங் கத்தை நல்ல ஜலம்விட்டுக் கழுவியெடுத்து கல்வத்தில் போட்டு நல்லெண்ணெய் கொஞ்சம்சேர்த்து அரைத்து வெள்ளைக்குக்கிலியம் சேர்-¼, நல்லெண்ணெய் சேர்-¼ இந்த இரண்டும் சேர்த்துக் கரண்டியில் போட்டு உருக்கி வடிகட்டி முன்மருந்துடன் சேர்த்து ஒரு மணி நேரம் அரைத்து வெள்ளை மெழுகு பலம்-½, கற்பூரம் பணவெடை-1 இந்த இரண்டும் காய்ச்சி மேல்சொல் லிய சரக்குகளுடன் சேர்த்து அரைத்து டப்பியில் வைத்துக்கொள்ளுகிறது.

## கட்டி உடைகிறதற்காக கறுப்புப் பிளாஸ்திரி

கருப்புக் குங்கிலியஞ் சேர்-¼, நல்லெண்ணெய் பலம்-1½ இவ்விரண்டையும் கலந்து கொதிக்கவைத்து அதில் கற்பூரம் விராகனெடை-½ போட்டு தாம்பூரவர் ணத்தில் கீழிறக்கிப் பதம்பார்த்து இளகளாகவிருந் தால் குங்கிலியமும், கெட்டியாக விருந்தால் எண்ணெ யும் சேர்த்துக் காய்ச்சும்போது கரண்டியில் பசுவின் பால் சேர்-½ விட்டு அதில் சவ்வீரம் விராகனெடை-1½ போட்டு கொதிக்கவைத்து மேற்படி வீரக்கடியை யெடுத்து நல்ல ஜலம்விட்டுக் கழுவி தூள்செய்து அடுப் பிலிருக்கும் மருந்துடன் சேர்த்து வடிகட்டி, கெட்டி யானபிறகு சிமிழில் வைத்துக்கொள்ளுகிறது.

## சுத்த மஞ்சள் பிளாஸ்திரி

(இது கட்டியில் துர்மாமிசத்தை நீக்கி யாற்றும்)

எலுமிச்சம்பழம்-5, அவற்றின் சாறெடுத்துக் கரண்டியில்விட்டு அதில் தாளகம் விராகனெடை-2 போட்டு கொதிக்கவைத்து சார் சுண்டின பிறகு மேற்படி கட்டியையெடுத்து நல்ல ஜலம்விட்டுக் கழுவி கல்வத்திலிட்டுக் கொஞ்சம் நல்லெண்ணெய்விட்டு சற்று அரைத்து அத்துடன் முர்தார்சிங்கு விராகனெடை-½ சேர்த்து அரைக்கும்போது வெள்ளைக்குங்கிலியம் சேர்-¼, மஞ்சள் மெழுகு பலம்-½, தேங்காயெண்ணெய் பலம்-½ இந்த மூன்றும் சேர்த்துக் காய்ச்சி வடிகட்டி முன் அரைக்கும் மருந்துடன் சேர்த்து இரண்டு மணி நேரம் அரைத்து கெட்டியாகாமல் இளகலாகவிருந்தால் குங்கிலியத்தூள் வடிகட்டினதை கொஞ்சம்போட்டரைத்தால் கெட்டியாகும்.

அழுகுணிச் சிரங்கிற்குத்தூளும், இதனுல் துர்மாம்சம் யெடுக்கிற விபரமும்:

கற்பூர சிலாசத்துக்கட்டி விராகனெடை-2 அதற்குச் சுண்ணும்பினுல் கவசஞ்செய்து கொஞ்சம் காயவைத்து இரண்டு விராட்டியில் புடம்வைத்து யெடுத்துத் தூள் செய்து அத்துடன் ரசகற்பூரம் பணவெடை-1½, மனோசிலை பனவெடை-1½ சேர்த்துத் தூள்செய்து வைத்துக்கொண்டு சிரங்கில் துர்மாமிசமிருந்தால் மேற்படி தூளை தூவ அது கரைந்துபோம். அது இல்லாவிட்டால் நெய்யிற் குழைத்து துணியிற்றடவிப் போட அழுகுணிச் சிரங்கு ஆறிப்போகும்.

கட்டியுடையாம லிருந்தால் அதற்குப்பட்டி

சாதிலிங்கம் பணவெடை-3, கற்பூரம் பணவெடை-2, இரண்டும்கலந்து தூள்செய்து பின்பு சீனக்காரம் பலம்-1 சேர்த்துத் தூள்செய்து கோதுமை

ரொட்டித்தூள் அத்துடன் சேர்த்து பட்டிகட்ட கட்டி யுடையும்.

இரணத்தில் புழு உண்டானால் அதற்குத் தூள்

மனோசிலை விராகனெடை-2, சவ்வீரம், பண வெடை-1½, சீனாக்காரம் பலம்-½, கற்பூரம் விராக னெடை-1 இவைகளெல்லாவற்றையும் பொடிசெய்து இதில் கொஞ்சமெடுத்து கட்டியின்மேல் தூவி அதற்கு மேல் துணி பிய்ச்சுப்போட்டுக் கட்டவும்.

## LAPID CALAMIRE

## (லாபிட்டு கியாலாமயிர்)

## சிரங்கு காய்வதற்குப் பிளாஸ்திரி

### (இங்கிலீஷ் முறை)

லாபிட்டு கியாலாமயிர் என்பது பூமியிலிருந்து எடுக்கப்பட்ட ஒருவித வஸ்து; அதில் சேர் 1, இதைத் தூள்செய்து வஸ்திரகாயம் செய்துவைத்துக்கொண்டு மெழுகு சேர்-1, தேங்காயெண்ணெய் சேர்-2 இவ் விரண்டையும் காய்ச்சி மேற்படி தூளைக் கொஞ்சம் கொஞ்சமாகத் தூவி, கரண்டியினால் துழாவிவரவேண் டும். உருண்டையாகாமல் அடிக்கடி துழாவி இளக லாக இருக்கும்போதே வஸ்திரகாயஞ்செய்து ஒரு டப்பியில் வைத்துக்கொள்ளவும்.

## RESIN FLOW

## (ரேஸின் ப்ளோ)

## துர்மாமிச நிவாரண பிளாஸ்திரி

ரெஸின் என்பது ஒருவித குங்கிலியம்; இதுகட்டி யாய் சேர்-1, மஞ்சள் மெழுகு சேர்-1, தேங்கா யெண் ணெய் சேர்-1 மேற்சொல்லிய மெழுகு கட்டியாக இருந் தால் இந்த குங்கிலியமும் கட்டியா யிருக்கவேண்டும். இரண்டிலொன்று தூளாகயிருந்தால் மற்றொன்றும்

தூளாக இருக்கவேண்டும்; இவ்விதம் இரண்டையும் சேர்த்து ஒரு பாத்திரத்திற் போட்டு அடுப்பேற்றிச் சிறு தீயாக எரித்துக் காய்ச்சி தேங்காயெண்ணெயுஞ் சேர்த்துச் செம்மையாகக் காய்ச்சவேண்டியது. அதிகத் தீப்போட்டால் கருப்புநிறமாகும். ஒன்ருய் உருகின பிற்பாடு கீழே யிறக்கி வடிகட்டி டப்பாவில் அடைத்து வைக்கவும். இந்த பிளாஸ்திரி துர்மாமிசங்களை யெடுக்கிறதற்காகவும் கல்மிஷங்களை நிவர்த்தி செய்கிறதற்காகவும் உபயோகப்படும்.

அண்ணுசாமி நாயக்கர்,

### காதுவலி நிவாரண நெய்

வலம்புரிக்கா யிரண்டு, வெள்ளைப்பூண்டு பல்லு-1, பன்றி நெய் விராகனெடை-6, கடல்நுரை பணவெடை-4, வசம்பு பணவெடை-1, மேற் சொல்லிய பூண்டை உரித்துத் தோல் நீக்கி மற்ற மூன்று வகையும் தூள்செய்து எல்லாவற்றையும் ஒரு பாத்திரத்தில் போட்டுக் கொதிக்கவைத்து நெய் கொஞ்சம் சிவந்து வருகிற பதத்தில்இறக்கி வடிகட்டிக்கொள்ளவும். இராத்திரியில் படுக்கும்போது இருபது துளி நெய்யைக் கொஞ்சம் சுடவைத்து, காதில் விட்டு பஞ்சுவைத்து அடைத்துக் காலையில் பஞ்சை யெடுத்துவிட்டால் காது வலி நிற்கும்.

அய்யாவையங்கார்,

### சாம்பிராணிப் பதங்கம்

பளிங்குசாம்பிராணி பலம்-1, கடலை அளவு துண்டுகள்செய்து இரண்டு கலையங்களின் வாயை நன்ருய்த் தேய்த்து சாம்பிராணியை ஒரு கலையத்திற் போட்டு மறுகலையும் மூடி வாய்க்கு பச்சைப்பயறு மாவினுல் சீலைசெய்து கெட்டிப்படுத்தி ஒரு சிறு அடுப்பில்வைத்து அதன்கீழ் நெய் பலம்-1, நல்லெண்ணெய் பலம்-1 இவ்விரண்டும் கலந்து ஒரு விளக்கில் ஊற்றித்

திரிகொளுத்தி எரியவிட்டு விளக்கில் எண்ணெயிருக்கிற வரையில் எரியவிடவும். ஆறினபின் எடுத்து மருந்தை சீசாவில் வைத்துக்கொள்ளவும். நீர்க்கோர்வைக்கு மூக்கில் தடவுகிறது. தலைவலிக்கு நெற்றியில் தடவுகிறது. இப்படிச்செய்ய மேற்படி வியாதி சொஸ்தமாகும்.

சிறுங்கு அண்ணுசாமி,

## சவுக்கார வைப்பு

பூங்காரம் படி-5, கிளிஞ்சிநீறு படி-5 இந்த இரண்டும் கலந்து உதடில்லாப் பானையில்கொட்டி பானையின் மேல் நின்று வழிந்தோடும்படி அதில் மேலிருந்து ஜலம் ஊற்றுகிறது. அதன்கீழ் சட்டிவைத்துப் பானையின் மேனின்று வழியும் ஜலத்தைப் பிடித்துக் கொள்ளவேண்டும். வழியும் ஜலமானது வெள்ளை நிறமாக வருகிறவரையில் ஜலம் விடவேண்டும். இப்படிக் கீழ்ச்சட்டியில் வடிந்த ஜலத்தை முன்போல அதில் ஊற்றி வழிந்தோடும் ஜலத்தைக் கீழ்ச்சட்டி வைத்துப் பிடித்துக் கொள்ளவேண்டும். மறுபடியும் கீழ்ச் ஜலத்தை முன்போல ஊற்றி முன்போல பிடித்துக் கொள்கிறது, இப்படி மடக்கி மடக்கி ஆறுதடவை செய்து வெள்ளை ஜலம் வருகிறதைப்பார்த்து நிறுத்திக்கொள்ளுகிறது. இவ்விதமெடுத்த ஜலம் படி-3 எடுத்து அதில் ஒருபடி விளக்கெண்ணெய் விட்டு துடுப்பினால் ஒரு நாழிகை வரையில் கிண்டுகிறது. இப்படி ஒரு நாளைக்கு மூன்று தடவையாக மூன்று நாள் கிண்டி நாலாவதுநாள் அது கெட்டியாய்க் கற் போலாகும். அந்தப் பதத்தில் வேறு பானையில் அதைப்போட்டு கெட்டியாயிருப்பதை யெல்லாம் உடைத்துப் போடுகிறது. அடுப்பேற்றித் தீப்போட்டுக் காய்ச்சுகிறது. அது நன்றாகப். பாகானபின் ஒரு அகப்பையிலெடுத்து கீழே ஊற்றிப்பார்த்தால் வெள்ளையாக இருக்கும். அந்தப் பதத்தைப்பார்த்து இறக்கிக்

கொள்ளுகிறது, ஓட்டை யிருக்கும் படியான அகப் பையா லெடுத்தால் அதிலுள்ள தண்ணீர் ஒழுகிப் போகும். சவுக்காரம் மாத்திரம் அந்த அகப்பையில் இருகி நிற்கும்; அதை மர அச்சில் ஊற்ற இரண்டு மூன்று நாழிகைக்குப் பிறகு ஆறி கெட்டியாய்ப் போகும். அதையெடுத்து சீவி வைத்துக்கொள்ளவும்.

ஷேக்த,

## வெள்ளைமெழுகு

மஞ்சள்மெழுகு சேர்-1, படிக்காரம் விராக னெடை-2, சௌக்காரம் பலம்-1, இம்மூன்றில் முன் னர் மெழுகை ஒரு சட்டியில் போட்டு அடுப்பிலேற்றிக் காய்ச்சி அதில் முன் படிக்காரத்தில் விராகனெடை-1, தூள்செய்து போட்டு நன்றாய் உருக்கிக் கீழிறக்கி, கொஞ்சம் ஆறினபின், மோர் சேர் 1-ல் மீதி ஒரு விராகனெடைபடிகாரத்தைதூள்செய்தும், உப்புவிராக னெடை-1, தூள்செய்துப் போட்டு இதில் கொஞ்ச மெடுத்து, முன் சித்தப்படுத்திய மெழுகில் விட்டு ஒரு அண்டாவில் இரண்டு தோண்டி ஜலம்விட்டு அதில் மேலெழுதிய சௌக்காரத்தில் பலம்-½, கரைத்து அந்த அண்டாவின்மேல் வஸ்திரம் போட்டு மேற்சொல்லிய மெழுகை அண்டாவிலூற்றி, வஸ்திரகாயஞ் செய்யவும். இவ்விதம் மூன்று தடவை மெழுகைக் காய்ச்சிக் கீழேயிறக்கி ஆறவிட்டு மேற்சொல்லிய மோர் கொஞ் சம்விட்டு கொஞ்சம் ஆறின பிறகு மேலெழுதியபடி அந்த அண்டாவில் வஸ்திரகாயஞ்செய்து பிறகு நாலாந் தடவை அந்த மெழுகைக் காய்ச்சிக் கீழேயிறக்கி கொஞ்சம் ஆறினபின் மேற்சொல்லிய அண்டாவில் சௌக்காரங் கலந்திருக்கிற தண்ணீரை கீழே யூற்றி விட்டு வேறு தெளிந்த தண்ணீர் இரண்டுதோண்டி அந்த அண்டாவில் ஊற்றி மேற்சொல்லிய மெழுகுச் சட்டியை ஒரு கையிலெடுத்துக்கொண்டு மெல்லிய தாரையாக அந்த அண்டாவில் விட்டுக்கீழே கையினல்

கடைகிறதுபோல் செய்யவும். இப்படிச்செய்தால் இந்த மெழுகானது மல்லிகைப்பூ இதழ்போலத் தனித்தனியாக இருக்கும். அதையெடுத்து சுத்தமானபலகையின் மேல் வெள்ளைத்துணியை நனைத்துப்போட்டு அதன் மேல் தெளித்து அதன்மேல் கொஞ்சம் மோர் தெளித்துக் கடுவெய்யிலில் காயவைத்து வெய்யிலில் மெழுகு உருகாமல் அது காயக்காய உப்புக் கரிப்புள்ள கிணற்று ஜலத்தை மேலே தெளித்துவரவேண்டும். இப்படி சாயந்திரம் வரையில் காயவைத்து இரண்டாம் நாளும் இப்படியே செய்யவேண்டும். இப்படி ஆறு நாள் ஆறு தடவை மேற்சொல்லிய பிரகாரம் செய்தால் மெழுகு வெள்ளையாகும்.

அப்புராவ்,

## லிங்கக்கட்டு

லிங்கம் ஒரேகட்டியாக விராகனெடை-10 கெட்டியாகப் பார்த்து வாங்கி அதன்மேல் வெள்ளைநூலால் கட்டி தெரியாமல்சுற்றி முலைப்பால் சேர் ½-யில் ஒரு நாழிகை ஊறவைத்து, அடுப்பில் அகல்வைத்து அதில் மேற்படி கட்டியை வைத்து வடவாக்கினித் தீப்போட்டு மேற்சொல்லிய பாலெல்லாவற்றையும் கரண்டியினுல் கொஞ்சம் கொஞ்சம் விட்டு சுருக்குக் கொடுக்கவும். இதுதான் லிங்கசுத்தி. பின்பு வெள்ளைநிற வெங்காயச்சார் சேர் 12-ல் சாம்பிராணி விராகனெடை-24 பொடிசெய்து போட்டு முன் சுத்தி செய்த லிங்கத்திற்கு எட்டு ஜாமம் சுருக்குக் கொடுக்க லிங்கம் கெட்டியாகும். அதையெடுத்து அதன்மேலுள்ள கல்மிஷங்களை நீக்க சிவந்தநிறம் நன்றாயிருக்கும்.

உட்கொள்ளும் விதம் :—இந்த ஔஷதம் சன்னி, சைத்தியவாய்வு, நீர்க்கோர்வை, வாதவுபத்திரம் இவைகளெல்லாவற்றிற்கும் அரைப்பணவெடை ஒரு பணவெடை கொடுக்கத் தீரும்.

லிங்கக்கட்டு (வேறு)

மேற்சொல்லியபடி பாலில் சுத்தி செய்த லிங்கம் விராகனெடை-10 வேப்பங்காய் முத்தினதாய்க் கொண்டுவந்து நசுக்கி எட்டுச்சேர் ரசமெடுத்து நாலு ஜாமம் சுருக்குக் கொடுக்கக் கட்டும். இந்த ஔஷதம் பெரிய ரோகங்களுக்குக் கொடுக்கலாம்.

லிங்கக்கட்டு (வேறு)

முன்சொல்லியபடி பாலில் சுத்திசெய்த லிங்கம் விராகனெடை-10, சாம்பிராணி பலம்-1, கற்பூரம் விராகனெடை-5 இந்த இரண்டையும் கல்வத்தில் நெகிழ அரைத்தால் தைலம் போலாகும்; அதை கல்வத்தில்வைத்து இரண்டாம்நாள் மேற்படி தைலத்தை சகலாத்துத் துணியில் தடவி லிங்கத்துக்குச்சுற்றி கொளுத்திவிட்டால் எரியும்; எரிந்தாறினபின் முன் செய்ததுபோல செய்யவும். இப்படித் தைலமெல்லாம் செல்கிறவரையில் செய்தால் கட்டும்; அது கொளுத்துகிறதில் ரொம்பவும் ஜாக்கிரதையாய்க் கட்டி கருகாமல் செய்யவேண்டும். உபாயமான வியாதிக்குக் கொடுக்கலாம்.

லிங்கக்கட்டு (வேறு)

மேற்சொல்லிய லிங்கம் விராகனெடை - 10, கொசுத்தேன் சேர்-2, தேனைச் சட்டியில் விட்டு லிங்கத்தை அதில் வைத்து மேற் சட்டி மூடி வடவாக்கினித் தீப்போட்டு தேன் சுண்டின பிறகு கொஞ்ச மிச்சப்பட்டு அழுக்குடன் கொஞ்சமிருக்கையில் சிகப்பாயிருக்கும் பக்குவத்தில் இறக்கிக்கொள்ளவும். லிங்கங் கட்டும். இந்த ஔஷதம் மறுமேகம் முதலியவைகளுக்காகும்.

லிங்கக்கட்டு (வேறு)

லிங்கம்-5 அல்லது 10-விராகனெடை ஒரே கட்டியாயெடுத்து, கெந்தகம் விராகனெடை-10, சூடம் விராக

னெடை-10, இந்த இரண்டும் தூள்செய்து ஒரு சிட்டிகை ஒரு இரும்பு சட்டியிற்போட்டு சட்டியை நெருப்பின்மேல் வைத்து மேற்சொல்லிய தூள் உருகி நீரான வுடன் மேற்படி கட்டியை அதிற்போட்டு புரட்டிக் கொடுக்கவும். இப்படி அந்தத்தூள் எல்லாம் முடிகிற வரையில் செய்யவும். தீபாக்கினியா யிருக்கவேண்டும். தீ அதிகமானல் பற்றியெரிந்துபோம்.

## சயநீர் லிங்கக்கட்டு

வெங்காரம் சாணிப்பாலிற் சுத்திசெய்து வறுத்தது பலம்-1, கரியுப்பு பலம்-1 இந்த இரண்டும் தூள் செய்து அந்தத்தூளை ஓட்டில்போட்டு கொஞ்சம் வெண்மையாகிறவரையில் வறுத்து எடுத்து இந்த தூளிற்கு சமனெடை நவச்சாரம் சேர்த்துப் பனியில்வைக்க தண்ணீராகும். அந்த நீரை யெடுத்துக்கொள்ளவும். பனியில்லாத காலங்களில் மேற்சொல்லிய தூளைக் கல்வத்திற்போட்டு ஒரு சட்டியால் மூடி மேலே ஈரத்துணியால் மூடிவைத்தால் தண்ணீராகும். இதுதான் சயநீரெனப்படும்.

மேற்சொல்லிய சயநீர் அரைச்சேர், சூடம் விராகனெடை-1, செவ்வீரம் விராகனெடை-1 இந்த இரண்டும் தூள்செய்து அதிற்போட்டு லிங்கக்கட்டி ஒரே கட்டியாய் ஐந்து அல்லது பத்து விராகனெடை வாங்கி குறட்டினல் பிடித்துக்கொண்டு இந்த சயநீரில் துவைத்து வாட்டவேண்டும். இவ்விதம் சயநீர் எல்லாம் முடிந்தபின், சூடம் விராகனெடை-10, கெந்தகம் விராகனெடை-10, இந்த இரண்டும் தூள்செய்து இதை முன்சொன்னபடி ஓட்டில் ஒரு சிட்டிகைபோட்டு அது உருகினபின் கட்டியை அதிற்போட்டுப் புறட்டுகிறது. இப்படி இந்தத்தூள் முடிகிறவரையில் செய்து எடுக்கக் கட்டும்.

## சோர்ண லிங்கம்

(இம்முறை மிக அபூர்வமானது இதனால் அனேக வியாதிகள் தீரும்; ஆனால் இதை அதிக சாக்கிரதையாய்ச் செய்யவேண்டும்)

லிங்கம் சுத்திசெய்தது விராகனெடை-5½, ஒரு சிறு தாம்பிர செம்பில் காடி ஜலம், பொற்றலை கையான்சார், குப்பமேனிச்சார் இம்மூன்றும் சமபாக மாகவிட்டு கந்தகம், மனோசிலை, தாளகம், நவச்சாரம், ரசம், ரசகற்பூரம், சூடம், இந்த ஏழும் வகை யொன்றுக்கு விராகனெடை-1, இவற்றுள் இரசம், ரசகற்பூரம் இவ் விரண்டையும் வெற்றிலைச்சாறு குப்பைமேனிசாறு ஆகிய இவற்றாலரைத்து லிங்கக் கட்டிக்குத் தடவி மற்ற ஐந்து சரக்கையும் தூள் செய்து மேற்படி செம்பில் போட்டு கட்டியை குறட்டினால் அசையாமல் எடுத்து கொம்புக்குள் வைத்து அந்த செம்பு வாய்க்கு ஓடுமூடி சீலைமண் செய்து முழங்காலளவுள்ள பள்ளத்தில் ஒருமாதம் புதைத்துவைத்து பின்பு எடுத்து வேறு ஒரு ஓட்டில் சிறு துவாரஞ்செய்து, அந்தத் துவாரத்தை கிஷ்ணப் பிரேகத் தகட்டில் ஆலம்பால் தடவி அடைத்து அப் பிரேக ஓரத்திற்கு சீலைமண்செய்து சிறிய அடுப்பில் வைத்து வடவாக்கினித் தீப்போட்டு மேற் சொல்லிய ரசத்தி லிருக்கப்பட்ட கட்டியை எடுத்து அப்பிரேகத் தகட்டின்மேல் வைத்து செம்பிலிருக்கிற தண்ணீரை ஒரு குச்சியில் துணிசுற்றி அதனால் மேற்படி தண்ணீ ரில் நனைத்து லிங்கக் கட்டிக்குச் சுருக்குக் கொடுக்கவும். இப்படி மேற்படி தண்ணீர் முடிகிறவரையில் ஒருநா லிரண்டுனாளானாலும் கொடுக்கவேண்டும். மிகவும் ஜாக் கிரதையாகச் செய்யவும். கட்டிக்குக் கருப்பேறக் கூடாது. எலுமிச்சம்பழச்சார் பலம்-1, இளநீர் ஜலம் பலம்-1, காடி பலம்-1 இம்மூன்றும் சேர்த்து இதில் பஞ்சலவண உப்பு விராகனெடை-2½, செவ்வீரம் விராக

னெடை-1 இவ்விரண்டையும் எலுமிச்சம்பழச் சாற்று லரைத்துக் கட்டிக்குத் தடவி மேற் சொல்லிய தண்ணீரை இரும்பு சட்டியில் விட்டு மேற் சொல்லிய கட்டியை எட்டுநாள் வைக்கிறது. பிறகு சின்ன அடுப்புப் பற்றவைத்து ஒருமண் ஓட்டிற்குத் துவாரமிட்டு காசிக் குப்பியின் ஓட்டினல் மண் ஓட்டுத் துவாரத்தை யடைத்து ஓரத்தில் சீலைமண் செய்து மேற் சொல்லிய கட்டியை அதன்மேல் வைத்து குச்சியில் துணி சுற்றி அந்த ரசத்தில் தோய்த்துக் கட்டியைப் புறட்டிப் புறட்டிச் சுருக்குக் கொடுக்கிறது. சார் ஆகிறவரையில் கட்டி கருகாமல் கொடுக்கிறது பிறகு ஒருசேர் இளநீர் ஜலம் ஒரு இரும்புச் சட்டியில்விட்டு அதில் லிங்கக் கட்டியை ஒருநாள் ஊறவைத்து மறுநாள் அடுப்பில் வேறு ஒரு இருப்புச் சட்டியைவைத்து அதில் லிங்கக் கட்டியைவைத்து முன் இளநீரால் முன் சொன்ன பிரகாரம் இளநீர் எல்லாம் ஆகிற வரையில் சுருக்குக் கொடுக்கிறது. பிறகு தென்னம்பதனி சேர்-3 வாங்கி அதில் மேற்படி கட்டியை ஒருநாள் ஊறவைத்து முன் சொன்னபடி இருப்புச் சட்டியில் மேற்படி கட்டியை வைத்து மேற்படி பதனி முடிகிறவரையில் சுருக்குக் கொடுக்க லிங்கம் பொன்னிறமாகிக் கட்டும். இதற்கு சொர்ணலிங்கக்கட்டு என்று பெயர். செய்யும் முறையிற் றவறினல் ஒரு பாதி பொன்னிறமாகவும் மறு பாதி கருப்பு நிறமாகவும் இருக்கும். ஆகையால் மிகவும் ஜாக்கிறதையாகச் செய்யவும்.

அப்புராவு,

## பஞ்சலவண உப்பு முறை

இந்துப்பு, வெடியுப்பு, கெந்தவடியுப்பு, வளையலுப்பு, கரியுப்பு இவ்வைந்தும் வகை யொன்றுக்கு விராகனெடை-1, சவுட்டுப்பு படி-1 இதிலிரண்டுபடி தண்ணீர்விட்டு நன்றாய்ப் பிசைந்து வைத்துத் தெளிவு எடுத்து மேற்சொல்லிய உப்புகளைப்போட்டு செவ்வீரம்

விராகனெடை-1, அன்னபேதி விராகனெடை-2, சவுக்காரம் விராகனெடை-2 இம் மூன்றும் அந்தத் தண்ணீரிற்போட்டு அந்தச் சட்டியை சூரிய புடத்தில் வைத்துவந்தால் ஜலம் சுண்டி உப்பாகும். இதற்குப் பஞ்சலவண உப்பு என்று பெயர்.

அப்புறாவு,

### லிங்கக்கட்டு

சுத்திசெய்த லிங்கம் விராகனெடை-5 கோழி முட்டைக்கு மேலே சிறு துவாரஞ்செய்து அதில் இந்த லிங்கத்தைச்செலுத்தி முட்டைவாய்க்கு உளுந்துமாவினல் கவசம்செய்து கால்படி புழுங்கலரிசி வடிக்கிற பாண்டத்தில் சாதம் ஒரு கொதிவருகிற சமயத்தில் மேற்படி முட்டையை அதில்வைத்து சாதம் பக்குவமானவுடன் இறக்கி ஆறினபிறகு அந்த முட்டையை யெடுத்துக் கொள்ளுகிறது. இவ்விதமாய் 120-முட்டையில் பக்குவம் செய்தால் லிங்கம் கட்டுப்பட்டுப்போம். இந்த லிங்கத்தைச் சமயோசிதமாய்த் தக்க அனுபானத்தில் உட்கொண்டால் தாதுவிர்த்தி, இரத்தவிர்த்தி, பசிதீபனம் முதலியவை உண்டாம்; வியாதிகள் ஒன்றும் வராது.

அப்புறாவு,

### ஆநந்த பயிரவ மாத்திரை

இரசம் விராகனெடை-1, நெல்லிக்காய் கெந்தகம் விராகனெடை-1, லிங்கம் விராகனெடை-1, கருநாவி விராகனெடை-1, வெண்காரம் விராகனெடை-1 இவைகளை சுத்திசெய்து கல்வத்தில் இரண்டு ஜாமம் எலுமிச்சம் பழச்சாற்றால் அரைத்துப் பிறகு இஞ்சி ரசத்தினுலிரண்டு ஜாமம் அரைத்து மிளகுப் பிரமாணம் உருண்டைசெய்து நிழலில் உலர்த்தி ஒரு மண்டலம் வேப்பமர டப்பியில்வைத்து தானியபுடம் வைத்து எடுத்துக்கொள்ளவும்.

இதனால் தீரும் வியாதிகள்:

சுரம், ஜன்னிபாதசுரம், வாதரோகம், சூசிகவாய்வு, கிராணி, பாலர்களுக்குக்காணும் மாந்தரோகங்கள் ஆகியவை தீரும்.

## சிவநாம இரசம்

கருநாவி, ரசம், நெல்லிக்காய்கெந்தகம், திப்பிலி, லிங்கம், வெங்காரம், மனோசிலை, சுக்கு இந்த எட்டும் வகை யொன்றுக்கு விராகனெடை-1, மிளகுத்தூள் விராகனெடை-8 இவைகளெல்லாவற்றையும் ஏழுநாள் கருப்பாகிற வரையில் அரைத்து எடுத்துக்கொள்ளுகிறது. இது வாதரோகம் 80 சிலேற்றுமரோகம்-96 சுரம், சயித்தியம். ஜன்னி, பாம்புகடி, தேள்கொட்டு ஆகிய இவைகளுக்கெல்லாம் உபயோகப்படும்.

அ. ர. பலவாண பிள்ளை,

## அக்கினி குமார செந்தூரம்

குதிரை லாடத்தை நன்றாய்க்காய்ச்சி சாணிப் பாலில் துவைத்து எடுத்து இராவின அரப்பொடி சேர்-1 இதை இரண்டுநாள் காடியில் ஊறப்போட்டுப் பின்பு எலுமிச்சம்பழ ரசத்தில் ஊறவைத்து எடுத்தது 32-விராகனெடை, காந்தம் கொள்ளுத் தண்ணீரில் டோளாந்திரங்கட்டிக் கொதிக்கவைத்துச் சுத்திசெய்தது விராகனெடை-16, நெல்லிக்காய் கெந்தகம் விராகனெடை-8 ரசத்தை செங்கல் தூளுடன் சேர்த்தரைத்து ஊதி பிறகு மஞ்சள் தூளுடன் சேர்த்தரைத்து ஊதின ரசத்தை யெடுத்து வடிகட்டிக் கொள்ளுகிறது. இவ்விதமாகச் செய்த ரசம் விராகனெடை-4, மனோசிலை விராகனெடை-2 மேற்சொல்லிய வகை ஐந்தும் கற்றாழைச் சார்விட்டு எட்டு ஜாமம் அரைக்கிறது. செம்முள்ளி ரசம்விட்டு இரண்டு ஜாமம், குப்பைமேனிச்சார்விட்டு இரண்டு ஜாமம், வெற்றிலைச் சார்விட்டு இரண்டு ஜாமம், உத்தாமணிச்சார்விட்டு

நாலு ஜாமம், கொடிவேலிக் கஷாயத்திஞல் நாலு ஜாமம், அரைச்சேர் சுக்குக்கிஷாயத்தில் நாலு ஜாமம், மருதம்பட்டைக் கஷாயத்தில் நாலு ஜாமம், நாவற் பட்டை கஷாயத்தில் நாலு ஜாமம், கொம்புப்பாகை ரசத்தில் நாலு ஜாமம், முருங்கையிலைச்சாற்றில் நாலு ஜாமம் அரைத்து ஒரே பில்லையாகத் தட்டி நாகப் பட்டையை இடித்து ஒரு சட்டியில் கொஞ்சம்போட்டு அதற்குமேல் அந்த வில்லையை வைத்து அதன்மேலும் இந்தத் தூளைப்போட்டு மேல்சட்டி மூடி 4-சீலைமண் செய்து 30-ஜாமம் கிரமமாய்த் தீப்போட்டால் சிந்தூர மாகிறது. இன்னமொரு பாகமும் செய்யலாம். மேற் படிசிந்தூரத்தையே மடக்கி மடக்கி கற்ருழைச் சோற் றிஞலரைத்து ஆறு தடவை கெஜபுடம் போட்டால் அதிக வீரியமாயிருக்கும். ஆயிரம்விதமான வியாதி களுக்குக் கொடுக்கலாம்.

அப்புராவு,

## மேகத்தேண்ணெய்

(சகல கணத்துக்கும் உஷ்ண ரோகத்துக்கும் கொடுக்கலாம்)

கொட்டை முத்தெண்ணெய் சேர்-10, கற்ருழை சமூலம் இடித்தசார் சேர்-12, முடக்கொற்ருன்சார் சேர்-8, பிறமிய வழுக்கைச்சார் சேர்-8, பொன்ஞங் காணிச்சார் சேர்-5, கையாந்தகரைச்சார் சேர்-3, வில்வ இலைச்சார் சேர்-6, வெங்காயச்சார் சேர்-5, எலு மிச்சம்பழச்சார் சேர்-5, பசுவின்பால் சேர்-4, வல்லா ரைச்சார் சேர்-6, மணித்தகாளியிலைச்சார் சேர்-6, சிறு செருப்படியிலைச்சார் சேர்-6, வெந்தயம் சேர் அரைக்கால், கிராம்பு சேர் அரைக்கால் இவைகளில் ஒரு நாளொன்றுக்கு அக்ப்பட்ட வரையில் இரண்டு வகை மூன்றுவகை ரசம்விட்டுக் குழம்புப் பதமாக எரித்து எடுத்துவைக்கிறது. இந்தப்பிரகாரம் எட்டு நாள் செய்து மேற்சொல்லிய வெந்தயம் வறுத்துத்

தூள்செய்து போடுகிறது. கிராம்பு அரைத்துச் சேர்க்கிறது. கமலாக்கினியாயெரித்து மெழுகுபதத்தில் வடித்துக்கொள்ளுகிறது. சகலமான உஷ்ணத்துக்குக் கொடுக்கலாம்.

அப்புராவு.

## மேகத்தெண்ணெய் (வேறு)

கற்றாழைச்சருகு இடித்துத் தூள்செய்து தெள்ளினது சேர்-1, பொற்றலைக்கையாந்தகரையைக் காய வைத்து இடித்த தூள் சேர்-1, அவுரியிலையைக் காய வைத்து இடித்துத் தெள்ளினது சேர்-1, வல்லாரையிலைத்தூள் சேர்-1, கருப்புக்காக்கரட்டான் சமூலமும் கொஞ்சம் வேருஞ் சேர்த்து இடித்துத் தூள்செய்து தெள்ளினது சேர் 1, வெள்ளைக்காக்கரட்டான் சமூலமும் கொஞ்சம் வேருஞ் சேர்த்து இடித்துத் தெள்ளியது சேர்-1, பூண்டு சேர் காலே அரைக்கால், மிளகு சேர் காலே அரைக்கால் இவைகளெல்லாவற்றையும் அம்மியில் வைத்துக் கற்றாழைச் சாற்றினால் ஐந்து நாழிகையரைத்துச் சந்தன வில்லைபோல்செய்து காய வைத்து ஒருசேர் கொட்டைமுத்தெண்ணெய்க்கு மேற்படி வில்லையில் சேர் ½-போட்டு 15-நாள் சூரியபுடம் வைத்து எடுக்கத் தைலம் பக்குவமாகும்.

மேற்படி எண்ணெய் கொடுக்கிற விபரம்:—

ஒரு நாளொன்றுக்குக் கால்சேர் விழுக்காடு கொடுக்கலாம். மூன்று நாளைக்கு மேற்படி எண்ணெய் தேகத்தில் ஊறும்படியாக இருந்தால் தினம் குத்தெண்ணெய்யாகச் சாப்பிடலாம். உப்பில்லாப் பத்தியமாக இருக்கலாம் இச்சாப் பத்தியமாகவு மிருக்கலாம். இதனால் சகல உஷ்ண ரோகங்கள், வாதரோகம், மதுமேகம், சகல மேகங்கள், பக்ஷவாதம், வாயுகள், கருப்பஸ்திரீ வியாதிகள், வண்டுகடிகள், இரத்தப்பிரமிய ரோகங்கள், வெட்டை, சூலைக்கட்டு, இரணங்கள் இவை முதலியவை போகும்.

லிங்கக்கட்டு

லிங்கம் ஒரே கட்டியாய் விராகனெடை-10, மூலைப் பாலில் சுத்திசெய்து ஒரு ஓட்டில்வைத்து கீழே தீப் போட்டு புளிய இலைச்சார் சேர்-1, துரிஞ்சிப்பழச்சார் சேர்-1, புளியாரைச்சார் சேர்-1, நாரத்தங்காய்ச்சார் சேர்-1, சீயக்காயிலைச்சார் சேர்-1, கடார நாரத்தம் பழச்சார் சேர்-1, எலுமிச்சம்பழச்சார் சேர்-1, கொடி யெலுமிச்சம் பழச்சார் சேர்-1, நெல்லிக்காய்ச்சார் சேர்-1, வன்னிப்பட்டைச்சார் சேர்-1, தமரத்தம்பழச் சார் சேர்-1, கருவேலம்பட்டைச்சார் சேர்-1, மாதுளம் பழச்சார் சேர்-1, குச்சுத்த மறத்தை அல்லது அமுகூர் அல்லது புளிமாங்காய் அல்லது பெல்லம்புசார் சேர்-1, செம்பருத்திப்பூச்சார் சேர்-1, கிராம்பு கஷாயஞ் சேர்-1, மேற்சொல்லிய-16 வகைகளினால் சுருக்குக்கொடுத் தால் லிங்கம் கெட்டியாம். இந்த லிங்கம் சகல ரோகத் துக்கும் கொடுக்கலாம்.

வாட்டாத்து கியானியார்,

லிங்கக்கட்டு

வெள்ளைப்பூண்டை மெல்லிதாக அரைத்துத் துணியில் தடவி வத்திபோல சுருட்டி அனலில் வாட் டிப் பிழிந்தால் தைலம் வரும்; இந்தத் தைலம் சேர்-1 லிங்கக்கட்டி பலம்-1க்கு சுருக்குக்கொடுக்க லிங்கம் கட்டுப்படும். சகல வாதரோகங்களுக்கும் கொடுக்கலாம்.

பாப்பு வைத்தியர்

## மன்மத சிந்தாமணிலேகியம்

சுக்கு, திப்பிலி, மிளகு, கடுக்காய், தான்றிக்காய், நெல்லிமுள்ளி, ஜாதிக்காய், ஜாதிபத்திரி, கிராம்பு திசாவரம், சீரகம், சோம்பு, கசகசா, சிறுநாகப்பூ, பறங்கிப்பட்டை வகைக்கு சேர்-1, மல்லி, கோஷ்டம், கண்டத்திப்பிலி, அதிமதுரம், சன்னலவங்கப்பட்டை, துளசி, குருசாணியோமம், கடலைப்பருப்பு வகைக்குச்

சேர்-¼, உளுத்தம் பருப்பு சேர்-¼, குச்சிச்சிராயித்து, சிறுதேக்கு, காட்டுக் கிராம்பு, சாலாமிஸ்ரி, மயிதாலக் கடி, றூமிமஸ்தகி, இசுபகோல்விதை சமுத்திராஜோகி, பாதாம்பருப்பு, ஏலம், குங்குமப்பூ, திராக்ஷப்பழம், கூகைநீர், நறுவளிவிதை, பூனைக்காலிவிதை, நெருஞ்சி முள்ளி ஆடாதோடைவிதை, பூலாவிதை, முருங்கை விதை பொன்முசுட்டைவிதை, நீர்முள்ளிவிதை, நத்தைச்சூரிவிதை, தேற்றான்விதை, நரிப்பயிற்றம் விதை, நாயுருவிவிதை, துத்திவிதை, வாகைவிதை, கையாந்தகரைவிதை, ஊமத்தைவிதை, நாய்வேளை விதை, கண்டங்கத்திரிவிதை, துளசிவிதை, பொடு தலைவிதை, சாரப்பருப்பு, நாகப்பூ, தூதுவளை வெந்தயம், சிற்றரத்தை, பற்பாடகம், கஸ்தூரி மஞ்சள், நாட்டுமஞ்சள், கஞ்சாங்கோரை, உலர்த் தின ஆலந்துளிர், அல்லிக்கிழங்கு, கொட்டிக்கிழங்கு, கொண்டை சீனிக்கிழங்கு, நிலப்பனைக்கிழங்கு, அமுக் கராக்கிழங்கு தண்ணீர்விட்டான்கிழங்கு, செங்கழுநீர்க் கிழங்கு இக்கிழங்கு வகைகளெல்லாவற்றையும் காய வைத்து வற்றல்செய்து வகைக்குப் பலம்-½, கடைச் சரக்குகள் வகைக்குப் பலம்-½ இவ்விரண்டு வகைகளை யும் சேர்த்து இடித்து வஸ்திரகாயஞ் செய்துகொள்ள வும். சீந்தில் சருக்கரை பலம்-½, சுத்திசெய்த வெள் ளைக்குங்கிலியம் பலம்-½, ஆலம்பால், அத்திப்பால், இச் சிப்பால், ஒதியம்பால், பிராம்பால், செவ்வகத்திப்பூச் சார், பரித்திப்பிஞ்சிச்சார், ஆவாரம்பூச்சார் வகைக்குப் பலம்-½ இவற்றையும் மேற்படி சூரணத்துடன் சேர்த் துக் காயவைத்து மறுபடியும் இடித்து வஸ்திரகாயஞ் செய்து கொள்ள வேண்டும். மதனகாமேஸ்வரப்பூ, விராகனெடை-½, அபின் விராகனெடை-½, இவற்றை யும் மேற்படி சூரணத்தில் சேர்த்து சேலம் சருக்கரை சேர் 4-ல் ஒருபடி தண்ணீர்விட்டுக் கரைத்து வடிகட் டிப் பாகுசெய்து அதில் மேற்படி சூரணங்கள் எல்லாம் கலந்து, மூன்று விராகனெடை கஞ்சா நெய், பசுவின்

நெய் சேர்-3, தேன் சேர்-2 இவற்றையும் லேகியத்தில் கலந்து பக்குவமாய் லேகியம் செய்து கொள்ளவும். வேளை ஒன்றுக்கு கழற்சிக்காயளவாக இரண்டு வேளையும் உட்கொள்க.

இந்த மன்மத சிந்தாமணி லேகியத்தினால்
சொஸ்தமாகும் வியாதிகள்:—

84-வாதம், வாதமேகம் பித்தமேகம், தந்திமேகம், சிலேட்டுப்பிரமியம், இரத்தப்பிரமியம், மூத்திரகிரிச்சரம் கிராணி, யோனிசூலை, அஸ்திகததோஷம், அஸ்தி சுரம், எலும்புருக்கிதோஷம், தாதுநஷ்டம், தேகம் இளைத்தல், தேகநிறமாறல் முதலியவைகளாம். இச்சா பத்தியம்.

பாப்புவைத்தியர்,

## மன்மத சிந்தாமணி திருத்தி

முன்னெழுதிய மன்மத சிந்தாமணி லேகியத்தில் சருக்கரை தேன், நெய் இவை தவிர மற்ற சாமான்கள் கிழங்குகள், பால் இவைகளெல்லாம் சேர்த்து இடித்து ஒருபாத்திரத்தில் போட்டு ஆற்று ஜலம் இந்த சாமான்களுக்குமேல் ஒரு சாண் ஜலம் நிற்கும்படியாக ஊற்றி அறுபது நாழிகை ஊறவைத்துப்பிறகு மறுபானையில் ஊற்றி அந்தப் பானைவாயில் வாலைவைத்துத் திருத்தியிறக்கி அந்தத் திராவகத்துடன் கொடி முந்திரிப் பழம், பேரீச்சம்பழம், கொளிஞ்சிப்பழம், நாரத்தம் பழம், எலுமிச்சம்பழம், துரிஞ்சிப்பழம், மாதுளம்பழம், தமரத்தம்பழம், அத்திப்பழம், இலந்தைப்பழம், நறுவுளிப்பழம். விளாம்பழம், பாலைப்பழம், கம்பளிப்பூச்சிப் பழம், கோசிப்பழம், அஞசிப்பழம், ரஸ்தாளிப்பழம், பச்சைநாடம்பழம், கொய்யாப்பழம், சன்னக்கரும்பு, நாணற்கரும்பு இவைகளெல்லாம் வகை யொன்றுக்கு கால் சேர் சாறெடுத்து முன் திருத்தியில் சேர்த்து இரண்டாந்தடவையும் முறைப்படி திருத்தியிறக்கி சீசாவில்

பத்திரப்படுத்தவும். வேளை யொன்றுக்கு இரண்டு விராகனெடையாக இரண்டுவேளையும் பானம் செய்ய லாம். மூன்கண்ட வியாதிகள் தீரும். இச்சாப்பத்தியம்.

வாட்டாத்து கியானியார்,

## அடிகாயப்பற்று

வரகு படி-¼, கேழ்வரகு படி-¼ இவ்விரண்டையும் வறுத்தும், கரியபோளம் பலம்-1, காசிக்கட்டி பலம்-1, கார்போக அரிசி பலம்-½, கடுக்காய் பலம்-1, களிப் பாக்கு பலம்-1, குக்கில் பலம்-1 இவற்றைத் தூள் செய்து சேர்த்துப் பரலைப்பட்டை கஷாயத்தினல் நேக அரைத்து எலுமிச்சம்பழச் சாற்றிற் கலந்து பற்றுப் போட அடிப்பட்ட வீக்கம், இரத்தக்கட்டு, அதனலுண் டான மோதுவலி இவைகளெல்லாம் சொஸ்தமாகும்.

கியானியார்,

## வாதராட்சஸ மாத்திரை

ரசம் சேர் அரையே அரைக்கால், கருனவி சேர்-¼, வெண்காரம் சேர்-¼, கெந்தகம்சேர்-1, மிளகுசேர் காலே அரைக்கால், மனேசிலை சேர் அரைக்கால், அயபஸ்பம் சேர் அரையே அரைக்கால், லிங்கம் சேர்-¼, காசிக்கட்டி சேர்அரைக்கால், இந்த ஒன்பது சரக்கையும் கல்வத் திற்போட்டுக் கொடிவேலிக்கஷாயத்தினல் அல்லது காட்டாமணக்குப் பாலினல் 12-ஜாமம் அரைத்து அதை வில்லைசெய்து தாளிச்சட்டியில் மணற்போட்டு அடுப்பில் வைத்து அந்த மணலின்மேல் கிளிஞ்சில் வைத்து அதில் வில்லை வைத்து எரித்து எடுத்துக் கொள்ளவும்; தக்க அனுபானத்திற்கொடுக்க வாயு முதலியவை தீரும்.

கியானியார்,

## இராஜபூபதி மாத்திரை

அயபஸ்பம், ரசம், கெந்தகம், மிளகு, கருனபி இவை வகை யொன்க்குச் சேர் காலே அரைக்கால்,

தாளகம் சேர் காலே அரைக்கால் இந்த ஆறு வகையுஞ் சேர்த்து பெருஞ் செருப்படிச்சார் விட்டு எட்டு ஜாமம் அரைத்து, இஞ்சிச் சாற்றில் எட்டு ஜாமம் அரைத்து வில்லைதட்டி உலர்த்தி, வாலுகாயந்திரத்தில் வைத்து எரித்துப் பாகமாய் மாத்திரைசெய்து வாதசுரம், பித்தசுரம், ஜன்னி, தோஷம் ஆகிய ரோகங்களுக்கு அனுபான விசேஷங்களிற் கொடுக்கலாம்.

கியானியார்,

## சிந்தாமணி மாத்திரை

அயசிந்தூரம், நிமிளைசிந்தூரம், ரசசிந்தூரம், காரீயசிந்தூரம் இவை வகை 1-க்கு சேர் காலே அரைக்கால், ரசகற்பூரம் சேர்-¼, மனோசிலை சேர்-¼, காந்தம், சுரசா, தாளகம் இந்த மூன்று தினுசும் உருக்கினது பலம்-1, லிங்கம் சேர் ஒண்ணேமுக்காலே யரைக்கால் இவைகளெல்லாவற்றையும் கொடிவேலிக் கஷாயத்தினல் 12-ஜாமம் அரைத்து வில்லைதட்டிக் காயவைத்து கருங்கோழிமுட்டையில் வைத்து வாலுகாயந்திரத்தில் எரித்துப் பதமாயெடுத்துக் கொள்ளவும். சுரம், தோஷம், ஜன்னி, க்ஷயம், வாய்வு இவைகளுக்கெல்லாம் தக்க அனுபானத்திற் கொடுக்கவேண்டியது.

கியானியார்,

## குன்மக்குடோரி மாத்திரை

துத்திநாகம் பலம்-1 உருக்கி, அதில் மனோசிலைத்தூள் பலம்-1 போட்டுக் குழஞ்சிவேரினல் புறட்டிக் கொடுத்தால் நல்ல பஸ்பமாகும். அந்தப் பஸ்பத்துடன் செவ்வீரம் பலம்-1, லிங்கம் பலம்-1, ரசம் பலம்-1, கெந்தகம் பலம்-1, விடத்தரை வேர்ப்பட்டை பலம்-1 இவைகளெல்லாவற்றையும் எலுமிச்சம்பழச் சாற்றல் ஆறு ஜாமம் அரைத்து வில்லைசெய்து உலர்த்தி வாலுகாயந்திரத்தில் வைத்து எரித்துக் கைமுறையாக

எடுத்துத் தக்க அனுபானத்தில் கொடுக்க அஷ்டகுன்மம், வாயு முதலியவை தீரும்.

கியானியார்,

## லிங்கக்கட்டு

லிங்கம் பலம்-1¼, தாளகம் பலம்-1¼, கந்தகம் விராகனெடை-9, சூடம் பலம்-¾, செவ்வீரம் பலம்-½ இவற்றுள் லிங்கம் தவிர மற்ற சரக்கு நாலும் தூள் செய்து முட்டையைப் பொத்து அதில் அரைவாசித் தூளைப்போட்டு அதன்மேல் லிங்கத்தைவைத்து மற்ற பாதித்தூளை மேற்படி லிங்கத்தின்மேற் போட்டு வாலுகாயந்திரத்தில் வைத்து எரிக்கவும். இந்தப் பிரகாரம் மடக்கி மடக்கி ஐந்து தடவையெரித்து அந்தந்த சமயத்தில் கைமுறையாக எடுத்துக்கொள்ளவும். சுரம், தோஷம், வாயு, மேகம் இவைகளுக்குத் தக்க அனுபானத்தில் கொடுக்கலாம்.

கியானியார்,

## சுழிகண குடோரி

மேற்சொல்லிய லிங்கக் கட்டில் லிங்கக் கட்டியின் கீழ்மே லிருந்தெடுத்த தூளையெல்லாம் சேர்த்து அதனுடன் ஜாதிலிங்கம் சேர் அரைக்கால், ரசகற்பூரம் சேர் அரைக்கால் சேர்த்து கையாந்தகரைச்சார்விட்டு எட்டு ஜாமம் அரைத்து வில்லைத்தட்டிக் காயவைத்து வாலுகாயந்திரத்தில் வைத்து கைபாகமா யெரித்து மாத்திரை செய்து கொள்ளுகிறது. சளிரோகம், கபரோகம் கபவாயு இவைகளுக்குத் தக்க அனுபானங்களில் கொடுக்கத் தீரும்.

கியானியார்,

## ரசகற்பூரக் கட்டு

ரசகற்பூரம் விராகனெடை-5, ஆறுதடவை சுத்தி செய்த கெந்தகம் பலம்-1 இந்த இரண்டும் வாலுகாயந்திரத்தில் வைத்து கைபாகமாக எரித்து எடுத்து

தோஷம், ஜன்னி, வாயு ஆகியவைகளுக்குத் தக்க அனுபானத்தில் கொடுக்கத் தீரும். சிரங்கிற்குப் பசுவின் வெண்ணெயில் குழைத்துப் போடவும்.

கியானியார்,

## ஆநந்த பயிரவ மாத்திரை

ரசம் பலம்-3, கெந்தகம் பலம்-3, மனோசிலை பலம்-3, லிங்கம் பலம்-3, வெண்காரம் பலம்-3, கருனவி பலம்-3, மிளகு பலம்-3 இவைகளெல்லாவற்றையும் கற்றாழைச் சாற்றினல் ஆறுஜாமம், எலுமிச்சம்பழச் சாற்றினல் இரண்டு ஜாமம் அரைத்து வில்லைதட்டி யுலர்த்தி வாலுகாயந்திரத்தில் வைத்தெரித்து எடுத்து தக்க அனுபானத்தில் கொடுக்க ஜன்னிபாதம், தோஷம், சூலைக் கட்டு இவைகளெல்லாம் குணமாகும்.

கியானியார்,

## பூரணசந்திரோதய மாத்திரை

மனோசிலை பலம்-1, ரசசிந்தூரம் பலம்-2, அயசிந்தூரம் பலம்-3, காரீயபஸ்பம் பலம்-3, நிமிளைசிந்தூரம் பலம்-2, கெந்தகம் பலம்-3, லிங்கம் பலம்-7 இவைகளெல்லாவற்றையும் பொடித்துச் சேர்த்துக் கோழி முட்டையின் கருவை நீக்கி, மேற்படி முட்டைக்கு நான்கு சீலைமண் செய்து உலர்த்தி அதற்குள்போட்டு வாலுகாயந்திரத்தில் வைத்தெரித்தெடுக்க ஒரே கட்டியாய் இருக்கும். தக்க அனுபானங்களில் கொடுத்தால் தோஷம், ஜன்னிவாதம், க்ஷயம், வாயு இவைகளெல்லாம் குணமாகும்.

கியானியார்,

## அர்த்த நாரீசுவர மாத்திரை

ரசசிந்தூரம் பலம்-1, லிங்கம் பலம்-2, காரீயசிந்தூரம் பலம்-2, நிமிளைசிந்தூரம் பலம்-1, கெந்தகம் பலம்-2 இந்த ஐந்தும் ஈசுவரபாக சரக்காம். மனோசிலை பலம்-1, தாளகம் பலம்-½, நாகபஸ்பம் பலம்-½, வெள்ளீய பஸ்

பம் பலம்-½, ரசம் பலம்-½, ரசகற்பூரம் பலம்-2, கெந்தகம் பலம்-2 இந்த ஏழுவகையும் ஈசுவரிபாக சரக்காம். இந்த இரண்டு பாக சரக்குகளையும் பொடித்துக் கலந்து வாலுகாயந்திரத்தில் வைத்தெரித்தெடுக்க மாத்திரையாகும். சுரம், ஜன்னிபாதம், குன்மம் இவைகளுக்குத் தக்க அனுபானங்களிற் கொடுத்தால் குணமாகும்.

கியானியார்,

## இரகுராமபாண மாத்திரை

ரசம் பலம்-1, கெந்தகம் பலம்-2, மனோசிலை பலம்-1½, தாளகம் பலம்-1, ரசகற்பூரம் பலம்-2, கொம்பரக்கு பலம்-1, சாம்பிராணி பலம்-1 இவைகளெல்லாவற்றையும் காட்டா மணக்குப் பாலில் அரைத்து வில்லை செய்து புடம்போட்டு மாத்திரைசெய்து சகல ரோகத்துக்கும் ரோகம் அறிந்து அனுபான சகிதமாய்க் கொடுத்தால் அவை குணப்படும்.

கியானியார்,

## காலாநந்த வாதராக்ஷஸ மாத்திரை

ரசம் பலம்-3, கெந்தகம் பலம்-3, முருதார்சிங்கு பலம்-3, நிமிளை சிந்தூரம் பலம்-3 இந்நான்கையும் எலுமிச்சம்பழச்சாற்ருல் நாலுஜாமம் அரைத்து உருண்டை செய்து புடம்போட மாத்திரையாகும். தக்க அனுபானங்களிற் கொடுத்தால் சகல ரோகங்களும் குணமாகும்.

கியானியார்,

## நரசிம்ம மாத்திரை

ரசம் பலம்-2, கெந்தகம் பலம்-2, இரும்பு அரப்பொடி பலம்-2, எகு அரப்பொடி பலம்-2 இந்த நான்கையும் புடம்போட்டு மாத்திரை செய்து பக்ஷவாதம், ஜன்னி, குன்மவாய்வு இவைகளுக்கெல்லாம் அனுபானங்களிற் கொடுத்தால் அவை குணமாகும்.

கியானியார்,

## மேகநாத மாத்திரை

காரீய ‌சிந்தூரம் பலம்-$\frac{1}{2}$, ஜாதிலிங்கம் பலம்-$\frac{1}{2}$, ரச கற்பூரம் பலம்-$\frac{1}{4}$, கெந்தகம் பலம்-$\frac{1}{2}$ இந்த நான்கையும் வாலுகாயந்திரத்தில் உருக்கி மாத்திரை செய்து மேகத்துக்குத்தக்க அனுபானங்களிற் கொடுத்தால் குணமாகும்.

கியானியார்,

## உருக்குவாத ராக்ஷச மாத்திரை

ரசம் சேர்-அரையே அரைக்கால், கெந்தகம் சேர்-1, லோகம் சேர்-காலே அரைக்கால், கருனவி சேர்-$\frac{1}{4}$, மிளகு சேர்-காலே அரைக்கால், லிங்கம் சேர்-$\frac{1}{4}$, வெண்காரம் சேர்-$\frac{1}{4}$, மஞேசிலை சேர்$\frac{1}{8}$, காந்தம் சேர்-$\frac{1}{8}$, இவைகளெல்லாவற்றையும் வாலுகா யந்திரத்தில் உருக்கி ஜன்னி, தோஷம், வாதம், வாயுகள் ஆகிய இவைகளுக்குத் தக்க அனுபானங்களிற் கொடுத்தால் அவை குணமாகும்.

கியானியார்,

## கெந்தகத் தைலம்

விளக்கெண்ணெய் சேர்-1, கறுப்புச்சேங்கொட்டை சேர்-1, கெந்தகம் பலம்-1 இந்த மூன்றையும் தைலம் இறக்கி அதில் விராகனெடை-2, பாலரசம் விராகனெடை-1 இந்த இரண்டும் நன்ருய்க் கலந்து தேன் விட்டு மத்தித்து வேளை 1-க்கு 2-பணவெடை கொடுக்க ஜன்னி, வாதம், தோஷம், மேகம், வாயு விரணங்கள், பக்ஷவாதம் இவைகளெல்லாம் குணமாகும். இச்சாப்பத்தியம்.

கியானியார்,

## ஸ்நான தைலம்

நல்லெண்ணெய் சேர்-4, கற்ருழைச் சேர்-8, செவ்விளநீர் ஜலம் சேர்-8, பொற்றிலைக் கையாந்தகரைச்

சார் சேர்-4, நெல்லிக்காய்ச்சார் சேர்-4, தாமரைக் கிழங்கு சேர்-4, கையாந்தகரைச்சார் சேர்-4, எலுமிச் சம்பழச்சார் சேர்-4, பசுவின்பால் சேர்-12, சந்தனத் தூள் பலம்-30 இதில் ஆறுமரக்கால் தண்ணீர்விட்டு-1½ மரக்காலாகக் காய்ச்சி இறக்கி, அதில் சுக்கு, திப்பிலி, மிளகு, ஜாதிக்காய், ஜாதிப்பத்திரி, கிராம்பு, கோஷ்டம், சிறுநாகப்பூ, வெட்டிவேர், அகில்கட்டை, வால் மிளகு, கஸ்தூரிமஞ்சள், சிறுதேக்கு, சீரகம், கொத்து மல்லி, அக்கராகாரம் வகை யொன்றுக்கு விராக னெடை-2, இவற்றைப் பசுவின்பால்விட்டு அரைத்து பாலில் மேற்படி சாமானைக்கரைத்து எண்ணெயிற் போட்டு கஷாயமும் சார் வகைகளையும் சேர்த்துப் பத மாய்க் காய்ச்சி இறக்கிக்கொள்ளவும். தைல வடிகடத் தில் பச்சைகற்பூரம்,குங்குமப்பூ, கஸ்தூரி, கோரோசனை, புனுகு வகையொன்றுக்கு விராகனெடை-2 இவற்றைப் பொடித்துப் போட்டு தைலத்தை யூற்றிவைக்கவும். தைலத்தை ஆரோக்கிய ஸ்நானம் செய்துவந்தால் மூல வாயு, கபாலவாயு, மேககாங்கை, வாயு, குன்மம், அரோசிகம் முதலிய சகல ரோகங்களும் நிவாரணமாகும்.

கியானியார்,

## கணத் தைலம்

கொட்டைமுத் தெண்ணெய் சேர்-2, பசுவின்பால் சேர்-2, முலைப்பால் சேர்-¼, இளநீர்ஜலம் சேர்-2, நறு வளிப்பட்டைச்சார் சேர்-2, துளசிச் சார் சேர்-2, நெல்லிக்காய்ச் சார் சேர்-2, பொன்னாங்காணிச்சார் சேர்-2, முசுமுசுக்கைச்சார் சேர்-2, சீந்திற்கொடியிலைச் சார் சேர்-2, வல்லாரைச்சார் சேர்-2, முடக்கொற்றான் சார் சேர்-2, கற்றாழைச்சார் சேர்-2, தண்ணீர்விட் டான் கிழங்குச்சார் சேர்-1, கையாந்தகரைச்சார் சேர்-2, கற்பூரவல்லிச்சார் சேர்-2, சிறுகீரைச்சார் சேர்-2, கரும்புச்சார் சேர்-2 இவற்றை யொன்றாய்க் கலந்து நிலப்பனைவேர், நன்னாரிவேர், வெட்டிவேர்,

விளாவேர், கோரைக் கிழங்கு, தாமரைவளையம், கொட்டிக்கிழங்கு, நெய்தற்கிழங்கு வகையொன்றுக்குப் பலம் ஒன்று இவற்றையிடித்து அதில் இரண்டு மரக்கால் தண்ணீர்விட்டு கால்மரக்காலாகக் காய்ச்சி மூன் மருந்துடன் கலந்து சுக்கு, மிளகு, திப்பிலி, கடுக்காய், தான்றிக்காய், நெல்லிமுள்ளி, சிற்றரத்தை, ஏலம், அதிமதுரம், சீரகம், கருஞ்சீரகம், செம்மரக் கட்டை, சந்தனம், வெந்தயம், மாசிக்காய், ஜாதிக்காய், பத்திரி, கிராம்பு வகையொன்றுக்கு விராகனெடை-2 இவற்றில் இளநீர் ஜலம்விட்டு மெல்லீசாக அரைத்து மேற்படி இளநீர் ஜலத்தில் கரைத்து ஒன்றாய்க்கலந்து அடுப்பேற்றிப் பதமாயிறக்கிக்கொள்ளவும். அந்த எண்ணெயில் பேரீச்சங்காய், சர்க்கரை, கற்கண்டு வகைக்கு விராகனெடை-2 பொடித்துப் போட்டு வைத்துக்கொண்டு காலையில் ஒரு கரண்டி, மாலையில் ஒரு கரண்டி விழுக்காடு கொடுத்தால் பதினெட்டு கணமும் குணமாகும்.

கியானியார்,

## வேப்பெண்ணெய் நெய்

வேப்பெண்ணெய் நெய் கைப்பாகமாகச் செய்துக் கொண்டு 80-வாதத்துக்கும் லிங்கக்கட்டு அரைப்பண வெடை மத்தித்து காலையில் அரைப்பலம் நெய், மாலையில் அரைப்பலம் நெய் கொடுக்கவும். பத்தியம் புளிப்பு, உறைப்பு, வாயு பதார்த்தம் இவை ஆகாது. இச்சாப் பத்தியம். வேப்பெண்ணெய் பாகம் பின்னர் சொல்லப்படும்.

பாப்பு வைத்தியர்,

## மகா வில்வாதி லேகியம்

மேற்புரணியெடுத்த வில்வவேர் சேர்-3, நன்னாரி வேர், குழஞ்சிவேர், நாரத்தம்வேர், எலுமிச்சம்வேர், விளாவேர், குட்டிவிளாவேர், முசுமுசுக்கைவேர், வறப்

பூலாவேர், கீழாநெல்லிவேர், ஆவாரைவேர், அம்மான் பச்சரிசிவேர், சிறுகீரைவேர், பொன்னுங்காணிவேர், நரிப்பயற்றம்வேர், நெய்ச்சுண்டிவேர், அறுகம்வேர், அத்திவேர், துத்திவேர், நறுவுளிவேர், சங்கம்வேர், பனைவேர், ஈச்சம்வேர், கருவேலம்வேர், அழுக்கரா வேர், நிலாவாரைவேர், சீயக்காய்வேர் இதை மேற் புரணி நீக்கிக் கட்டைவேர் எடுத்துக்கொள்ளவேண் டும். முசுட்டைவேர், ஊசிப்பாலைவேர், பேராமுட்டி வேர், சிற்றாமுட்டிவேர், தகரைவேர் இதை மேற்புரணி நீக்கிக் கட்டைவேர் எடுத்துக்கொள்ளவும். தக்காளி வேர், சீந்தில்வேர் இதை மேற்புரணி நீக்கி எடுத்துக் கொள்ளவும். வெட்டிவேர், விலாமிச்சம்வேர் வகைக் குப் பலம்-$1\frac{1}{2}$, சீயக்காயீர்க்கு, கருவேப்பிலையீர்க்கு, நெல்லியீர்க்கு, வெட்பாலையீர்க்கு, புளியனீர்க்கு, ஆவாரையீர்க்கு, துத்தியீர்க்கு, வில்வயீர்க்கு, கஞ்சாங் கோரையீர்க்கு, நன்னாரியீர்க்கு, மாயீர்க்கு ஒதியமீர்க்கு, வேலனீர்க்கு, விடத்தரையீர்க்கு, இவைகள் வகைக்குப் பலம்-1, கோரைக்கிழங்கு, ஆம்பல்கிழங்கு, நெய்தல் கிழங்கு, அல்லிக்கிழங்கு, செங்கழுநீர்க்கிழங்கு, நிலப் பனைக்கிழங்கு, குண்டோசிக்கிழங்கு, தண்ணீர்விட் டான்கிழங்கு, கொட்டிக்கிழங்கு, செவ்வல்லிக்கிழங்கு, பனங்கிழங்கு, பச்சைநாடன்வாழைக்கிழங்கு, இந்தக் கிழங்குகளை வற்றலாகக் காயவைத்து வகையொன் றுக்குப் பலம்-1, சுக்கு, திப்பிலி, மிளகு, தாளிசப்பத் திரி, லவங்கப்பத்திரி, சிறுநாகப்பூ, சீரகம், கொத்து மல்லி, கூகைநீர், அதிமதுரம், வாய்விளங்கம், சடா மாஞ்சில், கருஞ்சீரகம், கடுக்காய்த்தோல், தான்றிக் காய்த்தோல், நெல்லிமுள்ளித்தோல், கோஷ்டம், செவியம், காட்டுத்திப்பிலி, மூலம், சந்தனத்தூள், பறங்கிப்பட்டை, சன்னலவங்கப்பட்டை, பெருலவங் கப்பட்டை, கிரந்தி தகரம், சிறுதேக்கு, கற்கடகசிங்கி, துருலெப்பை, பற்பாடகம், அரத்தை, சன்பகப்பூ, வால்மிளகு, நீர்முள்ளிவிதை, தக்கோலம், சோம்பு,

வெந்தயம், தாமரைவளையம், இஸ்கோல்விதை, தேற்ருங்கொட்டை இவைகளெல்லாம் வகைக்குப் பலம்-1 எல்லாவற்றையும் சேர்த்து இடித்து வஸ்திரகாயஞ் செய்து, பாதம்பருப்பு, மேல்தோல் நீக்கிக்கொள்ளவும். பருத்திப்பருப்பு, திராட்சப்பழம், பேரீச்சம் பழம் வகைக்குப் பலம்-1 இந்த வகைகளை மேற்படி சூரணங்களுடன்சேர்த்து அரைத்து ஜாதிக்காய் விராகனெடை-4, ஜாதிப்பத்திரி விராகனெடை-4, கிராம்பு விராகனெடை $2\frac{1}{2}$, ஏலம் விராகனெடை-3, குங்குமப்பூ விராகனெடை-$\frac{1}{2}$, கோரோசனம் விராகனெடை-$\frac{1}{4}$, பச்சைக் கற்பூரம் விராகனெடை-அரைக்கால் இந்த வகைகளெல்லா வற்றையும் நெகிழப்பொடித்து மேற்படி சூரணத்தில்சேர்த்து எலுமிச்சம்பழம், நாரத்தம்பழம், கொழுஞ்சிப்பழம், மாதுளம்பழம், துரிஞ்சிப்பழம், ரஸ்தாளிப்பழம், கரும்பு, வெங்காயம், இஞ்சி வகை யொன்றுக்குச்சார் சேர்-$\frac{1}{4}$ இந்தச் சாருவகைகளை யொன்ருய்க் கலந்து அதில் விதை நீக்கித் துணியில் பிழிந்த விளாம் பழத்தைச் சேர்-1 கரைத்து முன் சித்தப்படுத்தி வைத்திருக்கிற சூரணத்தில் கொஞ்சம் கொஞ்சம் தெளித்துப் பிசைந்து வெய்யிலில் வைக்கிறது. இவ்விதம் இந்த ரசம் முழுவதும் சுவரச் சுவர அந்தச் சூரணத்தில் தெளித்து ஒரு நாளையில் நன்ருய்க் காயவைத்து இடித்து வஸ்திரகாயம் செய்து முன்னெழுதிய வேர்கள், குச்சிகள் முதலியவைகளை மெல்லீசாக நறுக்கி பெரிய பானையில் எட்டுப்படி ஜலம்விட்டு அதிற்போட்டு ஒருபடி ஜலமாகக் காய்ச்சி இறக்கி வடிகட்டி பசுவின் பால் சேர்-2 காய்ச்சி எலுமிச்சம் பழச்சார்விட்டு முரித்து ஜலத்தை வடிகட்டி இந்தக் கஷாயத்தில் சேர்க்கிறது. கற்கண்டு சேர்-4 அந்தக் கஷாயத்தில் சேர்த்துப் பாகுசெய்து பாகுபத மாகும்போது இந்த இரண்டு சூரணமும் ஒன்ருய்ச் சேர்த்து பாகிற் கொட்டி பசுவின் நெய் சேர் 3, தேன் சேர்-3 இவற்றை மூன்றையே சேர்த்துக்கிண்டி லேகிய பதமா யிறக்கிக்

கொள்ளவும். வேளை யொன்றுக்குக் கொட்டைப் பாக்களவு இரண்டு வேளையும் சாப்பிடவும்.

இந்த மகா வில்வாதி லேகியத்தினுல்
சொஸ்தமாகும் வியாதிகளாவன:—

வாதம், பித்தம், சிலேற்றுமம் ஆகிய இவற்ருலுண்டான வியாதிகள், கபரோகம், க்ஷயம். கபசுரம், வாதசுரம், பித்தசுரம், சீரணசுரம், வாயில் தண்ணீர் ஊறல், வாயினுல் கபம் விழுதல், விக்கல், அரோசிகம், மார்வலி, ஊர்த்தமுகவாயு, ஊர்த்தமுகபித்தம், நாபிதோஷம், தோஷம் இவைகளாம். இரத்தவிர்த்தியும், வீரியவிர்த்தியும் உண்டாகும்.

கியானியார்,

## வாயுக்கட்டிக்குப் பற்று

கடுக்காய்த்தோல், கஸ்தூரிமஞ்சள், ஈசுரவேர், கழற்சிவேர், அமுக்கிராக்கிழங்கு, மரமஞ்சள் இவை வகைக்கு விராகனெடை-1 தண்ணீரினுல் நெகிழ அரைத்துக் கொதிக்க வைத்துப் பற்றுப்போட வாயுக் கட்டி, குற்றல், வலி இவை நீங்கும். கட்டி யாரம்பத்தில் போட்டால் கட்டி அமுந்திப்போகும். பழுத்தபின் போட்டால் கட்டி யுடைந்துபோகும்.

கியானியார்,

## குண்டலாதி லேகியம்

சங்கம்வேர், கண்டங்கத்திரிவேர், முள்ளிக்கத்தரி வேர், நெருஞ்சிவேர், மூக்குத்திப்பூண்டுவேர், பூனை வேர், வில்வவேர், முன்னைவேர், வாகைவேர், பாதிரி வேர், குமிழம்வேர், கீழ்க்காய்நெல்லிவேர், சிறுதேக்கு, நாட்டுமூலம், சித்திரமூலம், செவியம் இவை வகைக்குப் பலம்-1 இவற்றை யிடித்து ஒரு பானையில் போட்டு அதில் எட்டு மரக்கால் தண்ணீர் விட்டுக் காய்ச்சி ஒரு மரக்காலாகச் சுண்ட வைத்து இறக்கிக்கொள்ளவும். அதைத் தெளியவைத்து அதில்

பழையவெல்லம் சேர்-6¼ கரைத்து வடிகட்டிக் கொள்ளவும். பிறகு அடுப்பிலேற்றிக் கொதிக்க வைத்துப் பாகுபதமானவுடன் திப்பிலி பலம்-20, கூகைநீர் பலம்-4, ஏலம் பலம்-3, லவங்கப்பட்டை பலம்-3, லவங்கப்பத்திரி பலம்-3, சீரகம் பலம்-3, ஓமம் பலம்-3, பெருங்காயம் பலம்-3, சிறுதேக்கு பலம்-2, கர்க்கடகசிங்கி பலம்-2, அரப்பொடி சிந்தூரம் பலம்-4, மிளகு பலம்-4, சுக்கு பலம்-8 இந்தச் சரக்குகள் பதின்மூன்றில் சிந்தூரந்தவிர மற்றவைகளை யிடித்து வஸ்திரகாயம் செய்து அந்தச் சூரணத்துடன் மேற்படி செந்தூரத்தையும் கலந்து மேற்படி பாகில் போட்டு அகப்பையினல் கிண்டி தேன் சேர்-2 விட்டு நன்ருய்க் கிண்டி ஒரு பீங்கான் பாத்திரத்தில் வைத்துக்கொள்ளவும். வேளையொன்றுக்கு பெரிய கழற்சிக்காய்ப் பிரமாணம் இரண்டு வேளையும் அரைமண்டலம் உட்கொண்டால் சுவாசகாசம் முதலான ரோகங்கள் சொஸ்தமாகும். இச்சா பத்தியம்.

நாகம்.

## மேகநாதத் தைலம்

புங்கம்பட்டை, பிரும்பட்டை, மாம்பட்டை, இலுப்பப்பட்டை, புரசம்பட்டை, அழிஞ்சிப்பட்டை, எட்டிப்பட்டை ஒதியம்பட்டை சங்கம்வேர்ப்பட்டை, ஊழலாத்திப்பட்டை, நூறுவருஷத்து வேப்பம்பட்டை, பூவரசம்பட்டை, குவளம்பட்டை, குட்டிவிளாம்பட்டை, சிவனர் வேம்பு வகையொன்றுக்குப் பலம்-1¾ இவற்றை யிடித்துப் பெரிய பானையில் போட்டு 30-படி ஜலம் விட்டுக் கொதிக்கவைத்து 4-படி கஷாயமாயிறக்கி வடிகட்டி அதில் ஆடுதீண்டாப்பாளைச்சார் படி-1, கழற்சியிலைச்சார் படி-1, வெள்ளறுகு இலைச்சார் படி-1, சங்கங்குப்பியிலைச்சார் படி-1, சிறுசெருப்படைசார் படி-1, கொட்டைக்கரந்தையிலைச்சார் படி-1, பொடுதலையிலைச்சார் படி-1, நல்லெண்ணெய் படி-4 இவை யெல்லா

றையும் விட்டுக் கலந்து அடுப்பிலேற்றி பறங்கிப் பட்டை-சேர்- ¼, சேராங்கொட்டை பலம்-6 மேற்படி கொட்டையின் மூக்கை வெட்டிக்கொள்ளவும். இவ் விரண்டு சரக்கையும் மெல்லிசாக இடித்துத் தூள் செய்து மேற்படி எண்ணெயிற் கலந்து கமலாக்கினியா யெரித்து மெழுகு பதத்தில் விரல்வைத்துப் பார்த் தால் சுடாது. இந்தப் பதம்பார்த்து இறக்கி வைத் துக்கொள்ளுகிறது. இந்த எண்ணெய் காலை மாலை இரண்டு வேளையும் ஒரு கரண்டிவீதம் கொடுக்கவும்.

இதற்குப் பத்தியம் :—

முளைக்கீரை, மொச்சைப்பருப்பு, உடும்பு, முயல், கௌதாரி, காடை, உள்ளான், பசுவின்மோர், உப்பு இவையாகும். எண்ணெய் 15-நாள் சாப்பிட்டுப் பின்பு நல்லெண்ணெய் தேய்த்து வெந்நீரில் முழுகவும்.

இந்த மேகநாதி யெண்ணெயின் உபயோகம்

கால்பிடிப்பு, கைபிடிப்பு, கடி, வெடிசூலை, மேகத் தடிப்பு, வெரிகுஷ்டம், சொரிசிரங்கு, அரையாப்பு, பௌத்திரம், லிங்கப்புற்று, மதுமேகம், மேகசம்பந்த மான வியாதிகள் இவை சொஸ்தமாகும்.

முத்துசாமி தீக்ஷதர்,

## இரசபூபதி மாத்திரை

பாலரசம் விராகனெடை-40, சுத்திசெய்த கெந்த கம் விராகனெடை-40, சுத்திசெய்த கருஷவி விராக னெடை-20, தாம்பிர பஸ்பம் விராகனெடை-20, வெள்ளைமிளகு விராகனெடை-40.

தாம்பிர பஸ்பம் செய்கிற விதம் :—

நல்ல தாம்பிரம் வேண்டியமட்டும் உருக்கி நொச்சி யிலைச்சாற்றில் சாய்த்து மறுபடியுமுருக்கி முன்போல புதிதான மேற்படி சாற்றில் சாய்க்கவும். இப்படி

மூன்று தடவை உருக்கிச் சாய்த்து பிறகு பிரண்டைச் சாற்றில் மூன்று தடவை யுருக்கி ஊற்றிப் பின்பு காட்டுக்கரணைக்கிழங்குச்சாற்றில் முன்போல் உருக்கிச் சாய்க்க தாம்பிரம் சுத்தியாகும். பிறகு அந்தத் தாம் பிரத்தை மெல்லிய தகடடித்து புளியயிலையையிடித்து ஒரு பானையில் போட்டமுத்தி அதன்மேல் அந்தத்தகட் டைவைத்து மேலும் அந்த இலை வைத்தமுத்தி அந்த இலை மூழ்கிறவரையில் தண்ணீர் ஊற்றி அடுப்பேற்றி ஒரு ஜாமம் தீப்போட்டு ஒருநாள் முழுமையும்வைத்து மறுநாள் தகட்டையெடுத்துக் கழுவி இந்தத் தகட்டுக் குச் சமன் நிறை லிங்கத்தை எலுமிச்சம்பழச் சாற்றால் நெகிழ அரைத்து அந்தத் தகட்டிற்குக் கவசம்செய்து ஒரு ஓட்டில், தாம்பிரயெடை கெந்தகம், அதேயெடை நிமிளை இவ்விரண்டையும் தூள் செய்து கொஞ்சம் தூள் பரப்பி அதன்மேல் முன் கவசம் செய்த தாம்பிர தகட் டைப் பரப்பி அதன்மேல் தூள்போட்டு அதன்மேல் தகட்டைப் பரப்பி இப்படி ஒன்றுமே லொன்றாகப் பரப்பி மேல் ஓடு மூடி சீலைமண்செய்து பெரியவராக புடம்போட்டு ஆறினபிறகு எடுக்கக் கையினால் நொருக் கித் தூள் செய்யும்படியாக விருக்கும்; அந்தத் தகட் டுக்குச் சமனெடை கெந்தகம் ஒவ்வொரு புடத்துக்கும் சேர்த்துக் காட்டுக்கரணை ரசத்தினால் மும்மூன்று ஜாமம் அரைத்து வில்லைதட்டிக் காயவைத்து ஏழுபுடம் போடு கிறது. முதல்புடம் $1\frac{1}{2}$ முழம் உயரம்; $1\frac{1}{2}$-முழம் அகலம்; மற்றப்புடம் ஆறும் 1-முழம் உயரம்; 1-முழம் அகலம்; இந்தவிதம் ஏழுபுடம் ஆனால் தாம்பிரபஸ்பம் கருப்பா யிருக்கும்.

## கெந்தகத்தின் சுத்தி

வேண்டிய அளவு கெந்தகம் ஆலக்கரண்டியில் போட்டு உருக்கி கையாந்தகரைச் சாற்றில் சாய்த்துக் கழுவியெடுத்து கொள்வதே சுத்தி.

கருனைவியைக் கோமூத்திரத்தில் மூன்றுநாளூற வைத்தெடுத்துக் காயவைத்து தூள்செய்து வஸ்திர காயம் செய்து எடுத்துக்கொள்ளவும்.

பிறகு மருந்து செய்கிற விபரம்:—

மூன்னார் ரசம், கெந்தகம் இந்த இரண்டையும் கல்வத்தில் போட்டு மூன்று ஜாமம் அரைத்து நன்ருய்க் கருப்பானவுடன் அதனுடன் தாம்பிர பஸ்பம் விராகனெடை-20, நாவித்தூள் விராகனெடை-10, இவ்விரண்டும் சேர்த்து செருப்படிச் சாற்றினல் ஆறு ஜாமம் அரைத்து இலந்தைப்பழம் பிரமாணம் உருண்டைசெய்து காயவைத்து ஏழு சீலைமண் செய்து காசிக் குப்பியில் அடைத்து அந்தக் குப்பியை சிந்தூரம் செய்கிற சட்டியில் 4 விரற்கடை மணல் பரப்பி அதன்மேல் குப்பிவைத்துக் குப்பிவாயளவு மணல் பரப்பி குப்பை வாயில் பலப்பக்கல் வில்லைமூடி சட்டியை அடுப்பிலேற்றி ஒருஜாதி விரகால் எட்டுஜாமம் கமலாக்கினியாயும், எட்டுச்சாமம் காடாக்கினியாயு மெரித்து, சட்டி ஆறினபிறகு குப்பியிலுள்ள உருண்டையைக் கல்வத்தில் போட்டு பாக்கி யிருக்கிற கருனைபித்தூள் விராகனெடை 10-ம் சேர்த்து மருந்துடன் கலந்து அதில் 40-விராகனெடை மிளகுத்தூளும் சேர்த்து எல்லாவற்றையும் ஒன்ருய் இஞ்சிச் சாற்ருல் 16 ஜாமம் வெற்றிலைச்சாற்ருல் 16-ஜாமம் அரைத்து மாத்திரைசெய்து ஒரு குன்றிமணிமுதல் இரண்டு குன்றிமணி வரையில் கொடுக்கலாம். வயது பலம், தேகபலம், ரோக பலம், காலபலம் இவற்றிற்குத் தக்கபடி சமயோசிதமாய்க் கொடுக்க வேண்டும்.

ரசபூபதி மாத்திரை அனுபானம் :—

இஞ்சிரசம், வெற்றிலைச்சாறு இந்த இரண்டும் சரீர பலத்துக்குத் தக்கபடி 3-4-5-விராகனெடையும், இவற்றுடன் இன்னும் யுக்தமானதையும் சேர்த்து அதனு

டன் மருந்தும். அதன் சமனெடை மிளகுத்தூளும் கலந்து சேர்த்துக் கொடுக்கவும்.

திகரடி, இருமல், கபரோகம், பாண்டுரோகம், காமாலை, வயிற்றுவலி, வாதரோகம், கபத்துடன் வாந்தி, கபக்ஷயம், சன்னிபாதம், கடூரமான சுரம் ஆகியவைகள் தீரும்.

பத்தியம்:—

புளிப்பு, கைப்பு பதார்த்தம், பாகற்காய், கடுகு, நல்லெண்ணெய் இவைகள் ஆகாது.

ஐயாக்கண்ணுப் பிள்ளை,

## பாலகரப்பன் வீக்ககஷாயம்

சிவனார்வேம்பு, ஓமம், சதகுப்பை, கருஞ்சீரகம், காட்டுச்சீரகம், செங்கத்தாரிப்பட்டை பூதகரப்பான்பட்டை, அவுரிவேர், மரமஞ்சள், நன்னாரிவேர், நெருஞ்சிவேர், பூளைவேர், செவியம், திப்பிலிமூலம், செப்பு நெருஞ்சிவேர், கண்டங்கத்திரிவேர், இவை வகைக்கு விராகனெடை-2 இவற்றை யிடித்து இதில் ஒரு பலம் தூளில், ஜலம் சேர்-2 விட்டு எட்டொன்ருய் சுண்டவைத்து இறுத்துக் கொடுக்கவும். இவ்விதம் இரண்டு வேளையும் ஏழுநாள் கொடுத்து உப்பில்லாப் பத்தியம் வைத்து, மறு ஏழுநாளும் இச்சாப் பத்தியம் வைத்துப் பின்பு ஸ்நானம் செய்விக்க முன்கண்ட வியாதி தீரும்.

## கருப்ப ஆரோக்கிய எண்ணெய்

கொட்டைமுத்தெண்ணெய் சேர்-6, சங்கங்குப்பியிலை, கிரந்திநாயகயிலை, மணித்தக்காளியிலை, முருக்கயிலை, சிறு செருப்படியிலை, வேலிப்பருத்தியிலை, கருநொச்சியிலை, வெண்ணொச்சியிலை, கொட்டைக்கரந்தையிலை, கோழியாவாரையிலை இவை தனித்தனி யிடித்

துப் பிழிந்த ரசம் வகைக்குச் சேர்-1ம், வெங்காயச்சார் சேர் 2ம் மேற்படி எண்ணெயிற் சேர்த்துச் செங்கத் தாரிப்பட்டை, வக்கணத்திப்பட்டை, கருஞ்சீரகம், சதகுப்பை, அறத்தை, பூதகரப்பான்பட்டை, கம்பிபிசின், மரமஞ்சள், வசம்பு, வெள்ளைப்பூண்டு வகைக்குப் பலம்-$\frac{1}{4}$ இவற்றைத் தண்ணீர் விட்டு நெகிழ அரைத்து அதிற் கலந்து இரண்டு நாள் சிறுதீப்போட்டு மூன்றும் நாள் எரித்து மெழுகுபதமாக வடித்து பக்குவமாய்ச் சீசாவில் வைக்கவும். கர்ப்பஸ்திரீக்கு மூன்றும் மாதம் 3-நாள் கால்சேரளவு காலையில் மாத்திரம் கொடுத்து உப்பில்லாப் பத்தியம் வைத்து, மறு மூன்றுநாளும் இச்சாப் பத்தியம் வைக்கவும். பின்பு ஐந்தாம் மாதம் மூன்றுநாள் மூன்றுவீசம் சேர் விழுக்காடு கொடுக்கவும். இப்படியே மும்மூன்று நாள் ஏழாம் மாதத்தில் சேர் அரைக்காலாகவும், ஒன்பதாம் மாதத்தில் ஒரு கரண்டி வீதமாகவும் கொடுத்து முன்போல பத்தியம் வைக்கவும்.

பிரசவமானவுடன் குழந்தைக்குப் பத்துநாள் வரையில் மிகவும் குறைந்த அளவில் காலை மாலை இரண்டு வேளையும் கொடுக்கலாம். பிற்பாடு மூன்று வருஷம் வரையில் பேதிக்குக் கொடுக்கவேண்டிய போது இந்த எண்ணெயையே கொடுக்கலாம். மேற்படி எண்ணெய் குடித்த தினத்தில் உப்பில்லாப் பத்தியமாயிருக்கவேண்டும். இவ்விதம் செய்ய குழந்தைகளுக்கு அரையிற்காணும் கருங்கிரந்தி வராது. மூன்று வயது வரையில் கரப்பானும் அணுகாது கருப்பம் முதல் இந்த எண்ணெய் கொடுக்காமலிருந்து பிள்ளைக்குக் கரப்பான், கரப்பான் வீக்கம், கரப்பான் சிரங்கு ஆகியவை கண்டால் இந்த எண்ணெய் மூன்றுநாள் கொடுத்து பத்தியம் வைத்தால் உத்தமம். இதை மூன்று மாதத்திற்கு ஒரு தடவை புதிதாய்ச் செய்துக் கொள்ளவும்.

ஐயாக்கண்ணுப் பிள்ளை,

## மஞ்சட் காமாலை எண்ணெய்

விருகங்கிழங்கு, சீரகம், ஏலம், அரத்தை, மரமஞ்சள் இவை வகை யொன்றுக்கு பலம்-¼ அரைத்து வெங்காயச்சார் சேர்-1, பசுவின்பால் சேர்-1, கொட்டைமுத்தெண்ணெய் சேர்-1 இவையெல்லாவற்றையும் ஒன்ருய்ச்சேர்த்து முதல்நாள் கொஞ்சம் தீப்போட்டு இரண்டாம்நாள் மெழுகு பதமாகக் காய்ச்சி இறக்கி வடிகட்டி ஒரு சீசாவில் வைத்துக்கொள்ளவும். மஞ்சட் காமாலைக்கு ஒரு வேளைக்கு ஒரு பலமாக மூன்றுநாள் காலையில் மாத்திரம் உட்கொண்டு உப்பில்லாப் பத்திய மிருக்க மேற்படி வியாதி தீரும். பத்திய மில்லாமலானுல் 15-நாள் வரையில் காலையில் ஒரு கரண்டியளவு கொடுத்து இச்சாப் பத்தியம் மிருக்கத் தீரும்.

ஐயாகண்ணுப் பிள்ளை,

## மஞ்சட் காமாலைச் சூரணம்

சந்தனத்தூள், அதிமதுரம், கோரைக்கிழங்கு, தக்கோலம், கோஷ்டம், செங்கழுநீர்க்கிழங்கு, முந்திரீச்சம்பழம், பேரீச்சம்பழம், பொடுதலை, விலாமிச்சவேர், நெல்லிமுள்ளி இவை வகையொன்றுக்கு பலம்-½ இவற்றை யொன்ருயிடித்துச் சூரணம் செய்து வடிக்கட்டி சூரணத்திற்குச் சமனெடை சீனிசர்க்கரை கலந்து ஒரு புதுக்கலயத்தில் வைத்துக்கொண்டு வேளை 1-க்குக் கால்பலமாக, காலை மாலை யிரண்டு வேளையும் கால்சேர் பச்சையரிசிக் கழுநீரில் கரைத்துச் சாப்பிடவும். இவ்விதம் 20-நாள் சாப்பிட்டு இச்சாப் பத்திய மிருக்க மஞ்சட்காமாலை தீரும். கழுநீரில்லாமல் சூரணம் மாத்திரம் இருபதுநாள் சாப்பிட பித்தத்தாலுண்டான கால் கை யெரிவு ஆகியவை தீரும்.

ஐயாக்கண்ணுப் பிள்ளை

## பாண்டுவீக்கத் தேங்காய் மாத்திரை

அரப்பொடித்தூள் பலம்-1, கிட்டான் பலம்-1, தேங்காய்-1 அரப்பொடியையும் கிட்டானையும் நெகிழ அரைத்து தேங்காயைப் பொற்று அதிலுள்ள இள நீரை வெளிப்படுத்தாமல் அந்தத் தூளையதிற்போட்டு தேங்காய்க் குடுமியினுல் அடைத்து தேங்காயின்மேல் ஒரு அங்குலம் பசுவின் சாணி தடவிக் காயவைத்துப் புடம்போடவும். புடத்தின் திட்டம் தேங்காய் வெடிக் கும்படியாகவும், மேற்படி கொட்டாங்கச்சி கருகும்படி யாகவும், உள்ளிருக்கப்பட்ட தேங்காய் கொஞ்சம் கரு கும்படியாகவும் பதமாய்ப் புடம்போடவும். இப்படி புடம்போட்டெடுத்து தேங்காயின் மேலிருக்கப்பட்ட சாம்பல் கொட்டாங்கச்சி ஆகியவைகளை நீக்கி மேலே கருகின தேங்காயைக் கொஞ்சம் சுறண்டி நீக்கி தேங் காயை யிரண்டுபாகம் செய்து உள்ளிருக்கிற அவுடதத் தைச் சுறண்டி வேறே வைத்துக்கொண்டு, தேங்கா யைச் சிறு துண்டுகளாகத் துண்டித்து மேற்படி மருந் தையும் கலந்து கல்வத்திலிட்டு கையாந்தகரைச் சாற் ருல் நான்கு ஜாமம் அரைத்து தேற்ருன்கொட்டைப் பிரமாணம் உருண்டை செய்து காலையில் ஒரு உருண்டை கையாந்தகரைச் சாற்றில் உரைத்துக் கொடுத்து, மாலையில் ஒரு உருண்டை தேனில் உரைத் துக் கொடுக்கவும். இவ்விதம் ஏழுநாள் செய்ய எவ் விதமான பாண்டு வீக்கமும் வடிந்துபோகும். ஏழு நாளும் உப்பில்லாப் பத்திய மிருந்தும், மறு ஏழுநாள் இச்சாப்பத்திய மிருந்தும் பதினைந்தாம்நாள் அப்பியங் கனம் செய்யவும். பிறகு கால் மண்டலம் சிந்தாதி லேகியம் சாப்பிடவும். இப்படிச் செய்ய வீக்கம் சொஸ்தமாகும்.

ஐயாக்கண்ணுப் பிள்ளை

## மண்டூர மாத்திரை

கிட்டான், காந்தம், இந்துப்பு, கருஞ்சீரகம், திரிகடுகு இவை வகையொன்றுக்கு ஒரு பலம்; இவற்றைக் கல்வத்திற்போட்டு கையாந்தகரைச் சாற்றால் மூன்று நாள் 12-ஜாமம் அரைத்துக் காசளவு வில்லைசெய்து வைத்துக்கொள்ளவும். காலை மாலை இரண்டு வேளையும் வேளையொன்றுக்கு ஒவ்வொரு வில்லையைத் தேனில் உரைத்து ஏழுநாள் கொடுக்கவும். பித்த பாண்டு, விஷபாண்டு சொஸ்தமாகும். உப்பில்லாப் பத்தியம். ரோகம் லகுவாயிருந்தால் 20-நாள் இச்சாப் பத்தியமாகக் கொடுக்கத் தீரும்.

ஐயாக்கண்ணுப் பிள்ளை,

## சம்பீரக் கடுகு

சீரகம், கருஞ்சீரகம், கடுகுரோகணி, சுக்கு, மிளகு, திப்பிலி, அசமதாகம், கிட்டம், இந்துப்பு, கல்லுப்பு, சீனைக்காரம், சௌக்காரம், வெண்காரம், பெருங்காயம், ஜாதிக்காய், கிராம்பு, பூண்டு வகைக்குப் பலம்-½, அரப்பொடி பலம்-2 இவற்றைப் பெண் வெள்ளாட்டுக் கோமியத்தில் நெகிழ அரைத்துக் காட்டுமல்லிகை, கையாந்தகரை, கீழ்க்காய்நெல்லி, மணித்தக்காளி, நொச்சி இவை தனித்தனியாக யரைத்த விழுது எலுமிச்சம்பழ அளவு எடுத்து முன் மருந்துடன் சேர்த்து அரைக்கவும். ரசம் விராகனெடை-2 குப்பைமேனிச் சாற்றால் ஒரு ஜாமம் அரைத்து முன் மருந்துடன் சேர்த்து எல்லாம் ஒன்றாய்ச் சேர்த்து ஒரு ஜாமம் அரைத்து எல்லாவற்றையும் இருபது உருண்டை செய்து எலுமிச்சம்பழம்-20; இதில் ஒவ்வொன்றையும் நாலு பிளப்பாகப் பிளந்து ஒவ்வொரு பழத்திலும் ஒவ்வொரு உருண்டையை வைத்து மேற்படி பழங்கள் கொள்ளும்படியான ஒரு கலயத்தில் அடைத்து மேலே சட்டிமூடி கோமூத்திரம் சதாகாலமும் விழும்படியான

விடத்தில் இந்தக் கலயத்தைப் புதைத்து மூன்றுநாள் பூரணமானபிறகு நான்காம் நாள் கலயத்தை யெடுத்து, காட்டுமல்லிகையிலைச்சாறு இரண்டுபடி இந்த ஔஷதத்தில் விட்டு அடுப்பிலேற்றி தீப்போட்டு மேற்படி சாறு சுண்டினபிறகு அதை அம்மியில் வைத்து மெல்லிசாக அரைத்துக் கொஞ்சம் தேன் கலந்து மறுபடியும் அரைத்துப் பீங்கானில் வைத்துக்கொள்ளவும். இந்த மருந்தை 20 நாள் சுண்டைக்காய்ப் பிரமாணம் இரண்டுவேளையும் உட்கொண்டால் மகோதரம், பாண்டு, காமாலை, சோகை, நீராம்பல், குடல்வாதம், வாயு, குன்மம் முதலிய சகல ரோகங்களும் தீரும். பத்தியம்: கைப்புப் புளிப்பு நீக்கி உப்பை வறுத்துச் சேர்க்கவும். மருந்து விட்டபிறகு மறு 20-நாள் இச்சாப் பத்தியம் இருக்கவும்.

ஐயாக்கண்ணுப் பிள்ளை,

## சிந்தாதி லேகியம்

கடுக்காய்-50, தான்றிக்காய்-50, நெல்லிமுள்ளி-25, சுக்கு, மிளகு, திப்பிலி, சீரகம், கருஞ்சீரகம், ஓமம், இந்துப்பு, காயம் வகைக்குப் பலம்-1, இரும்பு அரப்பொடி பலம்-4, பசுவின் கோமியம் படி-2, கற்றாழைச்சார் படி-1, ஆடாதோடைச்சார் படி-1 பின் மூன்று வகைகளையும் சேர்த்து மேற்சொல்லிய அரப்பொடியில் சிறுகச் சிறுக விட்டு நான்கு ஜாமம் அரைத்துக் கடை, சரக்குகளை மெல்லிசாக இடித்து வஸ்திரகாயம் செய்து முன் மருந்துடன் சேர்த்து முன் ரசத்தினல் மறுபடியும் அரைத்து ½-சேர் புட்டிவெல்லம் கரைத்து அடுப்பிலேற்றிக் காய்ச்சி பாகுபதமாக வரும்போது முன் சித்தப்படுத்தின ஔஷதத்தை அதில் போட்டு தேன் சேர்-½ விட்டு லேகியபதமாய்க்கிளறி யெடுத்துக்கொள்ளவும். ஒருவேளைக்கு சிறுசுண்டைக்காயளவு காலை மாலை இரண்டு வேளையும் உட்கொண்டால் பாண்டு, சோகை, காமாலை, மகோதரம், நீராம்பல், பெருவயிறு, குடல்

வாதம், இருமல், சுவாசகாசம் முதலிய அனேக பித்த ரோகம் சொஸ்தமாகும். இச்சாப் பத்தியம்.

ஐயாக்கண்ணுப் பிள்ளை,

## சிந்தாதி லேகியம் (வேறு)

புளியயிலை பலம்-100, துருப்பிடித்த இரும்பு பலம்-10. இவ்விரண்டையும் ஒரு பானையில் போட்டு எட்டு மரக்கால் ஜலம்விட்டு எட்டிலொன்ருகக் காய்ச்சி வடிகட்டிக் கொண்டு அந்தக் கஷாயத்தில் வெல்லம் சேர்-2½, கரைத்து வடிகட்டி அடுப்பிலேற்றிக்காய்ச்சிப் பாகுசெய்து அந்தப்பாகில், சுக்கு, திப்பிலி, மிளகு, கடுக்காய், தான்றிக்காய், நெல்லி முள்ளி. சித்திரமூலம், சீரகம், செவியம், அரத்தை, வாய்விளங்கம், ஓமம், குராசாணி யோமம், கிராம்பு, உலர்த்தின கையாந்தகரை, கருஞ்சீரகம். இந்துப்பு வகைக்குப் பலம்-2 இவற்றை யிடித்து வஸ்திரகாயம் செய்த சூரணத்தில் இஞ்சி பலம்-16 இடித்து ரசம் பிழிந்துவிட்டுக் கலந்து மேற்படிப் பாகில் கொட்டிப் பசுவின் நெய் சேர்-4, தேன் சேர்-1 இவ்விரண்டையும் அதில்விட்டுக் கால்சேர் அயச் சிந்தூரமும் சேர்த்துப் பதமாய் லேகியம் செய்துக்கொள்ளவும். வேளை யொன்றுக்குக் கொட்டைப்பாக்களவு இரண்டுவேளையும் 40-நாள் உட்கொள்ளவும். பாண்டு சம்பந்தமான சகல ரோகங்களும் தீரும்.

ஐயாக்கண்ணுப் பிள்ளை,

## தநுர்வாயுக் கஷாயம்

எருக்கம்பழுப்பு, வேலிப்பருத்தி, கையாந்தகரை, கொடிவேலி, நொச்சிக்கொழுந்து, முருங்கைப்பட்டை, கோஷ்டம், சாரணைவேர், வசம்பு, வெள்ளைப்பூண்டு, தேங்காய்த்துருவல் வகைக்குப்பலம்-¼ இவற்றைக் கியாழஞ் செய்து இறக்கி, அதில் முருங்கைப்பட்டைத் தனிச்சாற்றில் திப்பிலியை வறுத்துப் பொடித்த சூரணம் கொஞ்சம் ,மேன்பொடி போட்டு உட்கொள்க.

இவ்விதம் ஒவ்வொரு வேளை ஏழுநாள் உட்கொள்ள தனுர்வாயு தீரும். பத்தியம்: உப்பும், புளியும் தள்ளவும்.

ஐயாசிகண்ணுப் பிள்ளை,

## ஐந்தெண்ணெய்த் தைலம்

வேப்பெண்ணெய், நல்லெண்ணெய், புங்கெண்ணெய், குருந்தெண்ணெய், இலுப்பெண்ணெய் வகைக்குச் சேர்-2, பூண்டு சேர்-1, துத்தம், துருசு, கௌரிப் பாஷாணம், வெள்ளைப் பாஷாணம், லிங்கம், தாளகம், மனோசிலை, நெரிவிஷம், செப்புத்தொட்டிப்பாஷாணம், எலிப்பாஷாணம், நேர்வாளம், நவச்சாரம், எவச்சாரம், சத்திச்சாரம், சீனக்காரம், வெண்காரம், வெடியுப்பு, இந்துப்பு, கல்லுப்பு, கெந்தவடியுப்பு, வளையலுப்பு, கஸ்தூரி, கோரோசனை, குங்குமப்பூ, கருங்குங்கிலியம், வெள்ளைக் குங்கிலியம், சாம்பிராணி, குக்கில், கரியபோளம், பெருங்காயம், கருநாவி, ரசகற்பூரம், வகைக்குப்பலம்-½, வேப்பங்கொட்டை, புங்கங்கொட்டை, அழிஞ்சிக் கொட்டை, புரசங்கொட்டை, எட்டிக்கொட்டை, சதகுப்பை, வாய்விளங்கம், கடுகுரோகணி, வசம்பு, கார்த்திகைக்கிழங்கு, ஆகாசக்கருடன்கிழங்கு, ஈசுவரவேர், புடபத்திரிவேர், அவுரிவேர் வகைக்குப் பலம்-¼, ஊமத்தைவிதை, சிவதைவேர், கொடிவேலிவேர், அனிச்சவேர், கடுகு, பூதக்கரப்பான்பட்டை, நாய்க்கடுகு வகைக்குப் பலம்-½, நொச்சி, சடைச்சி, சத்திச்சாரணை, வெள்ளைச்சாரணை, சதுரக்கள்ளி, இலைக்கள்ளி, கொடிக்கள்ளி, காட்டாமணக்கு, எலியாமணக்கு, எருக்கம்பூ, பிரண்டை இவற்றின் சாறுகள், எருக்கம்பால் இவை வகைக்குச் சேர்-¼ இவைகளெல்லாம் கலந்து அடுப்பேற்றி, மெழுகுபதமாய்க் காய்ச்சி பக்குவமா யிறக்கி அடியிலிருக்கிற வண்டலை யெடுத்து நெகிழ அரைத்து மேற்படி எண்ணெயிற் கலந்து வைத்துக் கொள்ளவும். இதில் கொஞ்சம் நோயுள்ள விடத்

தில் பூசுவதினால் வாதரோகம், மேகவாய்வு, சூலைக்கட்டு முதலியவை தீரும்.

ஐயாக்கண்ணுப் பிள்ளை,

## சுடர்த் தைலம்

ரசம், கெந்தகம், பாஷாணம், சௌரிபாஷாணம், மனோசிலை, தாளகம், லிங்கம் முர்தார்சிங்கு நாபி இவை வகைக்கு விராகனெடை-3, வசம்பு பலம்-½, ஓமம்பலம்-1 இவைகளை ஊமத்தையிலைச்சார் விட்டு அரைத்து ஒரு ஜான் சதுரமான வெள்ளைத்துணியில் கால்வாசி மருந்தையெடுத்து தடவி வத்திபோல சுருட்டி ஒருமுழ இரும்புச் சிலாகையில் ஒரு பாகத்தைக் குத்திப் பிடித்துக்கொண்டு, 2-சேர் வெப்பெண்ணெயை வேறொரு பாத்திரத்தில் வைத்துக்கொண்டு அதில் வத்தியை நனைத்து, திரியின் மறுபக்கத்தைக் கொளுத்திக் கீழே பாத்திரம்வைத்து சுடர் சுடராய் வடியும் தைலத்தைப் பிடிக்கவும். மேலுக்குமேல் மேற்படி வேப்பெண்ணெயை ஊத்திக் கொண்டுவரவேண்டும். இவ்விதம் செய்து வேப்பெண்ணெயானபின் சுடர்த் தைலத்தைப் பீங்கானில் பத்திரப்படுத்தவும். வாத ரோகத்துக்குத் தடவினால் அது சௌஸ்தமாகும்.

ஐயாக்கண்ணுப் பிள்ளை,

## வாதஹரி பிடித்தைலம்

வேப்பெண்ணெய் சேர்-1, நேர்வாளப்பருப்பு பலம்-1, பூண்டு பலம்-1, கடுகுரோகணி பலம்-½, வசம்பு பலம்-½, காயம் பலம்-½, மயிலிறகைச்சுட்டு வடிகட்டின சாம்பல் பலம்-1, கழுகினிறகைச்சுட்டு வடிகட்டின சாம்பல் பலம்-1 இவற்றை யொன்றாய்க் கலந்து மேற்படி எண்ணெயிற் சேர்த்துக் காய்ச்சிக் கொள்ளவும். இதை கையில் தடவி அனலில் காண்பித்து வாதவியாதியுள்ள விடத்தில் பிடித்து வர அது தீரும்.

(வேறு)

விளக்கெண்ணெய் சேர்-¼, நல்லெண்ணெய் சேர்-¼, வேப்பெண்ணெய் சேர்-¼, வசம்பு, பூண்டு, கருஞ்சீரகம், கார்த்திகைக்கிழங்கு இவை வகைக்குப் பலம்-¼, வேலிப்பருத்திச்சார் சேர்-1இவைகளெல்லாவற்றையும் மேற்படி சாறுவிட்டு அரைத்து எண்ணெயிற் கலக்கிக் காய்ச்சி ரோகங்களுக்குத் தடவிப்பிடிக்க அவை தீரும்.

ஐயாச்கண்ணுப் பிள்ளை,

## குக்குடாதிச் சூரணம்

முத்தின கருங்கோழி ஒன்றை யறுத்து ரோமம், கால், குடல், தலை ஆகியவைகளை நீக்கி, நாரத்தங்காய், உப்பு, சாரணைக்கிழங்கு வகைக்குப் பலம்-2 இவற்றை மெல்லிதாக அரைத்துக் கோழியின் வயிற்றில் நிறைத்து, வயிற்றைத் தைத்து முருக்கிலை, நொச்சியிலை, உகாயிலை, கள்ளி, பிரண்டை இவற்றின் சார் வகை 1-க்கு படி-1 இவற்றை ஒரு பானையிலூற்றி மேற்படி கோழியையும் அதிற்போட்டு அடுப்பேற்றி யெரித்து, சார் சுண்டினவுடன் மேற்படி கோழியை யெடுத்து எலும்பை நீக்கி, சுக்கு, திப்பிலி, மிளகு, கடுக்காய், தான்றிக்காய், ஓமம், சீரகம், காயம், வெண்காரம், வெடியுப்பு, சீனக்காரம், சௌக்காரம் வகை 1-க்கு விராகனெடை-2 இவற்றைச் சூரணித்து வஸ்திரகாயம் செய்து, முன்னர் கோழி இறைச்சியை அம்மியில் வைத்து அரைத்து பின்னர் சூரணத்தையும் கலந்து நன்றாய் அரைத்து, கொள்ளுவேகவைத்த ஜலம் சேர்-1 விட்டு செவ்வையாய்ப் பிசைந்து வில்லைகளாகச் செய்து நிழலிற் காயவைத்து, நன்றாய்க் காய்ந்தபின் தூள்செய்து பீங்கானில் பத்திரப் படுத்தவும். சுக்குக் கஷாயத்தில் வெருகடி சூரணம் போட்டு சாப்பிடவும். இவ்விதம் காலை மாலை இரண்டு வேளையும் எட்டுநாள் உட்கொண்டால் மேகவாயு, வாயு, குன்மம் ஆகியவை தீரும். இச்சா பத்தியம்.

ஐயாக்கண்ணுப் பிள்ளை,

## பல்லாதகி லேகியம்

சேராங்கொட்டை பலம்-5, பச்சைக்கடலை பலம்-5, பறங்கிப்பட்டை பலம்-5, நெல்லிமுள்ளி பலம்-3, எள்ளு பலம்-5, வெல்லம் பலம்-15, சுத்திசெய்த கெந்தகம் பலம்-½ இவைகளெல்லாவற்றையும் இடித்து லேகிய பாகமாகச்செய்து புன்னைக்காய்ப் பிரமாணம் ஒரு ம்ண்டலம் இரண்டுவேளையும் உட்கொண்டால் சகல மேக வாயுகள், ஊறல், கிரந்தி ஆகியவை சொஸ்தமாகும். பத்தியம் : கைப்பு, புளிப்பு நீக்கவேண்டும். பத்தியமாய்ச் சாப்பிட்டால் வியாதி சொஸ்தமாகும்.

ஐயாக்கண்ணுப் பிள்ளை,

## பல்லாதகி லேகியம் (வேறு)

பழயவெல்லம், கொப்பரைத்தேங்காய், எள்ளு, சித்திரமூலம், ஓமஉமி, சேராங்கொட்டை, பூண்டு, கடுகுரோகணி, மிளகு, நீரடிமுத்து இவை வகைக்குச் சேர்-½ இவற்றை மைபோலிடித்து வெல்லத்துடன் சேர்த்து லேகியஞ்செய்து கழற்சிக்காய்ப் பிரமாணம் இரண்டு வேளையும் ஒரு மண்டலம் உட்கொண்டால் மேகவாயு, சூலை, ஊறல் ஆகியவை சொஸ்தமாகும். கடுகு, கைப்பு, புளிப்பு ஆகிய இவை தள்ளவும்.

ஐயாக்கண்ணுப் பிள்ளை,

## பல்லாதகி லேகியம் (வேறு)

சேராங்கொட்டை சேர்-1 இதை மூக்கு வெட்டி சேர்க்கவும். உரித்த ஒரு தலைப்பூண்டு சேர்-1, ஓமஉமி சேர்-1, கருவேலம்பிசின் சேர்-¼ இதை நெய்யிற் பொரித்துக்கொள்ளவும். மேற்புரணி நீக்கின கொப்பரை சேர்-!, பழையவெல்லம் சேர்-1¼, தும்பையிலைச் சார் சேர்-½ எல்லாச் சரக்குகளையும் கல்லுரலிற்போட்டு இடித்து மேற்படி தும்பைச்சாறுவிட்டு நன்றாயிடித்து மெல்லீசான பிறகு எடுத்து ஒரு பாத்திரத்தில் பத்தி

ரப்படுத்தவும். வேளையொன்றிற்கு பெரிய கழற்சிக் காய்ப் பிரமாணம் இரண்டு வேளையும் ஒரு மண்டலம் உட்கொள்ள சகல மேகவாய்வு, சகலமேகம், சகல கடி விஷம் ஆகியவை சொஸ்தமாகும். பத்தியம்: புளிப்பு, கைப்பு ஆகிய இவை தள்ளவும்.

ஐயாக்கண்ணுப் பிள்ளை,

### பல்லாதகி லேகியம் (வேறு)

சேராங்கொட்டை பலம்-2, ஓமம் பலம்-1, சுக்கு பலம்-½, மல்லி பலம்-½, லவங்கப்பட்டை பலம்-½, நீரடி முத்து பலம்-1, வெல்லம் பலம்-2, ரசம் விராகனெடை-1 இவைகளெல்லாவற்றையும் கல்லுரலிற் போட்டு இடித்து புளி சேர்-¾, இதை தண்ணீரிற் கரைத்து சக்கைநீக்கி புளித்தண்ணீரை மேற்படி மருந்தில் விட்டு இடித்து லேகியபக்குவத்தில் அதை எடுத்து பத்திரப் படுத்தவும். வேளையொன்றிற்குக் கொட்டைப் பாக் களவு இரண்டு வேளையும் ஒரு மண்டலம் சாப்பிட சகல மேகவாயுகள், வாதபிடிப்பு ஆகியவை தீரும்.

ஐயாக்கண்ணுப் பிள்ளை,

### பல்லாதகி லேகியம் (வேறு)

சுத்திசெய்த சேராங்கொட்டை சேர்-3, பறங்கிப் பட்டை சேர்-3, சங்கம்வேர், பிரப்பங்கிழங்கு, காட்டுச்சீரகம், கார்போகஅரிசி, வெட்பாலையரிசி, கருஞ்சீரகம், வெள்ளறுகு, ஓமம், கடுக்காய்த்தோல், தான்றிக்காய்த்தோல், மிளகரணைப்பட்டை, ஈசுவரவேர், புடபத்திரிவேர், சித்திரமூலவேர்ப்பட்டை, கண்டத்திப்பிலி வகைக்குப் பலம்-2, நீரடிமுத்துப்பருப்பு பலம்-3, குக்கில் பலம்-3, பூண்டு பலம்-8, எள்ளு பலம்-2, வெல்லம் சேர்-6, நெய்சேர்-½, தேன்சேர்-½ பூண்டு, எள்ளு, வெல்லம், நெய் சேராங்கொட்டை, தேன் இவை தவிர மற்றச் சரக்குகளையிடித்து வஸ்திரகாயஞ்செய்து அந்தச்

சூரணத்தை மறுபடியும் உறலிற் போட்டு சேராங்கொட்டையைச் சேர்த்திடித்து முறத்தில் தெள்ளி, தூள் வேறாகவும், திப்பிவேறாகவும் எடுத்து மறுபடியும் அந்தத் திப்பியை உறலிற் போட்டிடித்துத் தெள்ளி திப்பி வேறு தூள் வேறு செய்யவும். இப்படி மூன்று தடவை செய்து முடிவில் கொஞ்சம் திப்பி நிற்கும். அதை நீக்கிவிடவும். மேற்கண்டபடி தெள்ளியெடுத்த சூரணமானது எண்ணெய் கலந்தாற்போலிருக்கும். இதைத் தனியாகவைத்துக்கொள்ளவும். பின்பு, எள்ளு, பூண்டு, நீரடிமுத்துப்பருப்பு இம்மூன்றையும் அம்மியில் வைத்து நெகிழ அரைத்து மேற்படி சூரணத்திற் கலந்து வெல்லம், நெய், தேன் இவற்றைப் போட்டுச் சேர்த்திடித்து லேகிய பக்குவத்தில் எடுத்து வைத்துக் கொண்டு இரண்டுவேளையும் கொட்டைப்பாக்குப் பிரமாணம் ஒரு மண்டலம் சாப்பிட, மேகவாய்வு, சூலைக்கட்டு, கிராணி, வயிறுப்பிசம், பொருமல், முழங்கால் பிடிப்பு, குதிகால்வாதம், கணுவு பிடிப்புகள் முதலிய எல்லா ரோகங்களும் சொஸ்தமாகும். இச்சாப்பத்தியம்.

ஐயாக்கண்ணுப் பிள்ளை,

## பல்லாதகி லேகியம் (வேறு)

சேராங்கொட்டை பலம்-10, கெந்தகம், குக்கில், பறங்கிப்பட்டை, வாய்விளங்கம், நீரடிமுத்துப்பருப்பு வகைக்குப்பலம்-2, சிவனார்வேம்பு, நிலஆவாரை, தேவதாரம், யானைத்திப்பிலி, சீரகம், கருஞ்சீரகம், சிறுநாகப்பூ, சதகுப்பை, கடுகுரோகணி, குரோசாணியோமம், கடுகு வகைக்குப் பலம்-$\frac{1}{4}$; வங்கபஸ்பம் பலம்-$\frac{1}{4}$, நிலவேம்பு, வெள்ளறுகு, கிளாவேர்ப்பட்டை, சங்கம்வேர், தேன், சர்க்கரை, நெய் இவற்றைப் பாகப்படி சேர்த்து லேகியம் செய்து பாகப்படி சாப்பிட மேகம், மேகவாய்வுகள் பிடிப்புகள் முதலியவை தீரும்.

ஐயாக்கண்ணுப் பிள்ளை,

## பல்லாதகி லேகியம் (வேறு)

சேராங்கொட்டை சேர்-¾, நீரடிமுத்துப்பருப்பு பலம்-2½, அசல் தரமான நாபி விராகனெடை-5, கரு நாபி விராகனெடை-2, எள்ளுபடி-⅛, கார்த்திகைக் கிழங்கு-விராகனெடை-2½, கஸ்தூரிமஞ்சள் பலம்-1½, சேராங் கொட்டையை மூக்கு வெட்டிக் கொள்ளவும். நீரடிமுத்தின் பருப்பின்மேலுள்ள புரணியையெடுத்து விடவும். கருநாபியைக் கோமூத்திரத்தில் போட்டு மூன்றுநாள் ஊறவைத்து நான்காவதுநாள் எடுத்துக் கொள்ளவும். பின்பு எல்லாவற்றையும் மைபோலி டித்து அதற்குச் .சமனெடை வெல்லம் சேர்த்து மறு படியும் இடிக்கவும். மருந்து நைப்பில்லாதிருக்கில் செல்லத்தக்க தேன்விட்டு இடித்து லேகியபதமா யெடுத்து வைத்துக்கொள்ளவும். சுகுமாரதேகிகளுக் காலுல் இடித்த மருந்தை மறுபடியும் கல்வத்தில் எட்டு ஜாமம் கைவிடாமல் அரைத்துக்கொள்ள வேண்டும். பெரிய கழற்சிக்காயளவாக காலை மாலை இரண்டு வேளை யும் ஒரு மண்டலம் சாப்பிட முகத்திலுள்ள நுணுக் காய்க்கிரந்தி, பலவிதகடிகள், கிரந்திகள் இவை தீரும். 18-குஷ்டம் முதலானவைகளும் அதிகப்படாமல் மிதமா யிருக்கும். மேகமுதலியவைகளுக்குக் கொடுக்கலாகாது. இச்சாப் பத்தியம்.

ஐயாக்கண்ணுப் பிள்ளை,

## பறங்கிப்பட்டைப் பிரயோகம்

பறங்கிப்பட்டை சேர்-2 இதை மெல்லிசாகச் சீவி ஒரு சட்டியிற்போட்டு இளநீர் ஜலம் மேற்படி பட்டை முழுகிறவரையில்விட்டு ஊறவைத்து அறுபதி நாழிகை யான பிறகு எடுத்துக் காயவைக்கவும். பட்டையூறின இளநீர் ஜலம் பாக்கியிருந்தால் காய்ந்த பட்டையை அதில் மறுபடியும் ஊறவைத்து காயவைக்கவும். இவ் விதம் உலர்த்தின பட்டையைக் கொஞ்சம் ஈரமிருக்

கும்போதெடுத்துப் புதுக்கலயத்தில் போட்டு கலயத்தின் வாயை மெல்லிய வெள்ளைத் துணியால் கட்டி வைத்துக்கொள்ளவேண்டும். பின்பு கருங்குங்குலியம் பலம்-1, சித்திரமூலம் பலம்-1, சாம்பிராணி பலம்-½, ஜாதிக்காய், ஜாதிபத்திரி, கிராம்பு, ஏலம், வால்மிளகு, குரோசானியோமம், கருஞ்சீரகம், வெந்தயம், கொத்துமல்லி, சண்பகப்பூ, கண்டத்திப்பிலி வகையொன்றுக்கு விராகனெடை-2 இவற்றையிடித்து மெல்லிய தூள் செய்து அறுபது பாகமாய்ப் பிரித்துக் கொள்ள வேண்டும். ஒரு புதுப்பானையானது முன் சித்தப்படுத்தின கலயத்தைக் கவிழ்த்தால் பானைக்குள் வீழ்ந்து விடாமல் சரியாயிருக்கும்படி தயார்செய்துகொள்ளவும். புளியம்புரணியை நெருப்பாக்கி அதை முன் பானைக்குள் கொட்டி, முன் பிரித்து வைத்திருக்கிற மருந்தில் ஒரு பாகத்தை நெருப்பில் போட்டு உடனே மேற்படி கலயத்தை கவிழ்த்து வைக்கவும். புகையடங்கின பின் முன்போல் புளியம்புரணியை நெருப்பாக்கி முன் பானையில் போட்டு முன் மருந்தில் ஒரு பாகத்தைப் போட்டு உடனே கலயம் கவிழ்க்கவும். இவ்விதம் தடவைக்குத் தடவை புது நெருப்புண்டாக்கிப் பானையிற் போட்டு ஒவ்வொரு பங்கு மருந்தும் போட்டுப் புகை வெளியிற் போகாமல் மேற்படி கலயத்திலிருக்கிற மருந்திற்குப் புகை காட்டவும். புகை வெளிப்படாமல் பானைவாய்க்குத் துணிசுற்றி வைக்கவும். இப்படி 60-தடவை செய்து எடுத்துச் சூரணித்துப் பத்திரப்படுத்தவும். வேளை யொன்றுக்குப் பலம்-¼ ஆக இரண்டு வேளையும் ஒரு மண்டலம் உட்கொள்ள சூலைகள், வெடிகள், மேக விகாரங்கள், கிரந்திப்புண்கள், கண்டமாலைகள், தீராத அக்கினிமந்தம், மேகம், இடுப்புச் சூலைகள், பலவித கடிவிகாரங்கள், மேகவாய்வுகள் முதலியவை தீரும். இதற்குப் பத்தியம்: கதலி பஞ்சகம், கடுகு, காயம், பறங்கிக்காய், எள்ளு, புண்ணாக்கு, நல்லெண்ணெய், பூசனிக்காய், ஸ்திரீபோகம் இவையா

காது. பாகற்காய், புளி, புகையிலை, வெள்ளாட்டுக்கறி, செம்மறியாட்டுக்கறி இவையாகும். மருந்து சாப்பிடும் போது எட்டுநாளைக் கொருதடவை விளக்கெண்ணெ யால் ஸ்நானம் செய்யவேண்டும். அவபத்தியமானல் மருந்து முறிந்துபோகும். பழையபடி ஆரம்பிக்க வேண்டும். நல்லெண்ணெய் சம்பந்தம் ஆறுமாதம் வரையில் ஆகாது. வென்னீர் ஸ்நானம் செய்யவேண் டும். 20, 40 தடவை புகை கொடுத்தும் மருந்து ஆரம் பிக்கலாம். ஆனல் அதற்கேற்ற குணம் கொடுக்கும்.

ஐயாக்கண்ணுப் பிள்ளை,

## பறங்கிப்பட்டைப் பிரயோகம் (வேறு)

பறங்கிப்பட்டை சேர்-1 இதை ஈசல் இறகுபோல சீவி ஒரு பாத்திரத்திற் போட்டு அதில் ஒரு இளநீர் ஜலம் விட்டு ஊறவைத்துலர்த்தி அவல்பதமா யெடுத் துக் கொள்ளவும். கிராம்பு, சாதிக்காய், சாதிப்பத்திரி, ஏலம், குரோசாணி யோமம், கருஞ்சீரகம், சன்னலவங் கப்பட்டை, லவங்கப்பத்திரி, கசகசா, சண்பகமொட்டு, சித்திரமூலம், மிளகரணைப்பட்டை வகைக்கு விராக னெடை-2, கருங்குங்கிலியம் பலம்-2 இவையெல்லா வற்றையும் சூரணம் செய்து அதை 11-பாகமாய் வருத்து வைத்துக்கொள்ளவும். இரண்டு மரக்கால் புளியம்புரணியையும் 11-பாகம் செய்துக்கொள்ளவும். ஒரு புதுக்கலையத்தில் மேற்படி பறங்கிப்பட்டையைப் போட்டு அதன் வாய்க்கு வெள்ளைத்துணி கட்டி எழுத் தாணியை நெருப்பில் காயவைத்து அந்தத் துணியில் 10-துவாரம் செய்து கலையத்தைக் கவிழ்த்தால் அதன் வாய் சரியாய் மட்டமாயிருக்கிற ஒரு பெரிய பானையில் புளியம்புரணியின் ஒரு பாகத்தை நெருப்பாக்கிப் போட்டு அதில் ஒளஷதத்தூளில் ஒரு பாகத்தைப் போட்டு உடனே முன் கலையத்தைக் கவிழ்த்துச் சந் தில்லாமல் மண் தடவி கீழ்ப்பானையில் மூன்று விரல் கொள்ளும்படியான ஒரு துவாரம் செய்து அந்தத்

துவாரத்தில் ஊதுகுழாய் வைத்து நெருப்பு அணையா மல் ஊதவேண்டும். புகை வெளியிற் போகாமல் ஜாக் கிரதையாய் மூடிவைக்கவேண்டும். நெருப்பு ஆறிப் போனால் மறுபடியும் ஊதவேண்டும். இப்படி ஐந்து நாட்களுக்குள்ளாக பதினொரு தடவை புகை கொடுத் துப் பட்டையை யெடுத்துப் புதுக்கலயத்தில் வைத் துக் காற்றுபோகாமல் வாய் கட்டி வைத்துப் பத்திரப் படுத்தவும். காலை மாலை இரண்டு வேளையும் மூன்று விரற்கொண்ட அளவு உட்கொள்ள 10-நாளைக்குள் ளாக எவ்வித மேகங்களும் நின்று போகும்; மேகவாயு தீரும். இதைச் சாம்பிடும்போது மொச்சைக்கொட் டையை வேகவைத்துத் தின்கவும். மற்ற வகை பத்தியமும் காக்கவேண்டும்.

ஐயாக்கண்ணுப் பிள்ளை,

## மேகஞதிச் சூரணம்

பூலாங்கிழங்கு, கீழ்க்காய்நெல்லி, ஓரிலைத்தாமரை, கோரைக் கிழங்கு இந்நான்குவகையும் உலர்த்தி வகை யொன்றுக்குப் பலம்-2 நிறுத்தெடுத்து இடித்து வஸ் திரகாயஞ்செய்த சூரணத்துக்குச் சமனெடை சர்க் கரை சேர்த்து காலே அரைக்கால் பலம் வீதம் இரண்டு வேளையும் 20 நாள் சாப்பிட சகல மேகங்களும் தீரும். இச்சாப் பத்தியம்.

ஐயாக்கண்ணுப் பிள்ளை,

## மேகச் சூரணம்

கொட்டைக்கரந்தை, சிறுசெருப்படை, வெள் ளறுகு இந்த மூன்றும் உலர்த்திச் சமபாகமாய்ச்சேர்த் திடித்துச் சூரணித்து அந்தச் சூரணத்திற்குச் சமன் சர்க்கரைசேர்த்து 20-நாள் இரண்டு வேளையும் உட் கொள்ள மேக உபத்திரவம் தீரும்.

ஐயாக்கண்ணுப் பிள்ளை,

## மேக எண்ணெய்

நொச்சிச்சார், கருநொச்சிச்சார், சங்கிலைச்சார், சத்திச்சாரணைச்சார், சங்கங்குப்பிச்சார், சாணுக்கிலைச் சார், சின்னியிலைச்சார், விழுதியிலைச்சார், சிறுசெருப் படைச்சார், பாவட்டைச்சார், கற்றாழைச்சார், கஞ்சாங் கோரைச்சார், கோழியாவாரைச்சார், கொட்டைக் கிரந்தியிலைச்சார், கிரந்திநாயக இலைச்சார், பிரமியப் பூண்டுச்சார், நுணாஇலைச்சார், பேய்மிரட்டி இலைச்சார், ஆடாதோடைச்சார், கழற்சியிலைச்சார், கண்டங்கத் திரிச்சார், வில்வ இலைச்சார், தேவதாரியிலைச்சார், மாவிலைச்சார், அவுரியிலைச்சார், மணித்தக்காளியிலைச் சார், கொள்ளுக்காய் வேளைச்சார், முன்னையிலைச்சார், முடக்கொற்றானிலைச்சார், வெள்ளறுகுச்சார், சன்ன கிலுகிலுப்பைச்சார், தாழைச்சார், கொன்றைச்சார், கிரந்திநாயகச்சார் இவற்றைத் தனித்தனியா யிடித்து ரசம் எடுத்துக்கொள்ளவும். திரவமில்லாதவைகளில் கொஞ்சம் தண்ணீர் தெளித்து இடித்துப் பிழிந்து கொள்ளவும். இந்தச் சாறுகள் வகையொன்றுக்குப் படி-1 ஒரு பெரிய எண்ணெய்ப்பானையில் $1\frac{1}{2}$-படி எண் ணெய் விட்டு அதனுடன் சாறு வகைகளையும் விட்டுக் கலந்து வைக்கவும். விருவங்கிழங்குச்சார், சத்திசார ணைக்கிழங்குச்சார், கோவைக்கிழங்குச்சார், அமுக்கராக் கிழங்குச்சார் இவை வகையொன்றுக்குப் படி-1 இவற் றையும் மேற்படி யெண்ணெயிற் கலந்துக் கொள்ள வும். சாறுவகைகள் சேகரிக்கப் படுகிறவரையில் அப் போதைக்கப்போது அகப்படுமவைகளை எண்ணெயிற் சேர்த்து அது புளிக்காமல் தினம் காய்ச்சிக் கொண்டு வரவேண்டும். செங்கத்தாரிப்பட்டை, செம்பூரான் பட்டை மிளகரணை, மாவிலங்கப்பட்டை, பூதகரப்பான் பட்டை, வில்வவேர், கருஞ்சீரகம், கடுக்காய், காட்டுச் சீரகம், கஸ்தூரிமஞ்சள், மிளகு, ஏலம், ஜாதிக்காய்,

பத்திரி, கிராம்பு, மாசிக்காய், அதிமதுரம் இவை வகையொன்றுக்குப் பலம்-½ இவற்றையெல்லாம் நெகிழ அரைத்து அந்த எண்ணெயிற்கலக்கி மெதுவா யெரித்துக் காய்ச்சி மெழுகுபதத்திலிறக்கி சீசாவில் பத்திரப்படுத்தவும். வேளையொன்றுக்குப் பலம்-½ யாக வியாதிக்குத் தக்கபடி ஒருநாள், மூன்றுநாள், ஐந்துநாள், ஏழுநாள் சாப்பிடவும். எண்ணெய் சாப்பிடுகிறதினம் மாத்திரம் உப்பும் புளியும் நீக்கவேண்டும். வியாதி அரைவாசிசை குணப்பட்டு மற்றப்பாதி குணப்படாதிருந்தால் இடையில் பத்துநாள் விட்டு மறுபடியும் சாப்பிடவும். இப்படிச் சாப்பிட மேகங்கள்-20, இரணம், கடிவிஷம், அண்டவாய்வு, மேகத்தினலுண்டான அஷ்டகுன்மச் சூலை, மகோதரம் இவை தீரும்.

ஐயாக்கண்ணுப் பிள்ளை

## மேக எண்ணெய் (வேறு)

துளசியிலை, மணித்தக்காளியிலை, வேப்பிலை, கழற்சிக்கொடியிலை, முன்னைக்கொழுந்து, சிறுசெருப்படியிலை, நாகக்கொழுந்து, கையாந்தகரையிலை, கோழியாவாரையிலை, குப்பைமேனிக்கொழுந்து, கற்றாழை, வெள்ளறுகு, வெண்ணொச்சியிலை, கிரந்திநாயகம், பிரமியவழுக்கை இவற்றின் சாறு வகை ஒன்றுக்கு சேர்-¼, வெங்காயம் சார் படி-½, கடுக்காய்தூள் விராகனெடை-5, விளக்கெண்ணெய் சேர்-1½, இவையெல்லாவற்றையும் கலந்து மெழுகுபதமாய்க் காய்ச்சி வடிகட்டி வைத்துக் கொள்ளவும். ஒரு விராகனெடை முருதார்சிங்கியைத் தூள்செய்து மேற்படி எண்ணெயிற் கலந்து காலையில் கரண்டி-1, மாலையில் கரண்டி-½ ஆக உட்கொண்டால் எவ்விதமான வெட்டையும் சொஸ்தமாகும். மற்ற மேகங்களும் சொஸ்தமாகும். பத்தியம்: கைப்பு, புளிப்பு தள்ளவும்.

ஐயாக்கண்ணுப் பிள்ளை

## மேகச் சூரணம்

பறங்கிப்பட்டை பலம்-1, பூவரசம்பூ பலம்-2, கெந்தகம் விராகனெடை-1, பளிங்குச்சாம்பிராணி விராகனெடை-2, சீனிச்சர்க்கரை பலம்-2½, பூவரசம்பூ, சாம்பிராணி இவ்விரண்டையும் கலந்து பதமாய் வறுத்து மற்றச்சரக்குகளையும் சேர்த்துச் சூரணம் செய்து சர்க்கரை சேர்த்து இரண்டு வேளையும் வெருகடிப் பிரமாணம் சாப்பிட சகல மேகங்களும் வரட்சிகளும் தீரும்.

ஐயாக்கண்ணுப் பிள்ளை

## மேகஹதி பறங்கிப்பட்டை லேகியம்

பறங்கிப்பட்டை சேர்-1, சுக்கு பலம்-2, கடலுரிஞ்சிப்பட்டை பலம்-2, சீனிச்சர்க்கரை சேர்-2, தேன் சேர்-2, நெய் சேர்-½, சீரகம் சேர்-¼, சீரகத்தை மாத்திரம் நெய்யில் பதமாய் வறுத்து அதனுடன் சருக்கரை தவிர மற்ற சரக்குகளையும் சேர்த்திடித்து வஸ்திரகாயம் செய்து சருக்கரையைப் பாகுசெய்து அதில் சூரணம், நெய், தேன் இவை யெல்லாவற்றையும் சேர்த்து லேகியபதமாயிறக்கிக் கொள்ளவும். கழற்சிக்காயளவு சாப்பிட சகல மேகங்களும் தீரும். இச்சாப் பத்தியம்.

ஐயாக்கண்ணுப் பிள்ளை,

## மதுஸ்மிக ரசாயினம்

பறங்கிப்பட்டை பலம்-10, சுக்கு, திப்பிலி, மிளகு, கடுக்காய், தான்றிக்காய், நெல்லிமுள்ளி, ஏலம், கிராம்பு, ஜாதிக்காய், ஜாதிப்பத்திரி, சன்னலவங்கப் பட்டை, குரோசானியோமம், வாய்விளங்கம், ஓமம், சிற்றரத்தை, சிறுதேக்கு, செவியம், திப்பிலி மூலம், மல்லி, சீரகம், சடாமாஞ்சில், கோஷ்டம், விலாமிச்சம் வேர், அமுக்கராக்கிழங்கு, சிறுநாகப்பூ, வெட்பாலை

யரிசி, வாலுழுவையரிசி, ரேணுகம், கசகசா, நீர்முள்ளி விதை வகைக்கு விராகனெடை-2½, நெருஞ்சிமுள் பலம்-½, தண்ணீர்விட்டான்கிழங்கு பலம்-1, நிலப்பனைக் கிழங்கு பலம்-1, முருங்கைப்பூ பலம்-1, தாதுவிளம்பூ பலம்-1, முந்திரிப் பழம் பலம்-½, பேரீச்சம்பழம், பலம்-½, சீந்தில்சருக்கரை பலம்-½, கற்கண்டுபலம்-5, தேன் படி-¼, நெய் படி-¼ இவற்றை முறைப்படி ரசாயனம் செய்து கொள்ளவும்.

சகலமான உஷ்ணம், மேகம், அரோசிகம் இவை தீரும். தாதுவிர்த்தி யுண்டாகும்.

ஐயாக்கண்ணுப் பிள்ளை,

## வங்க பஸ்பம்

வெள்ளீயம் விராகனெடை-9, ரசம் விராகனெடை-3, ஈயத்தை யுருக்கி ரசத்தைத் தொந்தித்து அடி கெட்டியாயிருக்கிற ஒரு சட்டியில்போட்டு அதை அடுப்பில்வைத்து 12-விராகனெடை மஞ்சளைத் தூள் செய்து வங்கத்தின் மீது கொஞ்சம் கொஞ்சம் கிராசம் கொடுத்து இருப்புக் கரண்டியினால் நன்றாய்க்கிளறி வரவும். இவ்விதம் அந்த மஞ்சத்தூள் எல்லாம் ஆனபின் நன்றாய்க் கடைந்து வறுக்க வங்கம் வெள்ளையாகும். பின்பு சட்டியின் அக்கம் பக்கங்களில் ஒட்டி நிற்பதையும் சுறண்டி ஒன்றாய்ச் சேர்த்து சட்டியின் நடுவில் உருண்டையாகத் திரட்டிவைத்து மேலே ஒரு சட்டி மூடி ஒரு ஜாமம் எரித்து நன்றாய் ஆறினபின் எடுக்க வெண்மையான பஸ்பமாகும். பத்திரப் படுத்தவும். வேளை யொன்றுக்கு அரைப்பண வெடையாக இரண்டு வேளையும் இருபதுநாள் நெய்யில் அல்லது வெண்ணெயில் சாப்பிட சகல மேகங்களும் தீரும்.

ஐயாக்கண்ணுப் பிள்ளை,

## வங்க பஸ்பம் (வேறு)

வெள்ளீயம் பலம்-4 இதை மெல்லிய தகடா யடித்துப் புளியயிலைக்கனம் கத்தரித்துக் கொள்ளவும்.

இருபது பலம் கோழிமுட்டையோட்டை மெல்லிய தூள் செய்து அரைவாசித்தூளை ஒரு சட்டியில் பரப்பி அதன்மேல் மேற்படி தகட்டைப்பரப்பி அதன்மேல் மறுபாதித் தூளைப்போட்டுப் பரவி மேலொரு சட்டி மூடி சீலைமண்செய்து அடுப்பில் ஏற்றிக் குவளம்வேர் விறகினால் 10-ஜாமம் காடாக்கினியாக எரித்து ஆற விட்டெடுக்க பஸ்பமாகும். இதைத் தூள்செய்து வஸ்திரகாயம் செய்து வைத்துக்கொள்ளவும். அரைப்பணவெடையாக இரண்டு வேளையும் 20-நாள் நெய்யில் அல்லது வெண்ணெயில் சாப்பிட சகல மேகங்களும் சொஸ்தமாகும். பிரமேக வியாதிகளுக்கெல்லாம் கொடுக்கலாம். சாறு பிறப்படாத மூலிகையுடன் இதில் விராகனெடை-2 சேர்த்திடித்தால் ரசம் வரும் இச்சாப்பத்தியம்.

ஐயாக்கண்ணுப் பிள்ளை,

## கருவங்க பஸ்பம்

லிங்கம் பலம்-1 இதை எவ்விதமாகிலும் கட்டிக் கொள்ளலாம். அப்படி கட்டின லிங்கம் பலம்-1, காரீயம் பலம்-1 இவ்விரண்டையும் கல்வத்தில்போட்டு கருவூமத்தைச் சாற்றால் 4 ஜாமம் அரைத்து வில்லைதட்டி சட்டியில் வைத்து மேற்சட்டிமூடி சீலைமண்செய்து அடுப்பில் ஏற்றி 4-ஜாமம் தீபாக்கினி, கமலாக்கினி, காடாக்கினியாக முறையே பத்துப்பத்து நாழிகையெரித்து ஆறினபிறகு மருந்தையெடுத்து மறுபடியும் மருந்தை கருவூமத்தைச் சாறுவிட்டு நாலு ஜாமம் அரைத்து வில்லைதட்டி முன்போல சட்டியில் வைத்து சீலைசெய்து முன்போல நாலு ஜாமம் எரித்து ஆறவிட்டெடுத்துத் தூள்செய்து ஒரு டப்பாவில் வைத்துக்கொள்ளவும். இருபது நாள் இரண்டுவேளையும் வேளையொன்றுக்கு அரைப்பணவெடையாக நெய்யில் அல்லது வெண்ணெயில் சாப்பிட சகல மேகமுந் தீரும். தாதுவிர்த்தியுமுண்டாகும். இச்சாப் பத்தியம்.

ஐயாக்கண்ணுப் பிள்ளை,

## நாக பஸ்பம்

நாகம் பலம்-3 இதை இலுப்பை யெண்ணெயில் 21-தடவை யுருக்கிச் சாய்க்கச் சுத்தியாகும்; இவ்விதம் சுத்திசெய்த 2 பல நாகத்தை ஒரு கரண்டியில் உருக்கி மறு கரண்டியில் ஊற்றி அரைச்சூடாயிருக்கும்போது ஒரு பலம் ரசத்தை விட்டுக்கலந்து கல்வத்திற்போட்டு சுவற்றுமுள்ளங்கி யிலைச்சாற்றில் நாலு ஜாமமும், ஒட்டுப்புல் சாற்றில் நாலு ஜாமமும் அரைத்து ஒரு உருண்டையாகத் திரட்டி ஒரு சேருள்ள இரும்புக் குகை செய்து அதில் மேற்படி மாத்திரையை வைத்து குகை வாயை இரும்புத் தகட்டினால் மூடி சீலைமண்செய்து எப்போதும் எரிந்துகொண்டிருக்கிற அடுப்பின்கீழே ஒருசாண் குழிதோண்டி அதில் இந்தக் குகையைப் புதைத்துவைத்து ஒருமாதம் சென்றபின்னெடுத்துக் குகையிலிருக்கிற மருந்தையெடுத்துக் கல்வத்திற் போட்டு சுவற்றுமுள்ளங்கி யிலைச்சாற்ருல் 4-ஜாமம் அரைத்து வில்லை தட்டி ஒரு சட்டியில்வைத்து மேல் சட்டிமூடி சீலைமண்செய்து அடுப்பிலேற்றி நாலு ஜாமம் முறையே தீபாக்கினி, கமலாக்கினி, காடாக்கினி யாகிய இம்மூன்றுவிதத் தீப்போட்டு ஆறினபிறகு எடுக்க பஸ்பமாயிருக்கும். அதைத் தூள்செய்து சீசாவில் வைத்துக்கொள்ளவும். வேளையொன்றுக்கு அரைப்பண வெடையாக இரண்டு வேளையும் ஒரு மண்டலம் உட்கொள்ள மேகவியாதி, நீரடைப்பு, சுவாசம், க்ஷயம் முதலிய சகல வியாதியும் சொஸ்தமாகும். இச்சாப் பத்தியம். அனுபானம் சரீரத்திற்கு தக்கபடி நெய், சர்க்கரை, தேன் இவைகளிலொன்றில் அனுபானித்துச் சாப்பிடவும். இந்த நாகபஸ்பத்திற்குச் சமானமானது ஒன்றுமில்லை. அநேகருக்குக் கொடுத்து பலவித குணத்தைக் கொடுத்திருக்கிறது. இதன் சிறந்த குணம் எவ்வித வியாதியிலும் நற்குணத்தைக் கொடுப்பதே.

ஐயாக்கண்ணுப் பிள்ளை,

## மூர்தார் சிங்கு சிந்தூரம்

மூர்தார்சிங்கு சேர்-1 மெல்லீசாகத் தூள்செய்து தேனில் மூன்றுநாள் போட்டுவைத்து பிறகு எடுத்துக் குகையில் அல்லது இரும்புக் கரண்டியில் உருக்கி ஊதத்தினால் ஈயம் புறப்படும். அந்த ஈயத்தை அடி கனத்த ஒரு சட்டியில் வைத்து அடுப்பேற்றிக் காடாக் கினித் தீப்போட்டு கண்டங்கத்திரி, பொற்கையாந்த கரை, பூவரசம்பூ இம்மூன்றும் சமபாகம் சேர்த்து இடித்து வைத்துக்கொண்டு, சிறுகச் சிறுக மேற்படி வங்கத்தின்மீது கிராசித்து இரும்பு கரண்டியால் புரட்டிக் கொடுக்கவும். இப்படி அது சிந்தூரம் ஆகிற வரையில் வறுத்து சிந்தூரம் ஆனபின் ஆறவிட்டுச் சிமிழில் வைத்துக்கொள்ளவும். வேளையொன்றுக்கு அரைப்பணவெடை தேனில் இரண்டு வேளையும் ஒரு மண்டலம் சாப்பிட சகல மேகரணம் சொஸ்தமாகும். இச்சாப் பத்தியம்.

ஐயாக்கண்ணுப் பிள்ளை,

## அப்பிரேக சிந்தூரம்

அப்பிரேக நவநீதம் சேர்-¼, காந்தம் சேர்-அரைக் கால் இந்த இரண்டையும் கல்வத்தில் போட்டுக் காடி யென்கிற புளித்த தண்ணீர்விட்டு 4-ஜாமம் அரைத்து வில்லை செய்து வராகபுடம் போடவும். புளித்ததண்ணீ ரால் மறுபடியும் 4-ஜாமம் அரைத்து முன்போல் புடம் போடவும். இப்படி புடம் மூன்றும், எலுமிச்சம்பழ ரஸத்தினால் மூன்றுபுடம், முள்ளங்கி ரசத்தினால் ஐந்து புடம், நாகப்பழரசத்தினால் ஐந்துபுடம், மறுபடியும் எலு மிச்சம்பழ ரசத்தினால் மூன்றுபுடம், ஆலம்விழுது ரசத் தினால் ஐந்துபுடம், மறுபடியும் எலுமிச்சம்பழ ரசத்தி னால் மூன்றுபுடம், வெங்காய ரசத்தினால் ஐந்துபுடம், குளுப்பாச்சிக்கிழங்கின் ரசத்தினால் இருபதுபுடம், மறு

படியும் எலுமிச்சம்பழ ரசத்திலால் ஒருபுடம் போடவும்: இப்படி 53-புடமும் வராகபுடமாகவே போட்டால் சிந்தூர மாகும். சிந்தூரத்தில் ஜீலயிருக்காது. ஆயிரம்புடமிட்ட அப்பிரேக சிந்தூரத்தின் குணம் இதிலிருக்கும். மேகம் இருபத்தொன்று, ஜலமேகம் இருபத்தொன்று ஆகி யவை சொஸ்தமாகும். இதற்கு அனுபானம்: வெள்ளை மேகத்துக்குக் கீழ்க்காய் நெல்லிவேரை யரைத்து கழற் சிக்காய்ப் பிரமாணமெடுத்து அதிற்பாதி பசுவின் நெய் சேர்த்து அதில் அரைவிராகனெடை அப்பிரேக சிந்தூரம் கலந்து 2 வேளையும் ஒரு மண்டலம் உட் கொண்டால் சுக்கிலமேகம் இருபத்தொன்றும் சொஸ்த மாகும். ஜலமேகத்திற்கு அனுபானம்: சீந்தில் சருக் கரை பணவெடை-1, வெண்ணெய் விராகனெடை-1, அப்பிரேக சிந்தூரம் பணவெடை-1 இவ்விதமாகச் சேர்த்து ஒரு மண்டலம் இரண்டு வேளையு முட்கொண் டால் ஜலமேகம் இருபத்தொன்றும் நிவர்த்தியாகும்.

ஐயாக்கண்ணுப் பிள்ளை,

## ஜலமேகக் கியாழம்

கருவேப்பிலைவேர்க்கு, பருத்திப்பருப்பு, மஞ்சள், மரமஞ்சள், கடுக்காய்த்தோல், தான்றிக்காய் நெல்லி முள்ளி வகைக்குப்பலம்-1, அசல்தரமான கடலுருஞ்சிப் பட்டை பலம்-7, இவ்வெட்டுவகை சரக்கையும் இடித்து தூள்செய்து புதுக் கலயத்தில் வைத்துக்கொண்டு காலை மாலை 2-வேளையும், வேளை யொன்றுக்கு ஒவ் வொரு பலம் கொஞ்சம் வறுத்து ½-படி ஜலம்விட்டுக் காய்ச்சி ¼-சேர் கியாழம் செய்து சாப்பிடவும். இவ்விதம் காலை மாலை புதுக்கியாழம் செய்து ஏழுநாள் உட்கொண்டால் ஆரம்பமான மதுமேகம், ஜலமேகம் கால்வாசி சொஸ்தமாகும். மறுபடியும் முன்போலவே கஷாயம் செய்து எப்போதும் இடைவிடாமல் உட் கொள்ள வேண்டும். எப்போதும் ஸ்திரீ போகம் தள்ளி வைக்கவேண்டும். இந்தக் கியாழம் உட்கொள்ளும்

போது பித்தவுபரியானால் நாலுநாள் நிறுத்தி மறுபடி ஆரம்பிக்கவும். கடலுருஞ்சிப் பட்டையை மாத்து சம் பந்தம் இல்லாததாய் சம்பாதிக்கவேண்டும். இது அநேக ரால் மாற்றியே விற்கப்படுகிறபடியால் அசலானதா மாய் வாங்கவேண்டும். அப்படிக்கில்லாவிட்டால் குணத் திற்குப் பதில் துர்க்குண மூண்டாகும்.

ஐயாக்கண்ணுப் பிள்ளை

## அப்பிரேகச் சஞ்சீவிச் சூரணம்

சன்னலவங்கப்பட்டை, லவங்கப்பத்திரி, சிறு நாகப்பூ, ஏலம், சந்தனம், வால்மிளகு, ஜாதிக்காய், கோஷ்டம், நெரிஞ்சிமுள்ளு, மரமஞ்சள், பூனைக்காலி விதை, முந்திரிச்சம்பழம், பேரீச்சங்காய், நெல்லி முள்ளி, கருநெய்தற்கிழங்கு, பறங்கிப்பட்டை, கோரைக் கிழங்கு, தாளிசப்பத்திரி, தேற்றான்விதை, வெள்ளரி விதை, வெட்டிவேர், அமுக்கராவேர், ஆவாரைவேர்ப் பட்டை, விலாமிச்சம்வேர், தாமரைக்கிழங்கு, கீழ்க் காய்நெல்லி, நிலஆவாரை, நன்னாரிவேர், அதிமதுரம், இலவம்பிசின், நீர்முள்ளிவிதை, ஜாதிப்பத்திரி, கிராம்பு, சீரகம், நிலப்பனைக்கிழங்கு வகைக்குப் பலம்-½, இவற்றைச் சூரணித்து வஸ்திரகாயம் செய்து அதற்குச் சமனெடை கற்கண்டு, சீந்தில்சர்க்கரை பலம்-2, அப்பி ரேக சிந்தூரம் பலம்-2, தேன் சேர்-1 கற்கண்டைப் பாகுசெய்து பாகு பதத்தில் மற்றவைகளை யொன்றாய்க் கலந்து அதிற் கொட்டிக்கிளறி பக்குவமாய் லேகியம் செய்துக்கொள்ளவும், இதனைக் காலை மாலை 2-வேளை யும் கழற்சிக்காய்ப் பிரமாணம் உட்கொள்ள பலவகை பித்தரோகம், பலவகை மேகரோகம், இருமல் ஆகிய இவைகள் தீரும், இச்சாப் பத்தியம்.

ஐயாக்கண்ணுப் பிள்ளை,

## குன்ம ரசாயனம்

சுத்திசெய்த குக்கில் பலம்-3, இதை வேப்பம் பட்டை, கண்டங்கத்திரி, சீந்தில்தண்டு இம்மூன்று

வகைகளிலும் சுத்திசெய்துக்கொள்ளவும். கொத்துமல்லி, ஏலம், ஜாதிக்காய், லவங்கம், வாலுழுவையரிசி, அதிமதுரம், அரத்தை, சித்தர்மூலம், சுக்கு, மிளகு, திப்பிலி வகைக்கு விராகனெடை-2, சர்க்கரை பலம்-5, தேன் பலம்-5, பசுவின் நெய் பலம்-2½, கடைச்சரக்குகளையிடித்து வஸ்திரகாயம் செய்து, சர்க்கரையைப் பாகுசெய்து அதில் சூரணம் கொட்டி நெய், தேன் சேர்த்து ரசாயனம் செய்துக்கொள்ளவும். 2-வேளையும் கழற்சிக்காய்ப் பிரமாணம் உட்கொண்டால் மார்புவலி, வயிற்றுவலி, சுரம், குன்மம், அதிசாரம் சொஸ்தமாகும்; தாது விர்.த்தியாகும்; சரீரப்புஷ்டி யுண்டாகும்; மேகங்களும் சொஸ்தமாகும். புளிப்பும் கைப்பும் தள்ளவும்.

ஐயாக்கண்ணுப் பிள்ளை,

## சீன பாகச் சூரணம்

சுக்கு, திப்பிலி, மிளகு, கடுக்காய், தான்றிக்காய், நெல்லிமுள்ளி, வெட்பாலையரிசி, கொத்துமல்லி, வாய்விளங்கம், காந்தம், வால்மிளகு, அரிதாரம், லிங்கம், வெண்காரம், ஓமம், துருசு, துத்தம், ஜாதிக்காய், ஜாதிப்பத்திரி, கிராம்பு, நவச்சாரம், எவச்சாரம், சீரகம், கருஞ்சீரகம், குரோசானியோமம், அபின், கஸ்தூரி மஞ்சள், கொடிவேலி வேர்ப்பட்டை, கடுகு, கல்மதம், கல்நார், வாலுழுவையரிசி, கார்போகஅரிசி, மூங்கிலரிசி வகைக்குப்பலம்-¼, பறங்கிப்பட்டை பலம்-4, சுத்தித்த கந்தகம் பலம்-2, சுத்தித்த குக்கில் சேர்-1 வெண்காரத்தைப் பொரித்துக் கொள்ளவும். இவற்றுள் அரிதாரம், ஜாதிலிங்கம் வெண்காரம், துருசு, துத்தம், நவச்சாரம், எவச்சாரம், கல்மதம், கல்நார், கந்தகம், அபின், காந்தம் இவற்றைக் கல்வத்திற் போட்டு தண்ணீர்விட்டு நாலுஜாமம் அரைத்து, மற்றச்சரக்குகளையும் குக்கிலையும் சேர்த்து உறலில் இடித்து வஸ்திரகாயம் செய்த சூரணத்தை முன்மருந்துடன் சேர்த்து நாலுஜாமம் அரைத்து நன்ருய்க்கலந்தபின் ஒரு புதுக்

கலயத்தில் வைத்துக் கொள்ளவும். வேளையொன்றுக்கு வெருகடி பிரமாணம் இரண்டுவேளையும் தேனில் மத்தித்து உட்கொண்டால் புண்கள், கிரந்தி, சூலை, மேகம், மேகச்சூலை, வாயு, கடிவகைகள் ஆகிய சகல வியாதிகளும் தீரும். இச்சாப்பத்தியம்.

ஐயாக்கண்ணுப் பிள்ளை,

## ரண மேற்பூச் செண்ணெய்

ரசம், கெந்தகம், மனோசிலை, வெங்காரம், அரிதாரம், மரத்துவெள்ளை, நீரடிமுத்துப் பருப்பு, வேம்பாடம் பட்டை வகைக்கு விராகனெடை-3, துளசி, வேளை, உத்தாமணி, குப்பைமேனி, கையாந்தகரை, வெற்றிலை இவற்றின் சார் வகைக்குப் படி-$\frac{1}{4}$, நல்லெண்ணெய்படி-$\frac{1}{4}$ சரக்குகளை மைபோல் தூள்செய்து எண்ணெயில் கலந்து அதனுடன் சாறுகளையும் சேர்த்து பதமாய்க் காய்ச்சி இறக்கிப் பத்திரப்படுத்தவும். ரணங்களின் மேற் பூசிவர அவையெல்லாவகைகளும் தீரும்.

ஐயாக்கண்ணுப் பிள்ளை,

## மேகரண எண்ணெய்

நாரத்தம்வேர், எலுமிச்சம்வேர், வெள்ளறுகு, விஷ்ணுகிரந்தி, திப்பிலிமூலம், சித்திரமூலம் வகைக்குப் பலம்-1, இவற்றை யிடித்து ஆறுபடி ஜலம் விட்டு எட்டில் ஒன்றாய்க் காய்ச்சி வடிகட்டி அதில் 3-சேர் நல்லெண்ணெய் சேர்த்து அடுப்பிலேற்றிச் சிறு தீயாக எரித்து அதில் பூண்டு, வசம்பு, சதகுப்பை, திப்பிலி, கருஞ்சீரகம், கார்போகஅரிசி, கஸ்தூரிமஞ்சள், கம்பிபிசின், காசுக்கட்டி, கருங்குங்கிலியம், செங்கத்தாரிப் பட்டை, பூதகரப்பான்பட்டை, குடசப்பாலைப்பட்டை, துருசு, கெந்தகம், ரசகற்பூரம், ஜாதிலிங்கம் வகைக்கு விராகனெடை-1 இவற்றை நாலுஜாமம் மைபோல அரைக்கவும். அரைக்கும்போது மேற்படி கஷாயத்தினால் அல்லது முன் வடிகட்டின திப்பியில் தண்ணீர்

விட்டு கொஞ்சம் கொதிக்கவைத்து வடிகட்டின கஷா யத்திஞல் அரைக்கவும். பின்பு எண்ணெயிற் கலந்து காய்ச்சி மெழுகு பதத்தில் இறக்கி அடிவண்டலுடன் வாய் அகண்ட ஒரு சீசாவில் பத்திரப்படுத்தவும். எண் ணெயைக் கலக்கி வண்டலுடன் காலையில் ஒரு கரண்டி மாலையில் ஒரு கரண்டி வீதம் ஒரு மண்டலம் உட் கொள்ள கடிரணம், மேகரணம் முதலிய அனேகவகை ரணங்கள் தீரும். கண்டமாலைக்கு இரண்டு மண்டலம் கொடுக்கவும். குஷ்டரணங்களுக்கு நாலு மண்டலம் கொடுக்கவும். இதனல் குஷ்டம் பற்றறத் தீராவிட்டா லும் அதிகப்படுகிறதில்லை.

இதற்கு முக்கிய பத்தியம் :

மாம்பழம், அதன் ஊறுகாய், அதன் வடுகு இவை கள் சுத்தமாய் ஆகாது. கதலிபஞ்சகமும் அப்படியே யாகாது. எண்ணெய் குடித்துவிட்ட ஆறுமாசம் வரை யிலும் மேற்கண்டவைகளைத் தள்ளவேண்டும். சரீரத் தில் சூடுசெய்தால் அப்போது நெய், மோர், கொஞ்சம் சேர்த்துக்கொள்ளலாம். இது மிகவும் பிரசித்தமானது; தீர்க்கரோகங்களும் சொஸ்தமாகி யிருக்கின்றன.

ஐயாக்கண்ணுப் பிள்ளை,

## கெந்தக ரசாயனம்

சுத்திசெய்த கெந்தகம் பலம்-6, மிளகு, திப்பிலி, கடுக்காய், தான்றிக்காய், நெல்லிமுள்ளி, லவங்கப் பட்டை, லவங்கப்பத்திரி, ஏலம், சணப்பவிதை, சேராங் கொட்டை, (இதை மூக்கு வெட்டி நீக்கவும்) வாய்விளங் கம் வகைக்குப் பலம்-1 இவற்றுள் கெந்தகம் தவிர மற்ற சரக்குகளையிடித்து வஸ்திரகாயம்செய்து கெந்த கத்தைக் கல்வத்தில் மைபோல அரைத்து அதில் மூன் சூரணமும் சேர்த்து நாலுஜாமம் அரைத்து எல்லாம் ஒன்ருய் நன்ருயிரேகித்தபின் செல்லத்தக்க தேன் விட்டு இரண்டு ஜாமம் அரைத்துப் பெரிய கழற்சிக்கா

யளவு உருண்டை செய்து வைத்துக் கொள்ளவும். தேகம், ரோகம் முதலியவைகளுக்குத் தக்கபடி வெண்ணெயில் அல்லது நெய்யில் வேளை யொன்றுக்கு ஒரு உருண்டையாக மத்தித்து ஒரு மண்டலம் நல்லெண்ணெய், புளி, உப்பு ரசபாகங்கள் ஆகிய இவை தள்ளி சாப்பிட 18-வித குஷ்டங்கள், மலமூத்திரகாஞ்சனம், மார்புவலி இவை தீரும். யானையின் பலத்தைப்போன்ற பலமும், குதிரையின் வேகத்தைப்போன்ற வேகமுமுண்டாகி வஜ்ஜிர தேகமாகும்.

ஐயாக்கண்ணுப் பிள்ளை,

## கந்தக ரசாயனம் (வேறு)

சுத்திசெய்த கெந்தகம், குக்கில், பறங்கிப்பட்டை, வாய்விளங்கம், நீரடிமுத்துப்பருப்பு வகைக்குப் பலம்-2, மூக்கு வெட்டின சேராங்கொட்டை பலம்-10, கெந்தகத்தைத் தவிர மற்ற சரக்குகளைக் கல்லுறலிற் போட்டு 4-ஜாம மிடித்துப் பின்பு கெந்தகத்தை முன்னர் தனியாய்த் தூள்செய்து உறலிலுள்ள மருந்துடன் சேர்த்திடித்தெடுத்து கல்வத்தில் 4-ஜாமம் அரைத்துப் பின்பு செல்லத்தக்க தேன்விட்டு இரண்டு ஜாமம் அரைத்துப் பெரிய கழற்சிக்காய்ப் பிரமாணம் உருண்டை செய்து வேளை யொன்றுக்கு ஒரு உருண்டையாக இரண்டு வேளையும் மண்டலம் உட்கொள்ள குஷ்டம், பிளவை, மேகம், சொறி, கண்டமாலை இவை சொஸ்தமாகும். மருந்து தீர்க்கமாகச் சாப்பிடவும். இச்சாப் பத்தியம்.

ஐயாக்கண்ணுப் பிள்ளை,

## கெந்தக மெழுகு

கெந்தகம் சேர்-1 இதை யொரு இரும்புக் கரண்டியில் போட்டு அதன்மேல் ஒரு பலம் நெய் விட்டு கெந்தகத்தையுருக்கி, கையாந்தகரைச்சாறு பிழிந்து வஸ்திரத்தில் வடிகட்டி மேற்படி கெந்தகம் முழுகும்படியான சாற்றை ஒரு பாத்திரத்தில் விட்டு முன்னுருக்கின

கெந்தகத்தை யூற்றவும். ஆறினபின்னெடுத்து முன் போல கரண்டியில்வைத்து முன்னளவு நெய் சேர்த் துருக்கி, மேற்படி கையாந்தகரைச்சாறு புதிதாய் முன்னளவு வேறொரு பாத்திரத்தில்விட்டு உருகின கெந்தகத்தை யூற்றவும். இப்படியே மூன்றுந்தடவை யும் செய்யவும். இவ்விதமே மும்மூன்று தடவை, குப்பைமேனிச்சாறு, பொன்னுங்காணிச்சாறு, தாழை விழுதுச்சாறு ஆகியவைகளில் சாய்த்து எடுத்து ஒரு இரும்புக் கரண்டியில் வைத்து தாழம்விழுதுரசம் சேர்-¼, இந்தச்சாற்றை கெந்தகத்தில் சிறுகச்சிறுக விட்டு சுருக்குக் கொடுக்கவும். பின்பு அந்த கெந்த கத்தைக் கல்வத்தில் மைபோல தூள்செய்து தேன் விட்டு நாலு ஜாமம் அரைத்து மெழுகுபதத்தில் மாட் டுக்கொம்புச் சிமிழில் வைத்துக்கொள்ளவும். வேளை யொன்றுக்கு மிளகுப் பிரமாணம் இரண்டு வேளையும் உட்கொண்டால் ஒரு மண்டலத்தில் குஷ்டம் அனுகூல மாகும். இச்சாப் பத்தியம்.

ஐயாக்கண்ணுப் பிள்ளை,

## புகைப் பிரயோகம்

லிங்கம் விராகனெடை-1, அரிதாரம் விராக னெடை-2, ஜாதிக்காய் விராகனெடை-1, துத்தம் விரா கனெடை-4, துருசு விராகனெடை-1 இவற்றை வேலிப் பருத்திச்சாற்ருல் நாலு ஜாமம், பாகையிலைச்சாற்ருல் நாலுஜாமம், நொச்சியிலைச்சாற்ருல் நாலுஜாமம் அரைத்து இரண்டுசாண்நீளம் வெள்ளைத்துணிசவுக்கத் தில்தடவி அறுபதுவர்த்திசெய்து நிழலில் காயவைத்து பத்திரப்படுத்தவும். ஒரு வர்த்தியைச் சுங்கானில் வைத்துக் காலை வேளையில் சுருட்டு குடிக்கிறதுபோலக் குடிக்கவும். தேகம், ரோகம் முதலியவைகளுக்குத் தக்கபடி பிரதிதினம் அல்லது ஒன்றைவிட்டொருநாள் நாலொன்றிற் கொருதடவையாக 8-தடவை செய்ய வேண்டும். இதனுல் கபாலசூலை, மேகவிரணங்கள்

தீரும். விரண வியாதியஸ்தர்கள் விரணமாறி மருந்து விட்ட மறுநாள் கண்டஸ்நானம் செய்யவேண்டும். கபால சூலைக்காரர்கள் அப்பியங்கன ஸ்நானம் செய்ய வேண்டும். பத்தியம்: புளிப்பு, கைப்பு இவை தள்ளவும்.

ஐயாக்கண்ணுப் பிள்ளை

## கிரந்திக்கு மூலிகைப் பிரயோகம்

நுணுக்காய், அதன் இலை, அதன் பட்டை, மறு தோன்றிப்பட்டை இனுசுக்கு கொட்டைப்பாக்களவு அரைத்துக் கலந்து உட்கொண்டு மேலே கால்சேர் வெந்நீர்குடிக்கவும். இவ்விதமாக மூன்றுநாள்சாப்பிட்டு உப்பில்லாப் பத்தியமிருக்க கிரந்தி சொஸ்தமாகும்.

ஐயாக்கண்ணுப் பிள்ளை,

## அரையாப்பு மருந்து

நத்தைச்சூரிவேர் சேர்-1 அதை மைபோல நைய இடித்து இரண்டுசேர் விளக்கெண்ணெயிற் கலந்து வெய்யிலில் ஒரு வாரம் வைத்தெரித்துக் காலையில் பலம்-2 அல்லது 1½-பலம் சாப்பிடவும். இவ்விதம் ஐந்துநாள் செய்து உப்பும், புளியும் நீக்க; அரையாப்பு, விப்புருதி, துடைவாளை ஆகிய இவைகள் தீரும்.

ஐயாக்கண்ணுப் பிள்ளை,

## சுராங்குச மாத்திரை

கௌரிபாஷாணம், குதிரைப்பல்பாஷாணம், கெந்தகம், அரிதாரம், மனோசிலை இந்த ஆறுவகைகளையும் சுத்திசெய்து வகைக்கு விராகனெடை-3 எடுத்துக் கல்வத்திற் போட்டு பாகையிலைச் சாற்றினல் 4-ஜாமமும், ஒருசேர் மிளகைக் கிஷாயம் செய்து அந்தக் கிஷாயத்தினல் 4-ஜாமமும், அவுரிவேர் கிஷாயத்தினல் 4-ஜாமமும் அரைத்துப் பிறகு கடுகுபோல மாத்திரை செய்துக்கொள்ளவும். இதைத் தக்க அனுபானங்களில் கொடுக்க, சகல சன்னிபாதங்களும், சுரங்களும் தீரும்.

ஐயாக்கண்ணுப் பிள்ளை,

## சருவசுராங்குச மாத்திரை

ரசம், கெந்தகம், மனோசிலை, அரிதாரம், துத்தம், துருசு, வெள்ளைப்பாஷாணம் வகைக்கு விராகனெடை-3 இவற்றை நெகிழப் பொடிசெய்து ஒரு சட்டியின் நடு வில்வைத்துச் சாரணைச்சாறு கொஞ்சம் அதில்விட்டு அதன்மேல் ஒரு வெங்கலக்கிண்ணத்தைக் கவிழ்த்து சந்து தெரியாமல் சீலைமண்செய்து சட்டியில் மணல் நிறைத்து அந்தச் சட்டியை அடுப்பின்மேல்வைத்து குவளம் விறகினால் தீபாக்கினியாக ஒருஜாமம் எரித்து ஆறினபிறகு எடுக்க மருந்து கருப்பாயிருக்கும். நிறை யும் குறையாதிருக்கும். அதையெடுத்து கல்வத்தில் போட்டு தக்காளிரசத்தால் இரண்டு ஜாமமும், மணித் தக்காளிச் சாற்றால் இரண்டு ஜாமமும் அரைத்து பச் சைப்பயறுப் பிரமாணம் மாத்திரை செய்யவும். இதைத் தக்க அனுபானத்தில் மூன்றுவேளை கொடுக்க சகல சுரங்களும் தீரும்.

ஐயாக்கண்ணுப் பிள்ளை,

## பதங்கப் பிரயோகம்

ரசம் பலம்-1, கெந்தகம் பலம்-1, அரிதாரம் பலம்-1, மனோசிலை பலம்-1 இந்த நான்கு வகைகளையும் பொடி செய்து ஒரு சட்டியில் மத்தியில்வைத்து 18-பலம் நிறை யுள்ள தாம்பிரக்கிண்ணியொன்றை மேற்படி மருந் தின்மீது கவிழ்த்து இடுக்கில்லாமல் சீலைமண்செய்து சட்டியை அடுப்பேற்றி நாலுஜாமம் எரித்து பிறகு கிண்ணத்தை யெடுத்துப் பார்த்தால், கிண்ணத்தில் பதங்கித்திருக்கும். அந்த கிண்ணத்தையெடுத்து ஒரு பலகையின்மீதில் கவிழ்த்தபடி தட்டினால் உள்ளிருக் கிற மருந்து பலகையின்மேல்விழும். அதையெடுத்து பொடிசெய்து வைத்துக்கொள்ளவும். அனுபான பேதங்களில் கொடுத்தால் ஜன்னி, சுரம் ஆகியவை சொஸ்தமாகும்.

ஐயாக்கண்ணுப் பிள்ளை,

## காரீய சிந்தூரம்

காரீயம் பலம்-1, ரசம் பலம்-1, கெந்தகம் பலம்-1, லிங்கம் பலம்-1, கௌரிபாஷாணம் பலம்-1, பொரித்த வெண்காரம் பலம்-1 இவற்றைச் சிறு செருப்படைச் சாற்ருல் 4-ஜாமமும், எலுமிச்சம்பழச் சாற்ருல் 4-ஜாமமும் அரைத்து ஒரு இரும்பு குகைக்குள் வைத்து அதன் வாயை இரும்பு வில்லையிஞல் மூடி சீலைமண் செய்து எப்போதும் எரியும் வீட்டடுப்பில் நான்குவிரல் ஆழம்செய்து மேற்படி குகையை அதில் புதைத்து வைத்து முப்பதுநாள் சென்ற பின்னெடுத்து குகையிலிருக்கிற சிந்தூரத்தைச் சிமிழில் பத்திரப்படுத்தவும். வேளை யொன்றுக்கு அரைப்பணவெடையாக சரீர சுபாவத்துக்குத் தக்கபடி வெல்லத்தில் அல்லது நெய்யில் கொடுக்க சகல சுரமும் தீரும். பத்தியம் உப்பு, புளி இவை தள்ளவும்.

ஐயாக்கண்ணுப் பிள்ளை,

## பஞ்சரத்தின மெழுகு

லோகசிந்தூரம், தாளகசிந்தூரம், கட்டினபாஷாணம், ஜாதிலிங்கம், ரசசிந்தூரம் வகைக்கு விராகனெடை-1 சர்க்கரை நாரத்தம்பழத்தளவு சுண்ணும்பைத் தண்ணீரில் கரைத்து தெளிவெடுத்து மேற்படி சரக்குகளைக் கல்வத்திலிட்டு மேற்படி தெளிவுவிட்டு இரண்டு ஜாமமும் முலைப்பால்விட்டு இரண்டு ஜாமமும் அரைத்துப் பசையன்றி மெழுகு பதமானவுடன் கொஞ்சம் தேன், நெய் இவ்விரண்டும் கலந்து அதில்விட்டு அரைத்து சீஞப்பாத்திர டப்பியில் பத்திரப்படுத்தவும். வேளையொன்றுக்கு ஒரு பச்சைப் பயறளவு மூன்று பொழுது கொடுக்க சீதசுரம், தாபசுரம், முதலிய எவ்விதமான சுரமும் தீரும். இதற்கு அனுபானம்: சுக்கு, பற்பாடகம், சிறுகாஞ்சோரிவேர் இவற்றைக் கியாழம் செய்து முன்பு அவுடதத்தைத்

தேனில் மத்தித்து கொடுத்து அதன்மேல் மேற்படி கியாழம் கொடுக்கவும்.

ஐயாக்கண்ணுப் பிள்ளை,

## திரிவிக்கிரம மை

ரசம், கெந்தகம், வெள்ளைப்பாஷாணம், அரிதாரம், நாவி, நேர்வாளப்பருப்பு, கொட்டாங்கச்சி சுட்டகரி, வகைக்கு விராகனெடை-2 இவ்வேழு சரக்கையும், கல்வத்தில் போட்டுத் தேங்காய்ப்பால் விட்டு நாலு ஜாமம் அரைத்து மெழுகு பதத்தி லெடுத்துச் சிமிழில் பத்திரப் படுத்தவும். நான்காம்முறை, எட்டாம்முறை, பதினைந்தாம்முறை, முப்பதாம் முறையாய் வருகிற மாறல் சுரங்களுக்கும் வயிற்றிலுள்ளவாயு உபத்திரவங் களுக்கும், தேக பலத்திற் கேற்றபடி எட்டுநாளைக் கொருதடவை குன்றிமணியளவு சர்க்கரை கரைத்த ஜலத்தில் கலக்கிக் காலையில் பேதிக்குக் கொடுத்துப் பத்தியம் வைக்க மேற்படி வியாதிகள் தீரும்.

ஐயாக்கண்ணுப் பிள்ளை

## வாதராக்ஷஸ சூரணம்

ரசம், கெந்தகம், சுக்கு, மிளகு, திப்பிலி, சீரகம், கருஞ்சீரகம், கண்டத்திப்பிலி, அறத்தை. ஓமம், வெண் காரம் வகைக்குப் பலம்-½, இவற்றுள் ரசம், கெந்தகம் இவ்விரண்டையும் கல்வத்திற்போட்டு மைபோலரைத்து அதனுடன் வெண்காரத்தைப் பொரித்து சேர்த்து மறுபடியும் நன்றா யரைக்கவும். மற்ற சரக்குகளை இடித்து வஸ்திரகாயம் செய்து முன் மருந்துடன் சேர்த்து நாலுஜாமம் அரைத்து ஒரு சீசாவில் வைத் துக் கொள்ளவும், வேளை யொன்றுக்கு ஒரு பண வெடையாக இரண்டு வேளையும் தேனில் கலந்து கொடுக்க, அசீர்ணபேதி, விஷபேதி, உடம்புவலி, வயிற்றுசூலை, ஜலதோஷம், கபம், தருணசுரம் இவைக ளெல்லாம் சொஸ்தமாகும்.

ஐயாக்கண்ணுப் பிள்ளை

## ஜன்னி யெண்ணெய்

பூணுகம், குன்றிமணிவேர், ஊசிமல்லிகை வேர், வெள்ளைக்குன்றிமணியிலைச்சார், மரமஞ்சள், குங்கிலியம் வகை 1-க்கு விராகனெடை-3, ஐந்தெண்ணெய் வகை 1-க்குப் பலம்-1½ முன் சரக்குகளை வெள்ளைக் குன்றிமணியிலைச்சாற்றால் அரைத்து எண்ணெய்களை ஒன்ருய்க்கலந்து அதில் கரைத்துக் காய்ச்சி மெழுகு பதத்தி லிறக்கிப் பத்திரப்படுத்தவும். ஜன்னிக்குச் சரீரத்தில் தடவலாம். மூக்கில் நசியம் செய்யலாம். உள்ளுக்கும் கொடுக்கலாம். இப்படிச் செய்ய அது தீரும்.

ஐயாக்கண்ணுப் பிள்ளை,

## ஆபத்தாரணை மாத்திரை

சாஸ்திரபேதி, கடுகுரோகணி, அதிமதுரம், ரசம், லிங்கம், மனேசிலை, அரிதாரம், கெந்தகம், வெட்டிவேர், விலாமிச்சம்வேர், நன்னரிவேர், தாம்பிரபஸ்பம், சந்தனம், பூணுகம் வகைக்கு விராகனெடை-3 முசுமுட்டை ரசத்தினல் மூன்றுநாளும், இளநீர் ஜலத்தினல் மூன்று நாளும் அரைத்து உளுந்துப் பிரமாணம் மாத்திரை செய்து முலைப்பாலில் வேளை யொன்றுக்கு ஒரு மாத்திரையாக இரண்டுவேளையும் கொடுக்க அந்தரதாகம், பிரமை, ஜன்னி இவை தீரும்.

ஐயாக்கண்ணுப் பிள்ளை,

## விஷபூபதி தைலம்

ரசம், கெந்தகம், நாபி, நேர்வாளப்பருப்பு, கடுக்காய்த்தோல், பூந்திக்கொட்டைத்தோல் வகை 1-க்கு விராகனெடை-3 இவற்றை வேப்பெண்ணெயால் நாலு ஜாமம் அரைத்து மெழுகுபதமா யெடுத்து வைத்துக் கொள்ளவும். வேளை யொன்றுக்குக் குன்றிமணியளவு உட்கொண்டால் எவ்வித விஷரோகமும் சொஸ்தமாகும்.

ஐயாக்கண்ணுப் பிள்ளை,

## சஞ்சீவி மாத்திரை

பித்தளை அரப்பொடி, செம்பு அரப்பொடி, வெங்கல அரப்பொடி, இரும்பு அரப்பொடி, சுத்திசெய்த அரிதாரம், திப்பிலி வகைக்குப்பலம்-1, காந்தம் பலம்-2. கெந்தகம் பலம்-6, கற்றாழைச் சோற்றினுல் இருபத்து நான்குஜாமம் அரைத்து அடி கெட்டியாயிருக்கிற சட்டியின் நடுவில் அடையாகத் தட்டிவைத்து வெய்யிலில் காயவைத்து காய்ந்தபிறகு மேலே ஒரு சட்டிமூடி சீலை மண்செய்து சட்டியை அடுப்பேற்றி இருபத்துநான்கு ஜாமம் வடவாக்கினித் தீப்போட்டு ஆறினபின்னெடுத்துத் தூள்செய்து சிமிழில் வைக்கவும், அல்லது கல்வத்திலிட்டு இஞ்சிச்சாறுவிட்டு அரைத்துக் குன்றிமணிப் பிரமாணம் மாத்திரைசெய்து வைத்துக்கொள்ளவும். வேளையொன்றுக்கு ஒரு குன்றிமணியளவு இரண்டு வேளையும் அரைமண்டலம் உட்கொண்டால் சுரம், வாய்வு சம்பந்தரோகம், கபசம்பந்தரோகம், பாண்டு சம்பந்தரோகம் சொஸ்தமாகும். தேகம் ரோகம் ஆகிய இவற்றிற்குத் தக்க அனுபானத்தில் கொடுக்கலாம். முக்கியமாய் தேனில் கொடுக்கலாம். இது பிரசித்தமான அவுடதம்.

ஐயாக்கண்ணுப் பிள்ளை,

## மூலகுன்மவாயு வாதராட்சஸ மாத்திரை

காந்தசிந்தூரம், ரசசிந்தூரம், லோகசிந்தூரம், தாம்பிரசிந்தூரம் இவை வகை 1-க்கு விராகனெடை-3, ரசம், பெருஞ்சீரகம், நாபி, நெரிவிஷம், லிங்கம், மனோசிலை, வெட்பாலையரிசி, நன்னாரிவேர், சுக்கு, திப்பிலி, மிளகு, கற்றாழையுப்பு, அமுரியுப்பு, சவுக்காரச்சுன்னம் வகைக்கு விராகனெடை-3, பொரித்தவெண்காரம், கெந்தகம், நவச்சாரம், நேர்வாளப்பருப்பு இவை வகை யொன்றுக்கு விராகனெடை-5, இவற்றுள் சுக்கு, திப்பிலி, மிளகு, நன்னாரிவேர், வெட்பாலையரிசி இவற்

றைமாத்திரம் அம்மியில் வைத்து நெகிழ அரைத்து எடுத்துக் கல்வத்தில்போட்டு மற்றவைகளையும் 7½-விராகனெடை காயமும் அதனுடன் சேர்த்து நொச்சியிலைச்சாற்றால் இரண்டு ஜாமமும், வெள்ளைப்பூண்டு ரசத்தால் இரண்டு ஜாமமும் அரைத்துக் குன்றிமணியளவு மாத்திரைசெய்து தேனில் காலையில் மாத்திரம் ஒருவேளை சாப்பிடவும். இவ்விதம் மூன்றுநாள் மூன்று வேளை சாப்பிட்டு பின்பு பத்துநாட் கழித்து மறுபடியும் மூன்றுநாள் முன்போல சாப்பிடவும். இவ்விதம் இடையில் விட்டுவிட்டுச் சாப்பிட குன்மரோகம், வாயுவலி, சத்திகுன்மம், இரைப்பை, அக்கிரமம், எரிகுன்மம் 11, வாயு-80, காதுநோய், சிலேத்துமரோகங்கள், கபம் முதலியவை தீரும். இது அகஸ்தியரிஷி முறை.

ஐயாக்கண்ணுப் பிள்ளை,

## பாஷாண சத்து

ஒருசேர் தண்ணீர் கொள்ளும்படியான தாம்பிரக் கிண்ணியொன்று செய்து, ஒரு ஈர மண்சட்டி அடிகனமாய்ச்செய்து, சட்டிக்குள் நடுவில் கிண்ணியைக் கவிழ்த்து கிண்ணிவாய் சொருகும்படியாக சுற்றிலும் இருபுறமும் திரணைசெய்து கிண்ணியை யெடுத்துக் கொண்டு, சட்டியை யுலர்த்திச் சுட்டுக்கொள்ளவேண்டும். வெள்ளைப்பாஷாணம், ரசம், சவுக்காரம், வகைக்கு விராகனெடை-3 இம்மூன்றையும் முலைப்பாலால் ஒரு ஜாமம் அரைத்து முன் தயார்செய்த சட்டியின் நடுவில் வைத்துத் தாம்பிரக் கிண்ணியை அதன்மேல் கவிழ்த்துச் சீலைமண்செய்து, சட்டியில் மணல் நிறைத்து அடுப்பேற்றித் தீபாக்கினியாக ஒரு ஜாமம் எரித்து ஆறினபின் கிண்ணியை யெடுத்தால் அதில் பாஷாணம் பதங்கித்திருக்கும். பதங்கத்தைச் சுரண்டியெடுத்து அதனுடன் கொஞ்சம் வெண்காரம் சேர்த்து, ஒரு பெரிய கரியைத் தோண்டி அதில் வைத்து உருக்கினால் அது உருகி மணியாகும். அதை எடுத்துத்

தூள்செய்து பாஷாணம்சேர்க்கும் அவுடதத்தில் அதற்குப்பதிலாய் இதைச் சேர்த்தால் அவுடதம் அதிக வீரியமா யிருக்கும். கிண்ணியி லிருக்கிற சத்தை மணியா யுருக்காமலும் சேர்த்துக்கொள்ளலாம்.

ஐயாக்கண்ணுப் பிள்ளை,

## சுவாசக் குடோரிச் சிந்தூரம்

பாஷாணம் பலம்-1, வீரம் பலம்-1, ரசம் பலம்-1, கெந்தகம் பலம்-1 இவற்றைக் கோடகசாலையிலைச்சாற்றினால் நாலு ஜாமம் அரைத்து, நாலுபலம் எடையுள்ள தாம்பிரக் கிண்ணிசெய்து இந்த ஔஷதங்களெல்லாம் கிண்ணியினுட்புரத்தில் தடவிப் பூசிக் கிண்ணிவாய்க்கு தாம்பிரத் தகட்டினால்மூடி, சீலைமண்செய்து கெட்டியான சட்டியின் நடுவில் உழமண் இரண்டு விரற்கடை கனம்போட்டு அதன்மேல் தாம்பிரக்கிண்ணியை வைத்து சட்டிநிறைய மேற்படி உழமண்போட்டு, சட்டியை அடுப்பில்வைத்து வடவாக்கினித் தீயாக எட்டுச் சாமம் எரித்து மெதுவாய் சட்டியிலிருக்கிற உழமண்ணை யெடுக்கக் கிண்ணியும் மருந்தும் பஸ்பமாகி யிருக்கும். அதன்மேலிருக்கிற சீலைமண்ணை மெதுவா யெடுத்து நீக்கி அந்த மருந்தைக் கல்வத்திற்போட்டுக் கோடகசாலையிலை ரசத்தினால் நாலுசாமம் அரைத்துக் காயவைத்துத் தூள்செய்து, காசிக்குப்பியில்போட்டு குப்பிவாய்க்கு வெள்ளைமாவுக் கல்லினால் கார்க்குசெய்து மூடி சீலைமண்செய்து ஒரு சட்டி நடுவில் ஒருவிரல் மணல்போட்டு அதன்மேல் குப்பியைவைத்துக் கழுத்துவரையில் மணல்போட்டு அடுப்பிலேற்றி வடவாக்கினித் தீயாக நாலுசாமம் எரித்து ஆறினபிறகு எடுக்கச் சிந்தூரமாகும். இதைத் தூள்செய்து டப்பியில் பத்திரப்படுத்தவும். வேளை யொன்றுக்கு ஒரு பணவெடையாக இரண்டு வேளையும் தேனில் உட்கொண்டால் சுவாசரோகம் சொஸ்தமாகும். ஒருவேளையில் சுவாசம் குணப்படும். தவிர பூபதி சிந்தாமணியில் தாம்பிர

பஸ்பத்திற்குப் பதிலாக முன்னெரித்துச் செய்த பஸ் பத்தைச் சேர்த்துக் கொள்ளலாம். சன்னி, சைத்தி யம், தோஷம், வாயு இவற்றினுல் சுவாசம் கண்டாலும் இதனுல் குணப்படும். நல்ல மருந்து.

ஐயாக்கண்ணுப் பிள்ளை,

## தாம்பிர பஸ்பம்

நாகூர்ச்சல்லியை மெல்லிசாகத்தட்டி ஆலம் கொழுந்துச் சாற்றில் மூன்றுநாள் ஊறப்போட்டு அதையெடுத்து எலுமிச்சம்பழச் சாற்றில் 90-நாழிகை ஊறவைத்தெடுத்து இரண்டுபிடி வெள்ளறுகு சமூலத் தைக் கோழிமுட்டை வெள்ளைக்கரு விட்டு அரைத்து அந்தத் தாம்பிரச் சல்லிக்குக் கவசம்செய்து காய வைத்து குகைக்குள் வைத்து மேலே ஓட்டினுல் மூடி சீலைமண்செய்து குகையமூக ஊதி யெடுக்கத் தாம்பிரம் பஸ்பமாகும். அதை எடுத்துக் கல்வத்திற்போட்டு எருமைத்தயிர் ஆடையுடன் விட்டு இரண்டுஜாமம் அரைத்து வில்லைதட்டி ஓட்டில் சுன்னக்கல்விட்டு அதில் வைத்து மேலும் சுன்னமிட்டு மேலோடு மூடி சீலைமண்செய்து கஜபுடம்போட பஸ்பமாகும். தேனில் அரைப்பணவெடை இரண்டு வேளையும் கொடுக்க, சுவாசரோகம் சொஸ்தமாகும். இந்தப் பஸ்பம் பூபதி சிந்தாமணி மாத்திரையில் சேர்க்க வேண்டிய தாம்பிர பஸ்பத்திற்குப் பதிலாய் சேர்த்துக் கொள்ளலாம்.

ஐயாக்கண்ணுப் பிள்ளை,

## தாம்பிர பஸ்பம் (வேறு)

தாம்பிரம் அரப்பொடி பலம்-2 எட்டுப்படி பாகை யிலைச் சாற்றை ஒரு குடத்திலூற்றி அதில் மேற்படி அரப்பொடியைப் போட்டு சட்டிமூடி சீலைமண்செய்து அடுப்பேற்றி ஆவாரை விறகினுல் 12 ஜாமம் வடவாக்கி னியா யெரித்து ஆறின பிறகு எடுக்கத் தாம்பிர அரப் பொடியும் சாறும் பஸ்பமாகி யிருக்கும். இரண்டையும்

தூள்செய்து சிமிழில் வைத்துக் கொள்ளவும். சகல ரோகங்களுக்கும் கொடுக்கலாம். பூபதி சிந்தாமணி பிரயோகத்திலும் சேர்க்கலாம். நல்ல முறை.

ஐயாக்கண்ணுப் பிள்ளை,

## சுவாச நிவாரண மாத்திரை

ரசம் விராகனெடை-16, தாம்பிர பஸ்பம் விராகனெடை-16, கெந்தகம் விராகனெடை-8, இந்துப்பு விராகனெடை-8, பொரித்த வெண்காரம் விராகனெடை-6 இவற்றை எலுமிச்சம்பழ ரசத்தால் நாலு ஜாமம் அரைத்து உளுந்துபோல உருண்டைசெய்து வேளை யொன்றுக்கு ஒரு மாத்திரை இரண்டு வேளையும் தேனிற்கலந்துகொடுத்தால் சுவாசரோகம் சொஸ்தமாகும். நல்ல மருந்து.

ஐயாக்கண்ணுப் பிள்ளை,

## இலகு அயவங்க சிந்தூரம்

இரும்பு அரப்பொடி பலம்-1, கிளாஸ்படிக்கத் தூள்பலம்-2, வளையலுப்பு பலம்-1½, வெண்காரம் பலம்-1 இவற்றைக் கோழிமுட்டை வெள்ளைக்கருவினல் அரைத்து வில்லைசெய்து காயவைத்துக் குகையில் வைத்து, மேற்படிக் குகைமண்ணினல் வில்லைசெய்துக் காயவைக்துக் குகை வாய்மூடி மேற்படி மண்ணினலேயே சீலைமண்செய்து காயவைத்து வார்ப்புக்கன்ஞன் உலையில்வைத்துக் கரிபோட்டுத் துருத்தியால் பக்குவமாய் ஊதிக் குரட்டினல் எடுத்து வெளியில் வைத்து ஆறினபிறகு இரண்டாந்தடவையும் ஊதி யெடுத்து ஆறவிடவும். இப்படி ஐந்துதடவை யூதி யாறவிட்டு உடைத்துப் பார்த்தால் மணியைப்போல சக்கரவில்லையாக விருக்கும். அதையெடுத்து வைத்துக் கொள்ளவும். நவச்சாரம் அரைப்பணவெடை, தாளகம் பலம்-¼. வெண்காரம் பலம்-¼, செவ்வீரம் பலம்-⅛ இவைகளெல்லாவற்றையும் கல்வத்திற்போட்டு எலு

மிச்சம்பழச் சாறுவிட்டு இரண்டு ஜாமம் அரைத்து பணம்போல வில்லைசெய்து காயவைத்து எடுத்துக் கொள்ளவும். முன் சித்தமான வில்லையை ஒரு குகை யில்வைத்து உருக்கி மருந்துருகும்போது அரைத் தெடுத்து வைத்திருக்கிற வில்லைகளில் ஒன்றைக் குகையில்போட அது குறைந்தபின் மறுபில்லை போட வும். இப்படி வில்லைகள் ஆகிறவரையில் நன்ருயூதி முடிவில் நன்ருய்க்கிளறிவிட்டு விளக்கெண்ணெயில் ஊற்ற லோகசத்து, அயவங்கம் ஆகும். இந்த அய வங்கத்திற்குப் பாதியெடை கெந்தகம், அயவங்கத்திற் குச் சமனெடை ரசம், அயவங்கத்திற்கு நாலிலொன்று தாளகம், அயவங்கத்துக்கு எட்டிலொன்று மனேசிலை பூநீர் விராகனெடை-1 இந்த ஔஷதமும், அயவங்க மும் கல்வத்தில்போட்டு கற்ருழைச்சாறு பொற்கை யாந்தகரைச்சாறு இவ்விரண்டுங் கலந்து நாலு ஜாமம் அரைத்து மணலிற்புதைத்து ஒரு முழப்புடம் போட வும். பின்பெடுத்து முன்போல அரைத்து மூன்று புடம் போட்டுப் பிறகு வெளிப்புடம் முழம் உயரம் மூன்று புடம் போடவும். சிந்தூர மாகாவிட்டால் சிந்தூரமாகிற வரையில் வெளிப்புடம் போடவும். சிந்தூர மாகிவிட்டால் எடுத்துப் பத்திரப் படுத்தவும். வேளையொன்றுக்கு ஒரு பணவெடையாக இரண்டு வேளையும் உட்கொண்டால் எல்லா வியாதிகளும் தீரும்.

ஐயாக்கண்ணுப் பிள்ளை,

## விரோசன உருண்டை

சுத்திசெய்த நேர்வாளப்பருப்பு, கோஷ்டம், அதி மதுரம், ஏலம், சண்பகப்பூ இவை வகைக்கு விராக னெடை-3 இவற்றை எலுமிச்சம்பழ ரசத்தினுல் நாலு ஜாமம் அரைத்து, மிளகுப் பிரமாணம் உருண்டை செய்து காயவைத்து ஒரு தேங்காய்க் குடுக்கையில் வைத்துக்கொள்ளவும். சுகுமார தேகிகளுக்கு ஒரு உருண்டையும், கடினமான தேகிகளுக்கு இரண்டு

உருண்டையுமாகக் கொடுக்கலாம். அனுபானம்: வெந்நீரில் சர்க்கரைக்கலந்து அதில் மாத்திரையைக் கரைத்துக்கொடுக்கலாம். இஞ்சி ரசத்திலும் கொடுக்கலாம். அதிகமாய்ப் பேதியானல் வெந்நீரில் எலுமிச்சம்பழம் பிழிந்து சாப்பிடில் பேதி நிற்கும். பேதியாகாமல் இருந்தால் மிளகுநீரன்னம் கொடுக்க பேதியாகும்.

ஐயாக்கண்ணுப் பிள்ளை,

## சுகவிரோசன ஐபதிச் சூரணம்

நெல்லிமுள்ளி, கோரைக்கிழங்கு, வாய்விளங்கம், கடுக்காய்த்தோல், சுக்கு, மிளகு, திப்பிலி, லவங்கம், லவங்கப்பட்டை, லவங்கப்பத்திரி, ஏலம் வகையொன்றுக்கு விராகனெடை-1, சிவதைவேர் சுத்திசெய்தது விராகனெடை-30, சருக்கரை விராகனெடை-40 இவற்றுள் சருக்கரை தவிர மற்றச் சரக்குகளைச் சூரணித்து வஸ்திரகாயம் செய்து இதனுடன் சருக்கரைக் கலந்து வைத்துக்கொள்ளவும். மூன்று விராகனெடை சூரணத்தை வெந்நீரில் கரைத்துச் சாப்பிட்டால் ஆறு தடவை சுகமாய் பேதியாகும்.

ஐயாக்கண்ணுப் பிள்ளை,

## நாக சிந்தூரம்

துத்திநாகம் பலம்-1, ரசம் பலம்-1, கெந்தகம் பலம்-1, லிங்கம் பலம்-1, கௌரிப்பாஷாணம் பலம்-1, பொரித்த வெண்காரம் பலம்-1 இவற்றைக் கல்வத்திற் போட்டு ஒட்டுப்புல்லுச் சாற்றினல் நாலுஜாமமும், எழுத்தாணிப் பூண்டுச் சாற்றினல் நாலுஜாமமும் அரைத்து வில்லைதட்டி அகலில் வைத்து மேல் அகல் மூடி சந்து தெரியாமல் சீலைமண்செய்து காயவைத்து மணலிற்புதைத்து ஒருமுழப் புடம்போடவும். ஆறின பின்னெடுத்து மறுபடியும் மேற்படிச் சாறுகளினல் அரைத்து மேற்படி அகலில்வைத்து மேல்மூடி சீலை மண்செய்து 1½-முழப் புடம்போடவும். இவ்விதம்

கையாகமாகச் சிந்தூரமாகிறவரையில் புடம்போட்டெடுத்துச் சிமிழில் பத்திரப்படுத்தவும். வேளை யொன்றுக்கு ஒரு பணவெடையாக இரண்டுவேளையும் தேனில் சாப்பிட சகல ரோகங்களும் சொஸ்தமாகும்.

ஐயாக்கண்ணுப் பிள்ளை,

## வங்க சிந்தூரம்

காரீயம் விராகனெடை-1, இதை புளியயிலைபோல தகடடித்து மெல்லீசாய் கத்திரித்து, பொன் அரிதாரம் விராகனெடை-3, இதை எலுமிச்சம்பழச் சாற்றினால் 2-ஜாமம் அரைத்து முன் சித்தப்படுத்தின காரீயத் தகட்டையும் இத்துடன் சேர்த்துக் கலந்து எல்லாவற்றையும் ஒரு குகையில்வைத்துக் குகைவாயைச் சக்கரமான ஓட்டினால்மூடி சீலைமண்செய்து 20-விராட்டியில் புடம்போட பஸ்பமாகும். இந்த பஸ்பத்திற்குச் சமனெடை வெள்ளியைத் தகடடித்து மெல்லீசாக கத்திரித்துப் பஸ்பத்தில் எலுமிச்சம் பழச்சாறுவிட்டு ஒரு நாழிகையரைத்து முன் கத்தரித்ததூளை அதில் போட்டுக் கையினால் நன்றாய்ப் பிசரி முன்போல குகையில் வைத்து சீலைமண்செய்து 20-விராட்டியில் ஒரே புடம் போட பஸ்பமாகும். இந்த பஸ்பம் எவ்வளவு ரசத்தை யுருண்டை செய்யுமோ அவ்வளவு ரசமெடுத்துக் கொள்ளுகிறது. பின்பு இந்த பஸ்பத்தைக் கல்வத்தில் போட்டு முலைப்பால் விட்டு முன் ரசமும் விட்டு விரலால் மத்தித்தால் வெண்ணெய்போல உருண்டையாகும். அதை ஊமத்தன்காயையறுத்து நடுவில் குழிதோண்டி அதில் வைத்து அறுத்த துண்டினால் மூடி சீலைமண் செய்து காடைப்புடம் போடவும். மறுபடியும் எடுத்து முன்போல காய்க்குள் வைத்து முன்புடம் போடவும். இப்படி ஊமத்தங்காய் 21-க்குள் வைத்துப் புடம்போட்டெடுத்து அதனுடன் ரசத்தின் சமனெடைத் தங்கம், ரசத்தி னெடைக்கு நாலிலொரு பங்கு கெந்தகம், ரசத்தில் எட்டிலொரு பங்கு அரிதாரம், ரசத்திற்கு 16-ல்

ஒருபங்கு மஞ்சிலை ஆகிய இவைகளைச் சேர்த்து எல்லாவற்றையும் பொற்றலைக் கையாந்தகரைச் சாற்றினுல் நாலுஜாமம் அரைத்து வில்லைசெய்து காய வைத்து அகலில்வைத்து மேல் அகல்மூடி சீலைமண் செய்து காயவைத்து மணலிற் புதைத்து 20-விராட்டியில் புடம் போடவும். மறுபடி யெடுத்து முன்சாற்றாலரைத்து முன்போல புடம் போடவும். இவ்விதம் ஐந்து புடம் போடவும். ஒவ்வொரு புடத்திற்கும் பத்து பத்து விராட்டி அதிகப்படுத்தவும். இப்படிச் செய்ய சிந்தூரமாகும். இதை வேளை யொன்றுக்கு ஒரு பண வெடையாக மண்டலம் சாப்பிட எவ்வித வியாதியும் சொஸ்தமாகும். நல்ல முறை.

ஐயாக்கண்ணுப் பிள்ளை,

## வெடியுப்புச் சுண்ணமும் சிந்தூரப் போக்கும்

வெடியுப்பு பலம்-5, புளி பலம்-5, இவ்விரண்டையும் மைபோலரைத்து ஒன்றரைச்சாண் வெள்ளைத்துணியில்தடவி ஒரு வத்திசெய்து இரும்பு சிலாகையில்கோத்துப்பிடித்துக்கொண்டு கொளுத்தினுல் வத்தி எரிந்து அதிலிருந்து சுண்ணும்புவிழும். அந்தச் சுண்ணும்பையெல்லாம் ஒரு பீங்கானில் வைத்து அதைப் பனியில் வைத்தால் சுண்ணும்பானது ஜலமாக மாறும். அந்த ஜலத்தையெடுத்து சீசாவில் பத்திரப்படுத்தவும். ஐந்து பலம் சீனுக்காரத்தைக் கல்வத்தில் போட்டு அதில் மேற்படி ஜலம்விட்டு வெண்ணெய்போலானபின் உருண்டைசெய்து காயவைத்து புடம் போடவும். மறுபடி அதை எடுத்துத் தூள்செய்து பீங்கானில் வைத்துப் பனியில்வைக்க ஜலமாகும். அந்த ஜலத்தில் ரசம் சேர்த்து மத்தித்தால் உருண்டையாகும். அந்த உருண்டையை ஊமத்தங்காய்க்குள் வைத்து சீலைமண்செய்து இருபத்தொரு புடம்போட்டெடுத்து முன் சொன்ன வங்கக்குரு சிந்தூர முறைப்படி இதையும் சிந்தூரம் செய்துகொள்ளவும். வேளை யொன்றுக்கு ஒரு பண

வெடையாக இரண்டு வேளையும் உட்கொண்டால் சகல ரோகமும் தீரும்.

ஐயாக்கண்ணுப் பிள்ளை,

ரசக்கட்டு

தில்லை, மருதோன்றி, மாதுளை, கொல்லன்கோவை, ஐவிரலீ இந்த ஐந்து மூலிகையும் தனித்தனி அரைத்து நாரத்தம்பழத்தளவு உருண்டைசெய்து கொள்க; பிறகு மேற் சொன்ன வங்கக்குரு சேர்த்துச் செய்த ரசவுண்டையை அல்லது வெடியுப்புச்சுன்ன சம்பந்தத்திற் செய்த ரசவுண்டையை மேற் கண்டபடி ஊமத்தங் காய்க்குள் வைத்து இருபது இலகுபுடம் போட்டுப் பின்பு முன் அரைத்து வைத்திருக்கிற ஒரு உருண்டையில் வைத்து சீலைமண்செய்து இருபதுபுடம் போடவும். இவ்விதமாக மற்ற மூலிகையின் உருண்டைகளிலும் வைத்து முன்போல தனித்தனி புடம் போடவும். ஐந்து மூலிகைகளும் புடம் நூறும், ஊமத்தங்காய்க்குள் புடம் இருபதும் ஆக நூற்றிருபது புடம் தீர்ந்தால் ரசம் கட்டும். இது வங்கக் குருபிரயோகமாம். இதை சிந்தூரம் செய்தால் அதிக குணம் கொடுக்கும். இந்தச் சிந்தூரம் எல்லா வியாதிகளுக்கும் கொடுக்க சொஸ்தமாகும்.

ஐயாக்கண்ணுப் பிள்ளை,

ரசக்கட்டு (வேறு)

ஒட்டுப்புல்லு, தாடிப்புல்லு என்கிற சடைச்சிப் பூண்டு, ஊசிப்பூண்டு இம்மூன்று வகை மூலிகையின் சாற்றால் ரசத்திற்கு சுருக்குக்கொடுக்க அது கட்டும். மேற்படி மூலிகைச்சாற்றை ரசத்தில்விட் டரைத்து வில்லைதட்டிக் காயவைத்து புடம் போட்டால் அது பஸ்பமாகும். இந்த மூலிகைச்சாற்றை முன் ரச உருண்டைக்கு நாலுஜாமம் சுருக்குக் கொடுக்க சிந்தூரமாகும். இது தவிர கல்லுப்பானது குப்பைமேனிச்சாற்றால் பஸ்பமாகும். வெடியுப்பானது தாளி மூலிகையால்

சுன்னமாகும். அரிதாரமானது சுக்கடி யென்கிற மூலி கையினல் பஸ்பமாகும். இதற்கு மேற்கோள்:—

கல்லுக்கு மேனியான் கம்பிக்குத் தாளியான்
சொல்லரிய மாலுக்குச் சுக்கடியான்-நல்லதொரு
ஓட்டிப்புல் தாடிப்புல் ஊசிப்பு லொன்சிவனைக்
கட்டுவதும் பூசுவதுங் காண்.

ஐயாக்கண்ணுப் பிள்ளை,

## பாஷாண பஸ்பம்

ஒரு சட்டியின் நடுவில் ஒரு விரற்கடை மணல் போட்டு அதன்மேல் சக்கரமான ஒரு ஓட்டைவைத்து அந்த ஓட்டின்மேல் மூன்றுவிரல் அகலத்தில் நாலு விரல் கொள்ளும்படியான ஓலைச்சுருள் செய்துவைத்துக் கால்சேர் வெடியுப்பு, கால்சேர் எவச்சாரம் இவ்விரண்டும் தூள்செய்து இந்தத்தூளில் பாதித்தூளை ஓலைச்சுருளில் போட்டு அழுத்தி ஒரு விராகனெடை வெள்ளைப்பாஷாணம் அதன்மேல்வைத்து மேலும் மறு பாதித் தூளைப்போட்டு அழுத்திவைத்துச் சட்டிநிறைய மணலிட்டு அடுப்பிலேற்றி, தீபாக்கினி யொருஜாமம் கமலாக்கினி யொருஜாமமாக இரண்டுஜாமம் தீயிட்டாறினபிறகு எடுத்துப்பார்த்தால் நடுவில் வைத்த பாஷாணம் வெள்ளையாயிருக்கும்; அதை எடுத்துத் தூள்செய்து சிமிழில் வைத்துக்கொண்டு வேளையொன்றுக்கு அரைப்பண வெடையாக மூன்றுவேளை தேனிற் கொடுத்தால் இருபத்திரண்டு சூலை, எட்டு குன்மம், 90-வாதம் சொஸ்தமாகும். இந்த அவுடதம் ஆறு வேளைக்குமேல் கொடுக்கலாகாது. பத்தியம்: புளிப்பு, கைப்பு தள்ளவும்.

ஐயாக்கண்ணுப் பிள்ளை,

## சொர்ணமால்ய வசந்த மாத்திரை

தங்கரேக்கு விராகனெடை-½, முத்து விராகனெடை-1, கெந்தகம் விராகனெடை-1, நாபி விராக

னெடை-1½, கண்டத்திப்பிலி விராகனெடை-1½, ரச சிந்தூரம் விராகனெடை-6 இவை யெல்லாவற்றையும் கல்வத்தில் போட்டு கங்காஜலம் விட்டு 12-ஜாமம் அரைத்து அச்சில் மாத்திரை செய்துக்கொண்டு வேளை யொன்றுக்கு அரைப்பண வெடையாக 2-வேளையும் ஒரு மண்டலம் அசுவகந்திசூரணத்தில் உட்கொள்ள, அஸ்திசுரம், க்ஷயம், சொஸ்தமாகும். இச்சாப் பத்தி தியம். இது நல்ல முறை.

வைத்திய சீதாராமய்யர்.

ரசரத்தின சமுச்சய கிரந்த விதிப்படி அப்பிரேகச் சிந்தூரத்தின் அனுபானங்கள்:—

(1) மஞ்சள்தூள், வறுத்த திப்பிலித்தூள் இவை யிரண்டும் சமபாகமாய்ச் சேர்த்து வேளை யொன்றுக்கு ½-விராகனெடை, அப்பிரேக சிந்தூரம்-2 குன்றுமணி யெடை இவ்விரண்டையும் தேனில் மத்தித்து உட் கொண்டால் பிரமேகம் இருபதும் சொஸ்தமாகும்.

(2) சிந்திற்சருக்கரை விராகனெடை-¼, இரண் டாவது களைந்த பச்சையரிசிக்கழுநீர் சேர்-¼, இவ்விரண் டையும் கலந்து இதில் அப்பிரேக சிந்தூரம்-2, குன்றி மணியெடை சேர்த்துக் கலக்கிச் சாப்பிட 20-வித மேகங்களும் சொஸ்தமாகும்.

(3) சிந்திற்சர்க்கரை விராகனெடை-¼. தண்ணீர் விட்டான்கிழங்குச்சார் சேர்-அரைக்கால், அப்பிரேகசிந் தூரம்-2 குன்றிமணியெடை, தேன் விராகனெடை-¼ இவை யெல்லாவற்றையும் ஒன்ருய்ச்சேர்த்து உட் கொண்டால் வாதவுற்பனம், பிரமேகம் இவை சொஸ்த மாகும்.

(4) தண்ணீர் விட்டான்கிழங்கு, மஞ்சட்கிழங்கு, பூசனிக்காய் இவை மூன்றும் சமமாய்ச் சேர்த்து நறுக் கிக் கால்சேர் சாறெடுத்து அதில் சிலாசத்துபற்பம் பணவெடை-1, அப்பிரேக சிந்தூரம்-2, குன்றிமணி

யெடை இவ்விரண்டையும் கலந்து மேற்படி சாற்றில் உட்கொண்டால் பித்தஜன்னி, பிரமேகம், சொஸ்தமாகும்.

(5) லோக சிந்தூரம் இரண்டு குன்றிமணியெடை, அப்பிரேக சிந்தூரம் இரண்டு குன்றிமணியெடை, திப்பிலியை வறுத்துச் சூரணித்தபொடி கால் விராகனெடை, கடுக்காய்த்தூள் விராகனெடை-¼ இவையெல்லாவற்றையும் ஒன்ருய்ச் சேர்த்துத் தேனில் கலந்து உட்கொண்டால் சிலேஷ்மசன்னி, பிரமேகம் சொஸ்தமாகும்.

(6) அசுவகெந்திச் சூரணம் விராகனெடை-1, சுத்திசெய்த சேராங்கொட்டையை நெய்யில் வறுத்துக் கொட்டை மிதந்தபின் அதைநீக்கின நெய் விராகனெடை-¼ அப்பிரேக சிந்தூரம் இரண்டு குன்றியெடை இவைகளை ஒன்ருய்ச்சேர்த்து உட்கொண்டால் பஞ்ச குன்மங்கள் சர்ப்ப விஷங்கள் ஆகிய இவை சொஸ்தமாகும்.

(7) ஆவாரை விதையின் சூரணம் விராகனெடை-1 அப்பிரேக சிந்தூரம் இரண்டு குன்றிமணியெடை இவ்விரண்டையும் தேனில் மத்தித்து உட்கொண்டால் திரியாகிக சுரம் நிவர்த்தியாகும்.

(8) சுக்கு, மிளகு, திப்பிலி, சித்திரமூலம் வகைக்கு விராகனெடை-¼ இந்நான்கும் பொடிசெய்து அதில் அப்பிரேகசிந்தூரம் இரண்டு குன்றிமணியெடை சேர்த்துக் கொஞ்சம் தேனும்விட்டு மத்தித்து உட்கொள்ள அக்கினிதீபனம் உண்டாகும்.

(9) திப்பிலியை வறுத்திடித்த தூள் விராகனெடை-¼, அப்பிரேக சிந்தூரம் இரண்டு குன்றிமணியெடை இவ்விரண்டையும் தேனில் கலந்து ஒருமாதம் உட்கொண்டால் அக்கினி தீபனமுண்டாகும்.

(10) கையாந்தகரைச்சாறு சேர்-அரைக்கால், நெல்லிக்காய்ச்சாறு சேர்-அரைக்கால் இவ்விரண்டையும் கலந்து லோகசிந்தூரம் இரண்டு குன்றியெடை, அப்பிரேக சிந்தூரம் இரண்டு குன்றியெடை இவ்விரண்டையும் முன் சித்தப்படுத்தினதில் சேர்த்து உட்கொண்டால் திரைமாறும். இவ்விதம் ஒருவருஷம் உட்கொண்டால் நரைமாறிக் கறுத்த உரோமம் உண்டாகும். பாலப்பருவ முண்டாகும். தேகங்கட்டறுமல் தங்க நிறமாகும்.

## நேத்திரரோக நிவாரண மாத்திரை

வெள்ளிரேக்கு ஒரு விராகனெடை, சீனக்கற்கண்டு ஒரு விராகனெடை, நந்தியாவட்டம்பூ விராகனெடை-5, நெருஞ்சிப்பூ விராகனெடை 5, மாசிக்காய் விராகனெடை-5 இவற்றைப் புளிப்பு மாதுளை ரசத்தினல் அரைத்து மாத்திரைசெய்து தக்க அனுபானங்களி லிழைத்துக் கண்ணிலிட பலவித கண்ரோகங்கள் தீரும்.

## மேகசாந்தி ஸ்நான தைலம்

இலந்தைக்கொழுந்து சேர்-1, சீரகம் சேர்-1 இவ்விரண்டையும் பசுவின்பால்விட்டரைத்து, கழுவியாட்டிய நல்லெண்ணெய் சேர் 5-ல் கலந்து அடுப்பேற்றிக் காய்ச்சி மெழுகுபதத்தில் இறக்கி வடிகட்டி வைத்துக் கொள்ளவும். இந்தத் தைலத்தை சனி புதன் இவ்வாரங்களில் தேய்த்து ஸ்நானம் செய்க. சீயக்காய், பாசிப்பயறு இவைகள் சேர்த்துக்கொள்க. மேக சாந்தியாகும்.

## உச்சந்தலைக்கட்டுப் பிரயோகம்

சீரகம் விராகனெடை-1, இலந்தைக்கொழுந்து விராகனெடை 5 இவ்விரண்டையும் பசுவின்பால்விட்டரைத்து வில்லைசெய்து, தைலம் தேய்த்துக்கொண்ட

நாள்தவிர மற்ற எட்டு நாளைக்கு வில்லையைவைத்துக் கட்ட உஷ்ணசாந்தியாகும்.

## வெள்ளி முறை

கெந்தகம் பலம்-1, காட்டாமணக்கின்பால்ஆழாக்கு-1, இதை மேற்படி கெந்தகத்தில் சிறுகச் சிறுகவிட்டு நாலுஜாமம் அரைக்கவும். இவ்விதமே மறுநாள் ஒரு ஆழாக்குப் பால் சிறுகச் சிறுகவிட்டு அரைக்கவும். மூன்றும் நாளும் இப்படியே செய்க. மூன்றுநாள் 12-ஜாமம் 3-ஆழாக்குப் பால்விட்டு அரைத்து மாத்திரை செய்யும் பக்குவத்தில் 21 மாத்திரைசெய்து $1\frac{1}{2}$-ரூபாய் எடை சுத்த வெள்ளியை யுருக்கி உருக்கு முகத்தில் ஒவ்வொரு மாத்திரையாக கிராசங்கொடுத்து முடிவில் நன்றாய்க் கலக்கி யுருண்டையாக எடுத்துக்கொள்ளவும். சூதம் ஒரு பலத்தைச் சிறுகலையத்திலிட்டு அதில் மேற்படி உருண்டையையும் போட்டுக் கலையத்தின்வாயைத் துணிப்பந்தால் மூடி குமிட்டியில் வைத்து 15 நிமிஷம் ஊதியெடுத்து ஒரு துணியில் கலயத்தைக் கவிழ்த்துப்பிழிய ரசம் வெளிப்படும். உள்நிற்கும் ரசவெண்ணெயை யெடுத்து வைக்கவும். மறுபடி பிழிந்த ரசத்தை அக்கலையத்திற்போட்டு வெள்ளியுருண்டையையும் போட்டு முன்போல் வாயடைத்துக் குமிட்டியில்வைத்து ஊதி முன்போல பிழிந்தெடுக்கவும். இப்படி ரசமெல்லாம் வெண்ணெயாகிற வரையில் செய்து அதைக் கொட்டைக் கரந்தையிலை அல்லது செங்கத்திரிக்காயிலை யரைத்த விழுதில் வைத்துச் சீலமண்செய்து புடமிட்டு அதைக் குகையில் வைத்துருக்க தத்தம் விதிப்பயனளவாக வைத்த எடையில் முக்கால், அரை, கால்பாகம் துய்யவெள்ளியாகும். இதனல் பஸ்பம் முதலியவை செய்தால் அதிகப் பிரயோசன முண்டாகும்.

ஸ்ரீ நாரதி வைத்திய தாதுவிர்த்தி போதினி

கிரந்தகர்த்தா

அக்கீம். பா. முகம்மது அப்துல்லாசாயபு

மூதாதை

பாப்புராஜபுரம் அக்கீம். நத்தர்சாயபு,

## மன்மத சிகாமணி ஹல்வா

லவங்கப்பட்டை, நிலப்பனைக்கிழங்கு, சாலாமிஸ்ரி, சீமை தண்ணீர்விட்டான்கிழங்கு, பறங்கிவிதைப் பருப்பு, பருத்திவிதைப்பருப்பு, உலர்த்தின கோது மைப்பால் (இதை நெய்யிற் வறுத்துக்கொள்ளவும்) நெய்யிற் பொரித்த கருவேலம் பிசின், மேற்றோல் நீக்கின சுக்கு, அஸ்வகெந்தி, நெய்யிற் பொரித்த ஆவாரம் பிசின் இவற்றின் சூரணம் வகை 1-க்கு துலா-6, சிறுநெரிஞ்சிமுள், பெருநெரிஞ்சிமுள் இவற் றின் சூரணம் வகை 1-க்கு துலா-3, சீமை நீர்முள்ளி விதை, மதுரகாமாக்ஷிப்பூ இவற்றின் சூரணம் வகை 1-க்கு துலா-2, லவங்கச்சூரணம் துலா-1½, சாதிப்பத் திரி, சாதிக்காய், லவங்கப்பத்திரி, ஏலம் இவற்றின் சூரணம் வகை 1-க்கு துலா-1, பாதம்பருப்பு பலம்-12, நெய் பலம்-12, காய்ச்சி நுரைநீக்கி சுத்திசெய்த கெட்டித்தேன் பலம்-20, தங்கரேக்கு-100, வெள்ளி ரேக்கு-1.

செய்பாகம்: முன்னர் கற்கண்டை உறலிற் போட்டு இடித்துத் தூள்செய்து எடுத்து ஒரு பாத்தி ரத்திற் போட்டுக் கொஞ்சம் ஜலம் வார்த்து அடுப்பேற் றிக் காய்ச்சி இரண்டொரு கொதிவந்து, கற்கண்டு பாக்கியில்லாமல் கரைந்தபின், மெல்லிய வஸ்திரத்தில் வடிகட்டித் திப்பி நீக்கின பாகை மேற்படி தேனுடன் சேர்த்து அடுப்பேற்றி மெதுவாய் எரித்து காய்ச்சிப் பாகுபதத்தில் இறக்கிக்கொள்ளவும். சூரணங்களெல் லாவற்றையும் ஒன்றாய்க் கலந்து பருப்பினங்களை

வெண்ணெய்போ லரைத்துச் சூரணத்திற் கலந்து மேற்படி பாகில் சிறுகச் சிறுகத்தூவி சந்தன மத்தி ளுல் கடைந்து சூரணமெல்லாம் ஆனபின் நெய்யும் முன்போல் சிறுகச்சிறுக விட்டுக் கடைந்து இளஞ் சூடாயிருக்கும்போதே ரேக்குகளை ஒவ்வொன்ருய்ப் போட்டுக் கடைந்து எடுத்துப் பீங்கான்சாடியில் பத்தி ரப்படுத்தவும். இதில் வேளை யொன்றிற்குக் கழற்சிக் காய் அளவு காலை மாலை இரண்டு வேளையும் உட் கொள்ள இந்திரியவிர்த்தி, தாதுவிர்த்தி, போகசக்தி முதலியவை யுண்டாகும்.

மேற்படி பாப்புராஜபுரம் அக்கீம். நத்தர்சாயபு

## பால் ஹல்வா

கோதுமைப்பால், உளுந்துப்பால், பருத்திக்கொட் டைப்பால், பசும்பால், கசகசாப்பால் வகை 1-க்கு படி-¼, பேதாளுவிதை, சீமைநீர்முள்ளிவிதை, பாதம் பருப்பு, வெள்ளரிவிதைப்பருப்பு, முலாம்பழவிதைப் பருப்பு, தர்பூஜென்னும் குமட்டிப் பூசனிவிதைப் பருப்பு, சுரைவிதைப்பருப்பு, துத்திவிதை, வறுத்த வெந்தயம், சாதிக்காய், சாதிப்பத்திரி, லவங்கப்பட்டை, நிலப்பனைக்கிழங்கு, தண்ணீர்விட்டான்கிழங்கு இவற் றின் சூரணம் வகை 1-க்கு துலா-2, பனங்கற்கண்டு சேர்-2, காய்ச்சி நுரை நீக்கின தேன் பலம்-5.

செய்பாகம்: கற்கண்டில் கொஞ்சம் ஜலம் வார்த் துக் கரைத்து அடுப்பேற்றிக் காய்ச்சி இரண்டுமூன்று கொதி வந்தவுடன் வஸ்திரத்தில் வடிகட்டி திப்பி நீக்கின பாகில் மேற்படி தேனைச் சேர்த்து அடுப்பேற் றிக்காய்ச்சி இளம்பதமா யிருக்கும்போது பருப்பினங் களை வெண்ணெய்போல் அரைத்துப் பாலில் கரைத்து மெதுவா யெரித்துக் கைவிடாமல் துழாவிக்கொண் டிருக்க வேண்டும். அப்படிச் செய்யாவிட்டால் அடிப் பற்றும். பின்பு பாகுபதமானவுடன் மேற்படி சூரண வகைகளை அதிற்போட்டு மத்தால் கடைந்து பீங்கான்

பாத்திரத்திற் பத்திரப்படுத்தவும். இதில் கொட்டைப் பாக்களவு காலை மாலை இரண்டுவேளையும் வியாதிக்குத் தக்கபடி உட்கொள்ள மேகவெட்டை, மேகச்சூடு, அஸ்திச்சூடு, அஸ்திவெட்டை இவை முதலியவை தீர்ந்து தாதுபுஷ்டி யுண்டாகும்.

மேற்படி பார்ப்புராஜபுரம் அக்கீம். நத்தர்சாயபு,

## மஸ்தகி ஹல்வா

ரூமிமஸ்தகி, தூத்திவிதை, நீர்முள்ளிவிதை, யானை நெருஞ்சிமுள், லவங்கம், ஏலம், லவங்கப்பட்டை, ஷாஜீரா இவற்றின் சூரணம் வகை 1-க்கு விராகனெடை-4½, சாலாமிஸ்ரி, பாதம்பருப்பு, ஜாதிப்பத்திரி, பூஞ்சாந்துப்பட்டை இவற்றின் சூரணம் வகை 1-க்கு விராகனெடை - 3, ஜாதிக்காய் சூரணம் விராகனெடை 2, சீனிசருக்கரை பலம்-5 நெய் பலம்-3.

செய்பாகம்: சருக்கரையைப் பாகுசெய்து பாதம் பருப்பை வெண்ணெய்போலரைத்து ரூமிமஸ்தகி சூரணம்தவிர மற்றச் சூரணங்களையெல்லாம் ஒன்ருய்க் கலந்து அதில் முன்னரைத்த பாதம்பருப்பை மிஸ்ரமித்து மேற்படி பாகில் தூவி நெய்விட்டு இறக்கிப் பத்திரப்படுத்தவும். இரண்டு மூன்றுநாள் சென்றபின் ரூமிமஸ்தகி சூரணம் சேர்த்துக் கடைந்து பீங்கான் பாத்திரத்தில் எடுத்து வைத்துக்கொள்ளவும். இதில் சிறு கழற்சிக்காய்ப் பிரமாணம் இரண்டுவேளையும் அரைமண்டலம் ஒரு மண்டலம் உட்கொள்ள குளிர்ச்சி, கபம் ஆகிய இவற்றின் சம்பந்தத்தினுல் நேரிட்ட துரிதஸ்கலிதம், இந்திரியம் நீத்துப்போயிருத்தல் முதலியவை தீர்ந்து விந்திறுகி தாதுபுஷ்டி உண்டாகும்.

மேற்படி பார்ப்புராஜபுரம் அக்கீம். நத்தர்சாயபு.

## தேகபுஷ்டி நெய்

பசுவின்நெய் படி-1, கொன்றைக்கடலைப் படி-1, வெள்ளாட்டுப்பால் படி-2, அமுக்கராக்கிழங்கு இடித்த

ரசம் படி-2, வல்லாரைச்சாறு படி-1, நன்னாரிவேர், சீரகம், கருஞ்சீரகம், ஓமம், சதகுப்பை, கொத்துமல்லிகை, லவங்கம், ஏலம், லவங்கப்பட்டை, லவங்கப்பத்திரி, மேற்றோல் நீக்கின சுக்கு, மிளகு, திப்பிலி, ஜாதிக்காய் இவற்றின் சூரணம் வகை 1க்கு விராகனெடை-1.

செய்பாகம்: கடலையில் இரண்டுபடி ஜலம்விட்டு 3-நாள் ஊறவைத்து நாலாம்நாள் கையினாற் பிசைந்து அதனுடன் பால்விட்டு மறுபடியும் பிசைந்து வஸ்திரத்தில் வடிகட்டி அந்த ஜலத்தை மேற்படி நெய்யுடன் கலந்து மற்றச் சாறு வகைகளையும் சூரணங்களையும் அதிற் கலந்து அடுப்பேற்றிச் சிறுதீயாக எரித்து மெழுகுபதத்தில் இறக்கி வடித்துப் பீங்கான் பாத்திரத்தில் பத்திரப்படுத்தவும். வேளை 1-க்கு துலா-2 அல்லது முக்கால் வீதம் காலை மாலை இரண்டு வேளையும் அரை மண்டலம் ஒருமண்டலம் உட்கொள்ள அஸ்திவெட்டை, அஸ்திசுரம், மேககணம், மேகவெட்டை, க்ஷய இருமல், கைகாலசதி, புகைச்சல், தேக இளைப்பு இவை முதலியவை தீர்ந்து தேகபுஷ்டியுண்டாகும்.

பத்தியம்: இச்சாப் பத்தியம்; ஸ்திரீ சங்கையும் நீக்கவும்.

மேற்படி பாப்புராஜபுரம் அக்கீம். நத்தர்சாயபு,

## சொர்ண ரசவங்க சிந்தூரம்

காரீயம் பலம் 8, தங்கம் பலம்-2, தங்கத்தை உருக்கிக் குகைக்குள்ளிட்டு நன்று யுருக்கிக் காரீயத்தையும் சேர்த்து நன்று யுருகினபின், ஒரு கிண்ணமாய் வார்த்துக்கொள்ளவும். பின்பு 10 பலம் பாலரசத்தை மேற்படி கிண்ணியில்விட்டு ஒரு பானையில் 2-படி மணல் கொட்டி அதன் நடுவில் மேற்படி கிண்ணத்தை வைத்து அதை விழிம்பு வரையில் மணலுக்குள் அழுத்தி 4-சேர் பச்சை மஞ்சளை இடித்துச் சாறு

பிழிந்து வைத்துக்கொண்டு மேற்படி பானையை அடுப் பேற்றிக் காடாக்கினியாய் எரித்து, மேற்படி மஞ்சள் சாற்றைச் சிறுகச் சிறுக கிண்ணத்தி லிருக்கிற இர சத்தின்மீது விட்டுச் சுறுக்குக் கொடுக்கவும். இவ் விதம் காலையிலிருந்து மாலைவரையில் செய்து இராக் காலங்களில் அடுப்பை நிறுத்தி வைக்கவும். மறு நாள் உதயத்திலும் முன்போலவே பச்சை மஞ்சள் சாறெடுத்து முன்போலவே காலையிலிருந்து மாலை வரையில் சுருக்குக் கொடுத்து முன்போலவே இரவில் அடுப்பை நிறுத்தி வைக்கவும். இவ்விதம் முப்பது பகல் சுறுக்குக்கொடுக்க ரசத்தையெல்லாம் கிண்ணம் இழுத்துக் கொள்ளும். ஏதேனும் கொஞ்சம் ரசம் மீதியாயிருந்தால் கிண்ணத்தைச் சுற்றிலும் பூச ரசம் சுவறிப்போகும். பின்பு கிண்ணத்தை எடுத்துக் கையினல் நொறுக்க அது வெட்டையாய்த் தூளாய்ப் போகும். 4-படி கொள்ளும்படியான ஒரு குண்டு சட்டியில் இரண்டுபடி மஞ்சள் இடித்துச் சூரணம்போட் டழுத்தி அதின்மேல் முன் சித்தப்படுத்திய வெட் டையை வைத்து அதின்மேலும் இரண்டுபடி மஞ்சள் சூரணமும் போட்டழுத்திச் சட்டிவாயைச் சாணுக்கியி னல் மூடி சீலைமண்செய்து வட்டடுப்பில் வைத்துக் காடாக்கினியாய் நாலு ஜாமம் எரித்து ஆறவிட்டு ஒரு பாத்திரத்தில் மெதுவாய்க்கொட்டி மஞ்சள் தூளையெல் லாம் மெதுவாய் ஊதி நீக்கிச் சிந்தூரத்தை சாக்கிரதை யாய் எடுத்துப் பத்திரப்படுத்தவும். இதில் பண வெடை-$\frac{1}{4}$ அல்லது $\frac{1}{2}$-தேகபலம் வியாதிபலம் ஆகிய இவைகளுக்கேற்றபடி தக்க அனுபானத்தில் கொடுக்க அநேக வியாதிகள் தீரும். முக்கியமாய் பற்பல மேகங் கள், குஷ்டங்கள், முதலியவை தீர்ந்து தாதுவிர்த்தி யுண்டாகி வச்சிரகாயமாகும். இன்னும் அனுபவசாலி களாகிய அறிவாளிகள் தங்களுக் கிஷ்டமானபடி செய்து அனுபவிப்பார்கள்.

மேற்படி பாப்புராஜபுரம் அக்கீம். நத்தர்சாயபு,

## ஷடாக்கினி சிந்தூரம்

சுத்தி செய்த ரசம் பலம்-8, கெந்தகம் பலம்-4, லிங்கம் பலம்-4, தாளகம் பலம் 2, மனோசிலை பலம்-2.

செய்பாகம்: இவற்றுள் தாளகத்தைத் தனியாய்ப் பொடிசெய்து வஸ்திரகாயம் செய்தெடுத்துக்கொள்ளவும். மற்றவைகளையும் பொடிசெய்து எல்லாப் பொடிகளையும் ரசத்தையும் ஒன்றாய்ச் சேர்த்து நன்றாய் அரைத்து நன்றாய் ரேகித்தபின் கம்மாறு வெற்றிலைச் சாற்றால் 4-ஜாமம் அரைத்து உலர்த்திப் பொடி செய்து பெரிய இரண்டு பீங்கான் கோப்பைகளை வாய் மட்டமாய்த்தேய்த்து மேற்படி பொடியை ஒரு பீங்கானில் போட்டு மறு பீங்கான் மூடி வாய்க்கு ஏழு சீலை மண் கெட்டியாய்ச்செய்து கோப்பைகள் முழுதும் அப்படியே செய்து உலர்த்தி ஒரு பெரிய பானையில் ஒரு விரல்கனம் மணல்போட்டு அதன்மேல் மேற்படி கோப்பையை வைத்து மேலிருக்கும் கோப்பையில் உதட்டின்மேல் ஒரு விரல்கனம் வரையில் மணல் கொட்டிப் பானை வாய்க்குச் சாணைக்கிமூடி சீலைமண்செய்து அடுப்பேற்றி ஒருஜாதி விறகால் எட்டு ஜாமம் காடாக்கினியாய் எரித்து ஆறவிட்டு உடைத்து எடுக்க மேல் கோப்பையில் கருஞ்செகப்பான பதங்கம் இருக்கும்; அதை தனியே எடுத்து வைத்துக்கொள்ளவும். கீழ் கோப்பையில் இருக்கும் மருந்தை கல்வத்திற்போட்டு அதனுடன் கொஞ்சம் ரசம் விட்டுக் கம்மாறு வெற்றிலைச் சாற்றால் இரண்டொரு ஜாமம் அரைத்து முன் போலவே பீங்கானில் வைத்துச் சீலைமண்செய்து மணலில்வைத்து இரண்டு ஜாமம் எரிக்கவும். இப்படி இரண்டு மூன்று தடவைசெய்து ஐந்தாறு பலம் சத்து எடுத்து மேற்படி கம்மாறு வெற்றிலைச் சாற்றால் இரண்டு ஜாமம் அரைத்து உலர்த்திப் பொடித்து முன் பீங்கான் பாத்திரத்தில் போட்டு மேல்மூடி முன்

போலவே சீலமண் செய்து முன்போலவே மணலில் வைத்து முன்போலவே இரண்டு ஜாமம் எரித்து ஆற விட்டு எடுக்க சிந்தூரம் பதங்கித்துக் கெட்டியாயிருக்கும். அதை எடுத்துப் பொடித்து சீசாவில் பத்திரப் படுத்தவும். இதில் பணவெடை-¼ அல்லது ½-தேக பலம் வியாதிபலம் ஆகிய இவைகளுக்குத் தக்கபடி தக்க அனுபானங்களில் அரை மண்டலம் ஒரு மண்டலம் சாப்பிட அநேக வியாதிகள் தீர்ந்து தேகம் பலப் பட்டு தாதுவிர்த்தி யுண்டாகும்.

மேற்படி பாப்புராஜபுரம் அக்கீம். நத்தர்சாயபு,

## குக்குடாதிச் சூரணம்

தோலுரித்தபூண்டு, மிளகு வகைக்குப் பலம்-2, மேல்தோல் நீக்கின சுக்கு, கடுகு, சவுட்டுமண் வகைக்குப் பலம்-1, பொரித்த பெருங்காயம் பலம்-¾, திப்பிலி, ஓமம், இந்துப்பு, பேய்ப்புடல், வளையலுப்பு, வெந்தயம், சீரகம் இவை வகைக்கு விராகனெடை-4, சவுக்காரம், பொரிக்காரம், வாய்விளங்கம், காந்தம் வகைக்கு விராகனெடை-3, சிற்றரத்தை, வெடியுப்பு, சதகுப்பை, சிவதைவேர், சுத்திசெய்த வாளம், கருஞ் சீரகம் இவை வகை 1-க்கு விராகனெடை-2½, அக்கிரா காரம் விராகனெடை-2 இவற்றுள் இடித்துச் சூரணஞ் செய்யவேண்டியவைகளைச் சூரணித்தும், கல்வத்தில் தூள் செய்யவேண்டியவைகளைச் செய்தும் எல்லாம் ஒன்றாய்க் கலந்து வைத்துக்கொள்ளவும். திருகுகள்ளி வேர்ப்பட்டை,அமுக்கராவேர் வெள்ளுகாவேர்ப்பட்டை அழிஞ்சில்வேர்ப்பட்டை, எருக்கம்வேர்ப்பட்டை, கொடி வேலிவேர்ப்பட்டை இவற்றைத் தனித்தனி ஜலம் வார்த்து அரைத்த விழுதுவகையொன்றுக்குப் பலம்-1, வெள்ளுகாயிலை, வெண்ணொச்சியிலை, எருக்கிலை, அழிஞ்சியிலை, பிரண்டை, திருகுகள்ளி இவற்றைத் தனித்தனி இடித்த சாறுவகை 1-க்கு படி 1, கொள்ளு வேகவைத்த ஜலம், கோமூத்திரம், வெள்ளாட்டு

மூத்திரம் வகை 1-க்கு படி-½, யௌவனமான கருங் கோழி-1.

செய்பாகம்: கோழியை அறுத்துக் கால், தலை, ரோமம் ஆகியவைகளைப்போக்கி, வயிற்றைக்கீறி, ஈரல் குடல் முதலியவைகளை நீக்கி மேற்படி சூரணத்தையும், வேர் வகைகளை யரைத்த விழுதையும் ஒன்றாய்க்கலந்து கோழி வயிற்றில் செலுத்தி இரண்டு புறமும் ஒன்றாய்த் தைத்து ஒரு புதுத் தாளியில் முன் சாறு வகைகளையும் நீர் வகைகளையும் விட்டு தாளி வாய்க்கு வேடுகட்டி அதன்மேல் கோழியைவைத்து மேற்சட்டிமூடி ஏழுசீலை மண்செய்து அடுப்பேற்றி ஒரு ஜாதிவிறகால் சுமாராய் சாறு வற்றுகிறவரையில் எரித்து ஆறவிட்டெடுத்து எலும்பு,சவ்வுநீக்கி மற்றவைகளை யெல்லாம் ஒன்றாய்ச் சேர்த்து வெயிலில் உலர்த்தி யிடித்து வடிகட்டி சீசாவில் பத்திரப்படுத்திவைக்கவும். வியாதிபலம், தேகபலம் முதலியவைகளுக்குத் தக்கபடி விராகனெடை-1, அல்லது-1½, அல்லது-2 தேன், சுக்கு கியாழம், இஞ்சிச்சாறு, இளவென்னீர் இவற்றில் ஒன்றில் அனுபானித்து அரைமண்டலம், ஒரு மண்டலம் சாப்பிட சத்திகுன்மம், எரிகுன்மம், வலிகுன்மம், வாயுகுன்மம், முதலிய 8-வகை குன்மமும், குடல்வாதம், குடல்முறுக்குநோய், குடல்புரட்டுவாதம் முதலிய 126-வாதவகைகளும், வாதசூலை, கிரந்திசூலை முதலிய பல வகை சூலைகளும்தீரும். சுகுமார தேகிகளுக்குத் தேன், சுக்கு, கியாழம், இஞ்சிச்சாறு இவற்றில் ஒன்றில் விராகனெடை-¼, ½ மத்தித்துக் காலையில் மாத்திரம் கொடுக்கவும். ஒருவேளை இரண்டு மூன்று தடவை பேதியாகும். ஒன்றை விட்டொரு நாளைக்கும் கொடுக்கலாம்.

பத்தியம்: முளைக்கீரை, அரைக்கீரை, பச்சைப் பயறு, துவரை, முருங்கைப்பிஞ்சு, வழுதலங்காய், காடை, கவுதாரி, முயல், உடும்பு, திருக்கை, சுறு இவை

யாகும். உப்பை பசுவின் மோர்விட்டுப் பொன்னிற மாய் வறுத்துக் கூட்டவும்.

மேற்படி பாப்புராஜபுரம் அக்கீம் நத்தர்சாயபு,

## வேப்பெண்ணெய் நெய்

இருபது பலம் வேப்பெண்ணெயை வாய் குறுகின ஒரு பானையில்விட்டு அடுப்பேற்றி 2-பலம் திறமான வெள்ளைக் குங்கிலியத்தை மைபோல் தூள்செய்து எண்ணெயில் தூவி குச்சியால் கிளறி இடுக்கில்லாமல் வேறு ஒரு கலயத்தால் மூடி சந்துவாய்க்கு 3-சீலை மண்செய்து முதலில் கொஞ்சம் மெதுவாய் எரித்துப் பிறகு 1-மணிநேரம் கடும்தீயாக எரிக்க, பானைக்குள் டம் டும் என சத்தம் கேழ்க்கும். சுமார் ஒன்று ஒன் றரை மணிநேரம் எரித்து சீலைமண்ணை நீக்கித் தூரமாய் இருந்துக்கொண்டு ஜாக்கிரதையாய் மேல்கலயத்தைக் கொஞ்சம் திறந்து ஒரு குச்சியினல் எண்ணெயை யெடுத்து ருசித்துப் பார்க்கக் கைப்பில்லாம லிருந் தால் பானையைக் கீழே யிறக்கி வைத்துக் கலயத்தைக் கொஞ்சம் தூக்கி உடனே மூடவும். மறுபடியும் தூக்கி முன்போலுடனே மூடவும். இப்படி பல தடவைகள் செய்து புகையெல்லா மடங்கினபின் வேறு பீங்கான் பாத்திரத்தில் வடித்து வைத்துக்கொள்ளவும். முன் ருசித்தபோது கைப்பு பாக்கியிருந்தால் இன்னும் கால் பலம் குங்கிலியத்தைத் தூள்செய்து அதிற்போட்டுச் சீலைமண்செய்து கால்மணி நேரம் எரித்து முன்போல் ருசித்துப்பார்க்க கைப்பில்லாம லிருந்தால் அதுவே பக்குவம். இதனல் சூதகவாயு முதலியவைகளும் தீரும். இதை வாட்டாற்றுக் கியானியார் லிங்கக்கட்டு முதலிய பிரயோகங்களிற்கு அனுபானமாகவும் உபயோகிக் கலாம்.

## கெந்தக பஸ்பம்

நெல்லிக்காய் கெந்தி பலம்-2, அண்டபஸ்பம் பலம்-2 இவற்றை எருக்கம்பழுப்பை அனலில் வாட்டி

ரசம் பிழிந்து அதைவிட்டு அரைத்து வில்லைத்தட்டிக் காயவைத்து சங்குசுண்ணம் கீழ்மேல் வைத்து சீலை மண்செய்து 20-விராட்டியில் புடம்போட பஸ்பமாகும். இந்த பஸ்பத்தில் 1-பணவெடை தேனில் மத்தித்துக் கொடுக்க சுரம் அனுகூலமாகும். வெண்ணெய், நெய் இவற்றிலொன்றில் மத்தித்துக் கொடுக்க மேகவாயு அனுகூலமாகும்.

(வேறு)

மேற்படி கெந்தி பலம்-3, நெய்விட்டு உருக்கி பாலில் சாய்க்கவும். அதையெடுத்து, மருதம்பட்டை சுட்ட சாம்பல் படி-$1\frac{1}{2}$, ஒரு சட்டியில்போட்டு மேற்படி கெந்தகத்தை நடுவில்வைத்து மேலும் மேற்படி சாம்பல் படி $1\frac{1}{2}$-போட்டு மேல் சட்டிமூடி சீலைமண்செய்து ஒரு ஜாமம் தீபாக்கினியாய் எரித்து மேல் சட்டியில் சூடு கண்டவுடனே எடுத்து ஆறவைத்து மேற்படி வில்லையை, கோவை, செம்பரத்தை, நந்தியாவட்டை இம்மூன்று இலையும் சமபாகமாய் அரைத்துக் குகை போல் செய்து அதற்குள்வைத்துக் காய்ந்த பிறகு ஏழு சீலைமண்செய்து கோழிப்புடம்போட பஸ்பமாகும். இந்தப் பஸ்பத்தை 1-பணவெடை தேன், நெய், வெண்ணெய் இவைகளில் மத்தித்துக் கொடுக்க மேகரிணம், வாயு, சுரம் இவைகள் அனுகூலமாகும்.

## பித்த குன்மத்துக்கு

கல்லுப்பு, இஞ்சி சமபாகமாகச் சேர்த்து அரைத்துப் பின்பு எலுமிச்சம்பழரசம், மேனிரசம், சமமாக சேர்த்து மறுபடியும் முன் அரைத்ததைக் கல்வத்தில் போட்டு, மேற்படி ரசம்விட்டு இரண்டு ஜாமம் அரைத்து வில்லைதட்டிக் காயவைத்து புடம்போட பஸ்பமாகும். இந்தப் பஸ்பத்தைத் தக்க அனுபானத்தில் கொடுக்க மேற்படி ரோகம் சொஸ்தமாகும்.

### தாளக பஸ்பம்

மாம்பட்டை, புளியம்பட்டை, அரசம்பட்டை, ஒதியம்பட்டை, புரசம்பட்டை இவை தனித்தனி சுட்ட சாம்பல் வகை 1-க்கு படி-½ தாளகத்தை எலுமிச்சம் பழச் சாற்றில் ஒருநாள் ஊறப்போட்டு ஒரு ஓட்டை அடுப்பில்வைத்து மேற்படி சாம்பல் ஒருபடி போட்டுத் தாளகத்தைவைத்து மேலும் ஒருபடி சாம்பல்போட்டு அழுத்தி 4-ஜாமம் எரிக்க பஸ்பமாகும். சாம்பல் விரிந்தால் மேலே கொஞ்சம் சாம்பல் போடவும். அனுபானம் தேன் முதலியவைகளாம்.

### கல்நார் பஸ்பம்

இளநீர் தொண்டிபண்ணி வேண்டிய கல்நாரைப் போட்டு 3-நாள் ஊறவிட்டு எலுமிச்சம்பழச் சாற்றால் அரைத்து வில்லைதட்டிக் காயவைத்து ஒரு ஓட்டில் பூவரசம்பட்டையை இடித்துவைத்து அதன்மேல் வில்லைவைத்து அதன்மேலும் மேற்படி பட்டைத்தூள் போட்டு மேலோடு மூடி சீலைமண்செய்து 25-விராட்டியில் புடம்போட பஸ்பமாகும்.

### பீனிச நசியம்

வெண்பா

சக்கரையுங் குங்குமமுஞ், ஜாதிக்காய், மாதளம்பூ,
மிக்கதொரு நெய்யோ டிவையைந்தும்—சிக்கெனவே,
தானெரித்து நாசியிலே தளரவே விட்டிட்டாற்
பீனிசங்க ளொன்பதும்போம் பேசு.

### நாசியடைப்பு, தினவு, நீர்ப்பாய்ச்சலுக்கு நசியம்

வெள்ளைச்சாரணைவேர், இந்துப்பு, மிளகு, சீனி இவற்றுள் வேரை நையத்தட்டி மற்றவைகளையும் பொடித்து தக்க அளவு பசுவின்நெய், முலைப்பால் அதில் கூட்டி நசியம் செய்ய மேற்கண்டவை தீரும்.

(வேறு)

வெள்ளாட்டுப்பால், தேன், சருக்கரை இவைகளை மத்தித்து நசியம்செய்ய நாசியில் இரத்தம் விழுவது நின்று போகும்; கைகண்டது.

## அரிமேதாதி யுண்டை

கருங்காலிப்பட்டை பலம்-100, நாலு மரக்கால் ஜலம் விட்டு 1-மரக்காலாகக் காய்ச்சி, ஜாதிக்காய், கிராம்பு, தக்கோலம், கொட்டைப்பாக்கு, கற்பூரம் வகைக்குப் பலம்-¼ இவைகளை மேற் சொன்ன கியாழத்தை விட்டரைத்து உருண்டைசெய்து காயவைத்து ஒரு உருண்டையை வாயிலடக்கிக் கொள்ளில் தந்த ரோகம், முகரோகம், துர்வாசனை, உதட்டுப்புண், நாக்குப்புண் இவைகள் தீரும்.

## பல்லசைவிற்கு

இரும்பு அரப்பொடியை தூள்பண்ணி இரும்பு பாத்திரத்தில் வறுத்துத் தேன்விட்டரைத்து உருண்டை செய்து வாயில் அடக்க அசைவில்லாமல் கெட்டியாகும்.

(வேறு)

சிறுகீரையை வாயிலடக்கியிருக்க பல்நோய்தீரும், முக்காவேளை வேர்ப்பட்டையை நையத்தட்டி வாயிலடக்க பல்லசைவு நிற்கும். கைகண்டது.

## பற்புழுவிற்கு

அன்னபேதி, பெருங்காயம், இந்துப்பு, சறள் தேவதாரு இவைகளைத் தண்ணீர் விட்டரைத்து உருண்டைசெய்து நோவுகிற பல்லில் அடக்க நோவு தீர்ந்து புழு சாகும்.

## பல் நோய்க்கு

அன்னபேதி, சறள் தேவதாரம், பெருங்காயம், சீனக்காரம் இவை சமஎடை கூட்டி, கருவேலம்பட்

டைக் கியாழத்திலரைத்து உருண்டைசெய்து வாயி லடக்கியிருக்க, அசைகிற பல் இறுகி பல்நோக்காடு, வீக்கம் ஆகியவை தீரும்.

## அரிமேதாதித் தைலம்

கருவேலம்பட்டை பலம்-100, நாலு மரக்கால் ஜலம் விட்டு ஒரு மரக்காலாகக் காய்ச்சி இறக்கி யெண்ணெய் படி-2 கூடவிட்டு செவ்வள்ளிக்கொடி, அதிமதுரம், கருங்காலிப்பட்டை, மிளகு, சிறுதேக்கு அரக்கு, ஆலம் பட்டை, கோரைக்கிழங்கு, நன்னாரிவேர், லவங்கப்பத் திரி, ஜாதிக்காய், கிரந்திதகரம், தக்கோலம், அகரு, ஜாதிப்பத்திரி, கர்ப்பூரம், காவி சுக்கு, சதகுப்பை, காட்டாத்திப்பூ இவை வகைக்குப் பலம்-¼, இவற்றை யெல்லாம் மேற்படி கியாழம்விட்டு அரைத்து எண்ணெ யில் சேர்த்துக் காய்ச்சிப் பதத்தில் வடித்துக்கொண்டு இதை உட்கொண்டு வந்தால் பல்லசைவு, கிருமி, தந்த ரோகம், முகரோகங்கள் தந்த விரணங்கள் இவைகள் தீர்ந்து பல் கெட்டியாகும்.

## காது மந்தத்திற்கு

கடுகுரோகணி, புங்கம்பட்டை, சரக்கொன்றைப் பட்டை வகை 1-க்கு பலம்-2, அவுரியிலைச்சாறு படி அரைக்கால், இவற்றை நல்லெண்ணெய் பலம் ஐந்தில் கலந்து கொதிக்கவைத்து, மெழுகுபதத்தில் வடித்து வடிகட்டி, நாலு ஐந்து துளி காதில் விட்டுவர கேள்வி யுண்டாம்.

(வேறு)

கோடகசாலை பலம்-2, சுக்கு, திப்பிலி, வகைக்கு பலம்-2, இவற்றை 2½-பலம், எண்ணெயில் போட்டு கொதிப்பித்து வடிகட்டி வைத்துக்கொண்டு காதில் விட்டுவர, காது கேட்கும்.

## கையான் கற்பம்

கையாந்தகரை சமூலம் சூரணஞ்செய்து இளநீரில் ஒருமாதம், பாலில் ஒரு மாதம், தேனில் ஒருமாதம், சர்க்கரையில் ஒருமாதம், நெய்யில் ஒருமாதம் கொள்ள நரைதிரை மாறும். கையான் படி-1, நீறு படி-½, நெய் ஒரு துளி மத்தித்து, ஏழுநாள்கொள்ள, சரீரம் கெட்டியாகும். ஈரேழுநாள் கொள்ள கண்கருக்கும். மூவேழு நாள் கொள்ள இராஜ வடிவுண்டாகும். மூன்று திங்கள் தப்பாமல் கொள்ள நரை திரைமாறும். கை கண்டது.

## உதட்டின் வியாதிக்கு

குன்றிமணிப்பருப்பை அவுரியிலைசாற்றி லரைத்து, தூங்குகிறபோது உதட்டில் தடவ புழு சாவும். உதட்டின் வெள்ளைபோம். வில்வவோட்டை மூலைப்பாலி லரைத்து வெடித்தபுண்ணிலும் வெள்ளையிலும் தடவ அவை தீரும்.

## கபால வாயுவுக்கு

ஆடுதீண்டாப்பாளையை யுலர்த்தி யிடித்ததூள், பூண்டு இவை வகையொன்றுக்கு பலம்-1¼, இவ் விரண்டையும் 1-சேர் நல்லெண்ணெயில் சேர்த்துக் காய்ச்சி வடித்துத் தலையில் தேய்க்க கபாலவாய்வு தீரும்.

## மண்டை வியாதிக்குத் தைலம்

நஞ்சறப்பாய்ந்தான்வேர், புன்னைக்காயளவு அரைத்து நல்லெண்ணெயில் குழப்பிப் பதமாய்க் காய்ச்சி முழுக மண்டைவியாதி சகலமும் தீரும்.

## தலைவலி சகலத்துக்கும் தைலம்

நல்லெண்ணெய் சேர்-1, பால் சேர்-1, ஆதண்டைச்சாறு சேர்-1, மிளகு விராகனெடை-7½, எலிப் புழுக்கை விராகனெடை-9 இவற்றைப் பொடிபண்ணி மேற்படி எண்ணெயில் கலந்து பதமா யெரித்து

11-தடவை முழுகவும். பச்சைப்பயறு அரைத்துத் தேய்த்துக் கொள்ளவும். இச்சாப் பத்தியம்.

## கபாலவாயு, வாய் கோணலுக்கு

ஆயிலியப்பட்டை, விழுதிவேர்ப்பட்டை, உகாய்ப் பட்டை, ஆவாரம்பட்டை, இலுப்பைப்பட்டை இவை ஐந்து வகையும், சமமாய்க்கூட்டி, முக்குருணி தண்ணீர் விட்டுக் காய்ச்சிக் குழம்புபதத்தி லிறக்கி வைத்துக் கொண்டு வெற்றிலையில் தட்டெடை கொள்ள மேற்படி வியாதி தீரும்.

## தீராத தலைவலிக்கு நசியம்

நாயுருவி விதையைச் சூரணமாக்கி நல்லெண் ணெயில் போட்டு நசியம்பண்ண தலைவலி மாறும்.

## தலைமயிர் முளைக்க

அந்தரத் தாமரையும், கொப்பரைத் தேங்காயும், சேர்த்திடித்துப் பிழிந்த சாற்றுடன் கஞ்சாச்சாறு, வெள்ளைச்சாரணைச்சாறு இவ்விரண்டும் கொஞ்சம் கூட விட்டுத் தேய்த்துக் கொள்ளவும். இப்படி நாற்பது நாள் செய்ய மயிர் முளைக்கும்.

## மயிர் வளரத் தைலம்

வெண்ணெய் படி-1, எருமைப்பால் படி-2, நெல் லிக் காய்ச்சாறு படி-2 இவற்றைக் கலந்து பதமாய்க் காய்ச்சித் தலையில் தேய்த்து ஸ்நானம் செய்துவர மயிர் வளரும்.

(வேறு)

ஒரு குண்டு சட்டியில் 15-பலம் எண்ணெயை வார்த்து அதில் நறுக்கின ஒரு மஞ்சள்தேறும், வயிற் றைக்கீறி குடல் முதலியவைகளை நீக்கின பழந்திண்ணி வவ்வால் ஒன்றும் போட்டு, மற்றொரு பெரும் சட்டி யால்மூடி, எருக்குப்பையைத் தோண்டி இதைப்

புதைத்து 40-நாள் சென்று எடுத்து வைத்துக் கொண்டு ஞாயிற்றுக்கிழமை ஆரம்பித்துத் தேய்த்து பத்துநாழிகை சென்றவுடன் தலை முழுகவும். மறுபடி ஒன்றைவிட் டொருநாள் மேற்கண்டபடி முழுகவும். கை தீண்டாமல் கோழி யிறகினால் தலையில் தேய்க்க வும். கையில் பட்டால் அங்கு மயிர் வளரும். மயிரை மூங்கில் பிளாச்சியால் வகுந்து தடவவும். இதில் புழு வெட்டுமாறும். மயிர் வளரும்.

## பொத்துக்கடிக்கு

பேய்க்குமட்டிக்காய்ச் சாறு உழக்கு, நல்லெண் ணெய் உழக்கு இரண்டையும் சேர்த்து சூரியபுடம் வைத்துத் தடவத் தீரும்.

## தேள் கடிக்கு

தண்ணீரில் மூழ்கும் கழற்சிக்கா யொன்றைத் துவாரம்செய்து உள்ளிருக்கும் பருப்பையெடுத்து நீக்கி, கிரகணம் தீண்டுதற்கு ஏழுநாளைக்குமுன் ரசத்தை அதில்விட்டு மெழுகினால் அடைத்து வைத்துக்கொண்டு தேள் கடித்தவர்களுக்கு மூன்றுதடவை மேலேயுருவிக் கையில் கொடுத்து அதைச் சலத்தில் போட்டு விக்கத் தீரும். காக்கணம் வேரை கிரகணம் தீண்டும் போது பிடுங்கி வைத்துக்கொண்டு கடித்த விடத்தில் உரைத்துத் தடவத் தீரும்.

## சகல விஷத்துக்கும் தேளுக்கும் எண்ணெய்

வேப்பெண்ணெய் 1-படி, உப்பு 1-படி இலுப்பைக் கட்டித்தூள் படி-1, மூஞ்சூறு-1 இவையெல்லாம் ஒரு பானையில் போட்டு மேலோடு மூடி 40 நாள் நிலத்தில் புதைத்து வைத்தெடுத்து விஷம் தீண்டினவர்களுக்கு 1-பணவெடை யெண்ணெய் கொடுக்கத் தீரும். இப்ப டியே தேள், நட்டுவாய்க்காலி இவை தீண்டினவர் களுக்கும் கொடுக்கத் தீரும்.

## விஷத்துக்கு

ஆணுக்குப் பெண்ணின் சிறுநீறும், பெண்ணுக்கு ஆணின் சிறுநீறும் ஒரு சிரங்கை உப்பைச்சேர்த்துக் கரைத்து மூன்றுதரம் வடிகட்டி கொடுக்கத் தீரும்.

## எலிகடிக்கும் இரைப்புக்கும் மருந்து

தேத்தான் அளவு வெல்லத்தைப் பள்ளஞ்செய்து அதில் 3-துளி எருக்கம்பால் வார்த்து உருண்டை செய்து காலமே தின்னவும். இப்படி ஏழுநாள் செய்ய இரைப்பு தீரும்.

## விஷத்திற்கு உசிதம்

பேய்ப்பீர்க்கு விதையைப் பொடிசெய்து வெற்றிலைச் சாற்றில் குழைத்துக் கல்வத்தில் அப்பி சூரியபுடமிட தைலம் இறங்கும். அந்தத் தைலத்தை ஒரு பரணியில் வைத்துக்கொள்ளவும். விஷம் தீண்டினவர்களுக்கு வெற்றிலையில் 4, 5-துளி தடவிச் சாப்பிடக் கொடுக்கத் தீரும். கலிக்கமுமிடலாம் திரைமிடப்பேய் ஓடிப்போம்.

## விஷத்திற்கு நசியம்

இலுப்பைக்கட்டி, பூவந்திப்பழத்தோல், வெண்காரம் இம்மூன்றும் சமமாய்க் கூட்டிப் பொடிசெய்து சிறுநீரில் நசியம்பண்ண பிணமானாலும் எழுந்திருக்கும்.

## எலிகடி 18-க்கும்

வேலிப்பருத்தி சமூலமரைத்துக் கொட்டைப்பாக்களவு அரையாழாக்கு வெள்ளாட்டுப்பாலில் 3 நாள் சாப்பிடவும். கடும் பத்தியம். துவரம்பருப்பு சேர்த்துக்கொள்ளவும்.

## நீரிழிவுச் சூரணம்

ஆவாரம்விதை, ஒதியம்பட்டை, துத்திவிதை, பனைவிதை, சாதிக்காய், சாதிப்பத்திரி, கிராம்பு, நவ

தானியம் இவற்றையெல்லாம் இளவறுப்பாக வறுத்துச் சூரணம் செய்து வெருகடிப் பிரமாணம் சாப்பிடவும்.

பத்தியம்: வாழைக்காய், மொச்சைப்பருப்பு, இறைச்சி, கடுகு, வெந்தயம் இவையாகும்.

## நீரிழிவுக்கு வெள்வங்க பஸ்பம்

பருத்திக்கொட்டையை நையநறுக்கி ஒற்றைக் கோணியின் ஒண்ணரைச்சாண் சதுரத்துண்டில் பரப்பி அதன்மேல் சுத்திபண்ணின வெள்ளீயம்-20, களஞ்சியை மெல்லிய தகடாய்த் தட்டிவைத்து மேலும் முன் கொட்டைத்தூள் பரப்பித் திரியாகச் சுருட்டிக் கட்டி கஜபுடம்போட நீறும் இதில் ஒரு பணவெடையாக தேனில் 3-நாள் கொள்ள மேற்படி வியாதி தீரும்.

## நீரிழிவுக்கு மருந்து

வேப்பன்பிசினை வெய்யிலில் உலர்த்திப் பொடி செய்து சாமையரிசியைப் பொடித்து இரண்டும் சம பாகமாகக் கலந்து 1-மண்டலம் 3-விரல்கொண்டது உட்கொள்ள மேற்படி ரோகம் தீரும். கைகண்டது.

## மேற்படி ரோகத்துக்குச் சூரணம்

குன்றிமணியிலை, வேலம்பூ, ஆவாரம்பூ, உளுந்து இந்த நாலுவகையும் தனித்தனி சூரணம் சமம், பேயன் வாழைப்பழம், சருக்கரை, வெண்ணெய் இம்மூன்றும் கூட்டிப் பிசைந்து மேற்படி சூரணம் வெருகடி கலந்து கொள்ளத் தீரும்.

## இதுவுமது

கோவைக்கொடியை கருங்குருவை நெல்லில் புழுக்கி உலர்த்தித் தூள்செய்து தேனிற்கலந்து சாப்பிடத் தீரும்.

## நாட்பட்ட சீழ்ப்பிரமியத்துக்கு

முத்தின தேங்காயைத்துருவி உழக்குப்பால் பிழிந்து நல்லவேளை வேர் கொஞ்சம், நான்கு மிளகு,

சீரகம் கொஞ்சம் இவற்றை இளவென்னீர் விட்டரைத்துக் கொட்டைப்பாக்களவு மேற்படி பாலில் கரைத்து உட்கொள்ளவும்.

பத்தியம்: வென்னீரும் சோறும் சாப்பிடவும். இந்தப்படி 3-நாள் உட்கொண்டு மறு பத்தியத்தில் உப்பை வறுத்துச் சேர்த்துக்கொள்ளவும். பின்பு பசுவின்பால் சேர்த்துக்கொள்ளவும் தீரும். கைகண்டது.

## பிரமியத்துக்கு

கொம்பரக்கை வென்னீரில் காய்ச்சி ஈச்சம்பாளைச் சாற்றில் கலந்துகொள்ளத் தீரும்.

## மேற்படி பிரமியத்துக்கு கருவங்க சிந்தூரம்

வட்டத்துத்திவேரைச் சிறு துண்டுகளாக நறுக்கிக் காயப்போட்டு இரண்டுமரக்கால் வேர் வைத்துக் கொண்டு புதுச்சட்டியைக் காயவைத்துக் காரீயம் 2-பலம் போட்டு உருக்கு முகத்தில் அந்த வேரைச் சிறுகச் சிறுகக் கிராசங்கொடுக்கவும். இப்படி 3-ஜாமம் செய்ய கல்மிஷம் நீங்கி பஸ்பமாகும். அதையெடுத்துக் கல்வத்தில் அரைத்துக் குடுக்கையில் வைத்துக்கொள்ளவும். ரோகஸ்தன் பலமறிந்து ¼, ½, ¾, 1-பணவெடை தேனில் கலந்துக் கொடுக்கவும். பிரமியரோகம் குணமாகும். கைகண்டது; வட்டத்துத்தி யென்பது சரக்கொன்றை.

## பிரமியத்துக்கு

இலுப்பைக் கொழுந்தில் நீராகாரத்தை விட்டிடித்து ¼, ½-சேர் சாறு பிழிந்து ¼, ½-பலம் கூரெள்ளெண்ணெய்விட்டுக் கலந்துகொடுக்க பிரமியம் பெரும்பாடு முதலியவை தீரும். கைகண்டது.

## மேற்படி பிரமியம் 21-க்கும் மருந்து

பொடுதலை கொண்டுவந்து ஒருபடி எருமைமோர் விட்டுத் துவைத்து ¼-படி சாறுவீதம் 3-நாள் 6-போது கொடுக்கவும்.

பத்தியம்: எருமைமோர், உப்பு, புளி இவை ஆகாது.

## ஜலபிரமியம், இரத்தப்பிரமியம், சீழ்ப்பிரமியம், நீரடைப்பு, சதையடைப்புக்கு மருந்து

தாழம்விழுது கொண்டுவந்து ½-படி சார் பிழிந்து அதில் பசுவின்பால் விட்டு ஐந்து தேத்தான் விதை உரைத்துச் சேர்த்து எலுமிச்சங்காயளவு கலந்து 3-நாள் காலையில் கொடுக்கவும்.

பத்தியம்: உப்பு, புளி, கைப்பு ஆகியவைகளைத் தள்ளவும்.

## மேற்படி ரோகத்திற்கு மருந்து

வழுக்கை பிடியாத இளநீரைப்பொற்று அதி லுள்ள நீரை யூற்றிவிட்டு அதையிடித்து வடிகட்டி சர்க்கரை கூட்டி ½-படி சாறு 3-நாள் உட்கொள்ளவும் தீரும். கைகண்டது.

## பிரமியம், பிரமியவாதம் முடங்கள், கூன்கட்டின கடுப்பு முதலியவைகளுக்குத் தைலம்

நல்லெண்ணெய் படி-1, பூண்டுரித்தபல் படி-1, இதனை அரைத்து மேற்படி எண்ணெயில் போட்டு சூரியபுடம்வைத்து அதில் வேளை 1-க்கு பலம் 1-அல் லது 2-அந்திசந்தி இரண்டுவேளையும் உட்கொண்டு தலை முதல் சர்வாங்கமும் தடவிப் பிடிக்கவும். இப்படி எட்டு நாள் செய்ய மேற் கண்டவைகள் சௌக்கியமாகும். மோதுகட்டின இடங்களில் சோற்றுக்கற்றாழையைச் சுட்டுக் கட்டினால் குணமாகும்.

பத்தியம்: சுறாக்கருவாடு, திருக்கைக்கருவாடு, உப்பு சேர்த்துக்கொள்ளவும்.

## மேற்படி வியாதிக்கு வேறு தைலம்

நாள்பட்ட வேப்பன்பட்டை இரண்டு சுமை கொண்டுவந்து நறுக்கி பெரிய மூடாவில் போட்டு

குளித்தைதலமிறக்கி கருங்குருவை யரிசிப் பொரிமாவில் கொஞ்சம்விட்டு புரட்டி எட்டுநாள் அந்திசந்தி உட்கொண்டுவந்தால் மேற்படி ரோகம் சொஸ்தமாகும். இச்சாப் பத்தியம்.

## இரத்த பிரமியத்திற்கு

வெள்ளரிக்காயைப்பிளந்து அதில் சுண்ணும்பைத் தடவி வெய்யிலில் வைத்துத் தின்னத் தீரும்.

## வெள்ளை வாகடத்தில் சொன்ன இருபதுவகை பிரமேகத்திற்கு கலியாணக்குளிகை

நெல்லிக்காய் தனிச்சாறு படி-4, அதில் 25--பலம் சர்க்கரைச் சேர்த்துப் பாகு காய்ச்சிக் கடுக்காய்த் தோல், தான்றிக்காய்த்தோல், நெல்லிமுள்ளி, திப்பிலி, காட்டுத்திப்பிலி, கொடிவேலி வேர்ப்பட்டை, கொத்து மல்லி விதை, ஓமம், வெட்பாலையரிசி, விளவரிசி, மிளகு, சீரகம், மந்திஷ்டி, பொற்கொன்றைவேர் வகைக்குப் பலம்-1, இந்திரகோபம் பலம்-8 இவைகளை இடித்துப் பொடிபண்ணி வஸ்திரகாயம் செய்து மேற்படி பாகில் போட்டு லேகிய பதமாய்க்கிளறி ஒரு கலசத்தில் வைத்துக்கொள்ளவும். காலையில் 1-கழஞ்சி 40-நாள் சாப்பிட இருபது வகைப் பிரமேகம், காமாலை, பாண்டு, குட்டம், மூத்திரக்கிரிச்சரம், மூலம், எலும்பு முறிவு ஆகியவை தீரும். நரைதிரை மாறும். மலடிக்குப் புத்திரர் உற்பத்தி யுண்டாகும். புத்திமிக வுண்டாகும். தேகம் பலமாகும்.

பத்தியம்: இச்சாப் பத்தியம்.

## சுக்கில மேகத்திற்கு

தும்பையிலையைப் புன்னைக்காயளவு அரைத்து எருமை மோரில் கொள்ளத் தீரும்.

## மேக ரோகத்திற்கு ரசசிந்தூரம்

ஒரு செங்கல்லில் ஒருபுரம் ஒருவிரல் கனம் குழி தோண்டி வெற்றிலைக்காம்பும் மிளகும் சமபாகம் சேர்த்து அரைத்து அரைவாசிவைத்து 6-கழஞ்சு ரசத்தைவிட்டு அதன் மேலும் மேற்படி மருந்தை வைத்து மேலே ஒரு செங்கல்லால் மூடிச் சீலைமண்செய்து காய வைத்துச் சாயாமல் வைத்து கெஜபுடம்போட சிந்தூரமாகும். இதனை எடுத்துப் பத்திரப்படுத்தவும். 1-பணவெடை சிந்தூரம் தேனில் கொள்ள வாயு குணமாகும். பசு வெண்ணெயில் 1-பணவெடை கொள்ள மேக ரோகங்கள் குணமாகும். ஏழுநாள் பத்தியமாகக் கொள்ளவும்.

## சுகஜன்னிக்கு

முருங்கைவேர்ப்பட்டை, தாழைவேர், குப்பைமேனிவேர் இம்மூன்றும் பாக்கில் சேர்த்துட்கொள்ள சுகஜன்னி குணமாகும்.

## மேகம் 20-க்கும் பேர்

உதிரமேகம், இட்சுமேகம், சாந்தரமேகம், சுரூமேகம், பிஷ்டிமேகம், சிதாமேகம், சுக்கிலமேகம், சீழ்மேகம், இரிதனுமேகம், இருகதமேகம், பிரமேகம், நீலமேகம், லாலாமேகம், தட்சருமேகம், மஞ்சிஷ்டமேகம், வெகு மூத்திரமேகம், மதுமேகம், அஸ்திமேகம், கௌதமேகம் ஆகியவைகளாம்.

## மேற்படி இருபது மேகத்திற்கும் மருந்து

காந்தம், கருடப்பச்சை, கல்மதம், சித்திரமூலம், கல்நார், ஜாதிக்காய், தேற்றான்விதை, அபின், ஜாதிலிங்கம், நீர்முள்ளிவிதை, கடலுருஞ்சிப்பட்டை, ஆவாரைவேர்ப்பட்டை, கொழுஞ்சிவிதை, துத்திவிதை, புளியங்கொட்டைத்தோல், வேப்பன்பிசின், வேலம் பிசின், உசிலம்பிசின், வாகைவிதை, முருங்கைவிதை

வகை 1-க்கு பங்கு-1, சூதம் பங்கு-2 இவற்றுள் இடித்துச் சூரணம்செய்யவேண்டியவைகளைச் சூரணித்தும், கல்வத்தில் தூள் செய்யவேண்டியவைகளைப் பொடித்தும், ரசமுதலிய எல்லாவற்றையும் கல்வத்திற்போட்டுப் பருத்திக்காய்ச்சாறு, தேங்காயிளநீர் மட்டைச்சாறு, பன்னீர், கையாந்தகரைச்சாறு, எருமைத்தயிர் இவை ஐந்தும் வெவ்வேருய் விட்டு அரைத்துத் தேற்ருன்விதைப் பிரமாணம் உருண்டைசெய்து நிழலில் காயவைத்துக்கொள்ளவும். இந்த உருண்டையைச் சருக்கரையில் அல்லது தேனில் மத்தித்துக்கொடுக்க மேகம்-20, சுக்கிலப்பிரமியம்-18, கிரிச்சரம்-18, உள்ளுருக்கி, எலும்புருக்கி-18, நீர்க்கடுப்பு-6, தாகசுரம்-32, மூத்திரப்பாண்டு-9, கிராணி-6 இவை முதலியவைகள் தீரும்.

## மேகச் சூரணம்

புற்ருன்சோற்றை வெய்யிலில் காயப்போட்டுப் பொடிபண்ணி வைத்துக்கொண்டு மூவிரல் கொண்ட தூளில் தேன் சேர்த்து உட்கொள்ள மதுமேகம் முதலியவை தீரும்.

பத்தியம்: கைப்புப் புளிப்பு தள்ளவேண்டியது.

## அஞ்சனக்கல் பஸ்பம்

அஞ்சனக்கல் வேண்டியது கொண்டுவந்து சிறுகீரையை அரைத்துக் குகைசெய்து மேல்மூடி சீலைமண்செய்து கெஜபுடம்போட பஸ்பமாகும். அனுபானம்: தேனில்கொள்ள 20-வகை மேகம் தீரும்.

## மேகத்திற்கு கிருஷ்ண அப்பிரேகபஸ்பம்

சுத்திபண்ணின கிருஷ்ண அப்பிரேகத்தை யெருக்கம் பாலிலரைத்து அகலில் வைத்துச் சீலைமண்செய்து கஜபுடம் மூன்றுபோட பஸ்பமாகும்.

## 18—குஷ்டத்துக்கும்

சுத்திசெய்த குக்கில் சேர்-1, மேற்படி கெந்தகம் சேர்-1, கார்போகரிசி சேர்-2 இவற்றைச் சூரணம் செய்து வெருகடிப் பிரமாணம் உட்கொள்ளத் தீரும்.

### நாக சிந்தூரம்

நாகம் பலம்-10, இலுப்பை யெண்ணெயும் பசு வெண்ணெயும் சமமாய்க்கலந்து கரண்டியில் தடவி நாகத்தை அதில்வைத்து உருக்கி வெள்ளாட்டுப் பாலில் சாய்க்கவும். இப்படி 20-தடவை செய்தெடுத்துப் பின்பு புதிய சட்டியில் வைத்து அடுப்பேற்றி உருகும்போது வெடியுப்பு பலம்-4, ஓமம் படி-½, சுக்கு பலம்-1, மஞ்சள் பலம்-1 இவற்றை அரைத்துத் தூள் செய்து சிறுகச்சிறுக அதில் தூவிவரவும். அதின் பிறகு சென்னயுருவிசமூலம் கொண்டுவந்து துண்டு துண்டுகளாக நறுக்கி அதில்போட்டு வறுக்கவும். சிந்தூரம் மாதுளம்பூ வர்ணமாகும். அதை எடுத்துக் கொஞ்சம் தண்ணீரில் போட்டுப் பார்த்தால் மிதக்கும். எடுத்துச் சிமிழில் வைத்துக்கொள்ளவும். வேளைக்கு சிந்தூரம் பணவெடை-1, திரிகடுகுச் சூரணம் வெருகடி இவையிரண்டும் சேர்த்து தேனில் 20-நாள் உட்கொள்ள ஈழை, இருமல், மந்தாரகாசம், மகாசுவாசம், அரிகுறல், நெஞ்சிநோக்காடு, சேற்றுமம், மேற்படி சோபம்-96, பித்தசோகம்-126, உஷ்ணகோபம்-326, சுக்கிலப்பிரமியம்-18, பவித்திரக்கட்டு-5, கல்லடைப்பான்-18, சந்தடைப்பான்-16 குன்மம்-16, சோகை-12, பவுத்திரம்-21, முகயெரிவு, கையெரிவு, காலெரிவு, வயிற்றெறிவு இவையெல்லாம் தீரும். 1-பணவெடை சிந்தூரமும் அவுரிவேர்த்தூள் வெருகடியும் ஆவாரைத் தைலத்தில் சேர்த்து மத்தித்து 3-நாள் கொள்ள ஜலக்கழிச்சல் 20-ம் தீரும். 1-பணவெடை சிந்தூரத்தை அவுரிவேர் சமூலம் சூரணம்செய்து வெருகடி சேர்த்து மேற்படி தைலமும் கூடசேர்த்து இரண்டு

வேளையும் நாற்பதுநாள் சாப்பிட்டால் ஜலகழிச்சல், மூத்திரகிரிச்சரம் உள்ளுருக்கி 18-ம் தீரும். 1-பண வெடை சிந்தூரமும் கொடிவேலிவேர் சூரணம் வெருகடியும் சேர்த்து நாற்பது நாள் அந்தி சந்தி இரண்டு வேளையும் சாப்பிட சத்திகுன்மம், எரிகுன்மம், ஈழை, இருமல், எலிகடி, இளைப்பு இவை தீரும். 1-பண வெடை சிந்தூரமும், கோரோசனை 2-பணவெடையும் மூலைப்பாலில் சேர்த்து மூன்று நாள்கொள்ள 18-சுரமும் தீரும். 1-பணவெடை சிந்தூரமும் திப்பிலி பொடி வெருகடியும் அந்தி சந்தி இரண்டுபோதும் ஐந்து நாள் உட்கொள்ள மூலக்கிராணி தீரும். ஜாதிக்காய் கால் பங்கு, கிராம்பு மூன்று இவற்றைப் பொடிசெய்து 1-பணவெடை சிந்தூரம் சேர்த்து தேன், நெய், முட்டை, வெள்ளைக்கருவு இவற்றைச் சேர்த்து அதில் பத்துநாள் உட்கொள்ள தாது விர்த்தியாகும்.

## அண்ட வாதத்துக்கு

பூண்டு பலம்-¼, மிளகு பலம்-1, சுக்கு தேறு-4, திப்பிலி-4, கல்லுப்பு பலம்-2, பெருங்காயம் விராகனெடை-2, கழற்சிவிதைப்பருப்பு பலம்-1, 1-சேர் விளக்கெண்ணெயில் கூட்டி எரித்து வடித்து சமயத்திற்குத் தக்கபடி கொடுக்கத் தீரும்.

## தாம்பிர பஸ்பம்

வல்லாரையை அரைத்து அடைதட்டி அடைமேல் துட்டை வைத்துமூடிச் சீலைமண்செய்து புடம் போட்டு எடுத்து தென்னங்கள்ளில் ஏழுநாள் ஊறப் போட்டெடுத்து, கெந்தகம் விராகனெடை-1½ இதை உள்ளொட்டி புறவொட்டியின் சாறுவிட்டு அரைத்து அதன்மேல் பூசி அடைதட்டி அரசங்கட்டையைத் துளைத்து அதற்குள் வைத்து மூடிச் சீலைமண்செய்து கெஜபுடம்போட சுத்த வெள்ளையாயிருக்கும். அதை யெடுத்து வைத்துக்கொண்டு சகலவாய்வு, சகல

வியாதிகளுக்கும் 1-பணவெடை தக்க அனுபானத்தில் கொடுக்கத் தீரும்.

## கிரந்திக்குக் கெந்தக பக்குவம்

கெந்தகம் - 20 விராகனெடை பொடிசெய்து இரண்டுபடி பசுவின் பாலில் துணியில் முடிந்து டோளாந்தரமாக யெரித்து ஆறினபிறகு எடுத்துப் பொடிசெய்து கத்தரிப்பிஞ்சு - 20 கொண்டுவந்து ஒன்றை நாலுபிளப்பாகக் கீறி 1 - விராகனெடை தூளைத் திணிக்கவும். இப்படி யெல்லாக் காயிலும் திணித்துத் தேங்காய்ப்பால் தனிப்பாலாய்ப் பிழிந்து அதில் காய்களைப் போட்டு வேகவைத்து எடுத்துக் காயும் கடுகும் ஒரு கலயத்தில் வைத்துக்கொள்ளவும். அந்தி சந்தி ஒரு காய் வீதம் பத்துநாள் உட்கொண்டால் தீரும் வியாதிகளாவன: சகல கிரந்தி, கிரந்திசூலை, உதட்டுச்சூலை. கட்டுச்சூலை, கணைசூலை, கடுப்புசூலை, வாயுசூலை, வாதச்சூலை, பக்கச்சூலை, மண்டைச்சூலை, பறங்கிப்புண், வாய்க்கிரந்தி, அழுகுணிப்புண், பவுத்திரம், கன்னவிப்புருதி, வயிற்றிலுள்ள வியாதிகள். சொரி, சிரங்கு முதலானதும் குணமாகும்.

பத்தியம்: உப்பு, புளி, தயிர், மோர் இவை ஆகாது. பால் சேர்த்துக் கொள்ளலாம்.

## மாட்டுக்கு விஷத்திற்கு நசியம்

மாட்டை பாம்பு கடித்தால் அதன் வாயிலிருந்து கோழை விழும்; செவிமயிர் உதிரும்; முருங்கையிலை, பாகையிலை, வசம்பு, உள்ளி இவை மூன்றும் நறுக்கிச் சிறுநீரிற் கலந்து நாசியில் நசியமிட்டு ஊத எழுந்திருக்கும்.

## கபால ரோகத்திற்கு தைலம்

சித்திரமூல வேர்ப்பட்டை பலம்-1, கத்தாழைச் சாறு பலம்-10 இதனால் அரைத்து நல்லெண்ணெய் சேர் 1-ல் கலந்து வடித்து ஸ்நானம் பண்ணத் தீரும்.

## கிரந்திக்கு

விடத்தரை வேர்ப்பட்டை விராகனெடை-½, ரசம் விராகனெடை - 1½, அம்மியில் நெகிழ அரைத்து ஒரு பீங்கானில் வைத்துக்கொண்டு 9-நாள் பாகித்துக் காலை மாலை இரண்டுவேளையும் சாப்பிடவும்.

பத்தியம்: புளி தள்ளவும்.

## அரையாப்புக்கு

காலமே குளிர்ந்த ஜலத்தில் ஸ்நானம் பண்ணச் சொல்லி உடனே 1-விராகனெடை ரசம் உள்ளுக்குக் கொடுத்து மேலே எருமைத் தயிர்ச்சாதம் உள்ளுக்குக் கொடுக்கவும். இப்படி 3-நாள் அல்லது 5 நாள் கொடுக்கத் தீரும். தேகபலம் பார்த்துச் செய்யவும்.

பத்தியம்: வாயு, கரப்பான் பதார்த்தம் தள்ள வேண்டும்.

## திருவரங்க லேகியம்

சென்னாக்கூனி பலம்-10, அதிமதுரம் பலம்-1, வெள்ளை மிளகு பலம்-1, வால்மிளகு பலம்-1, வெண்காரம் பலம்-1, பூரம் பலம்-1, மேற்படி கூனியை வாசனை போகாமல் இளவறுப்பாய் நெய்யில் வறுத்துச் சூரணம்செய்து மற்றச் சரக்குகளை ரவியிலுலர்த்தி யிடித்துச் சூரணித்து முன்கூனியுடன் சேர்த்து மேற்படி பூரத்தை மூலைப்பாலில் ஒருஜாமம் சுருக்குக்கொடுத்து முசுமுசுக்கைச் சாற்றில் ஒருஜாமம் சுறுக்குக்கொடுத்து வெண்காரத்தைப் பொரித்துத் தூள்செய்துக்கொண்டு பூரத்தையும் தூள்செய்துக் கொண்டு மேற்படி சூரணத்தில் சேர்த்து நல்ல வெல்லம் பலம்-20, இதில் ஜலம் விட்டு பாகுசெய்து இளம்பதத்தில் மேற்படி சூரணத்தையும் மருந்துகளையும் போட்டு சற்றுநேரம் கிளரி நெய் பலம்-10 விட்டு; லேகிய பதமாய்ச் செய்துக்கொள்ளவும். நெல்லிக்காயளவு காலை மாலை அரை மண்டலம்

ஒருமண்டலம் உட்கொண்டுவந்தால், தீரும் வியாதிகள்: மேகப்படை, புரைக்குழல், ஆனைக்கால், மேற்படி கிராணி. சிலந்தி, அரையாப்பு. குஷ்டு, பாண்டு, நீர்க் கோர்வை, ஆம்பர்க்கட்டி, மகோதரம், கண்டமாலை, வலி கள், கன்னப்புற்று, தந்தவாயு, யோனிப்புற்று, லிங்கப் புற்று, பவுத்திரம், மூலம் இவை தீரும். இச்சாப் பத்தியம்.

## நண்டுக்கல் பிரயோகம்

வெண்காரம் பொரித்துக் கிழாயஞ்செய்து அதில் குன்றிமணியெடை நண்டுக்கல்லில் உரைத்துக் கொடுக் கக் கிரிச்சரம் தீரும். மூக்கரட்டைவேர் ரசத்தில் குன்றி யெடை யுரைத்துக் கொடுக்க வாதங்கள் தீரும் சீரகக் கியாழத்தில் குன்றியெடை யுரைத்துக் கொடுக்கச் சுரங்கள் தீரும். ஜாதிக்காய்த்தூளில் குன்றியெடை யுரைத்துக் கொடுக்கத் தம்பனமாகும். முரிவு எலுமிச் சம்பழம்.

## வாங்திபேதிக்குக் கர்ப்பூரசத்து

ஒரு செம்மரப்படியில் துணியினால் வேடுகட்டிக் கர்ப்பூரத்தைத் தூள்செய்து வேட்டின்மேல் பரப்பி அதன்மேல் அப்பிரேகத் தகடுவைத்து தகட்டின்மேல் நெருப்புப்போட்டு விசிறினால் கர்ப்பூரம் இளகிப் படி யில் இறங்கி யிருக்கும். இது சிவந்த நிறமாயிருக்கும். அதையெடுத்து சீசாவில் வைத்துக்கொள்ளவும். இதில் நாலு நெல்லிடை தேனில் கொள்ள மேற்படி வியாதி தீரும்.

## தாளக பஸ்பம்

தாளகம் பலம்-1, இதை பிராந்தியில் 1-இராத்திரி யில் ஊறவைத்து மறுநாள் ஒரு மூங்கில் குழாவில் அரைவாசி வெந்த சுன்னக்கல் போட்டு மேற்படி தாளகத்தைவைத்து மேலும் சுன்னக்கல் போட்டுக் கழுதை நீர்விட்டுத்தாளித்து மூடிவைத்துப் பிறகு

அந்தத் தாளகத்தை யெடுத்து மறுபடியும் கழுநீர் ½-படியில் டோளாந்தரமாய்த் துணியில் கட்டியெரித்து எடுத்துக்கொள்ளவும். காளைமாட்டுச் சாணத்தினல் இரண்டு கிண்ணம்செய்து அதில் புறசம்பட்டை சுட்ட சாம்பல் போட்டு சுத்திசெய்த தாளகத்தை அதில் வைத்து மேலும் சாம்பல்போட்டு மறு கிண்ணத்தால் மூடிச் சீலமண்செய்து 15-எருவில் புடம்போட பஸ்பமாகும். இந்த பஸ்பத்தை 1-பணவெடை தேனில் நெய்யில் உட்கொள்ள சுரம், காசம், சொஸ்தமாகும். வாயு பதார்த்தம் தள்ளி பத்தியம் செய்யவும்.

## கெந்தகத் தைலம்

கற்சுண்ணும்பு பலம்-10, நெல்லிக்காய் கெந்தகம் பலம்-10, ஒருபலம் கெந்தகத்தையும் ஒருபலம் சுண்ணும்பையும் கல்வத்திற்போட்டு சுத்த ஜலம்விட்டு மைபோலரைத்து 1-பானையில் பெரிய படியால் 4-படி ஜலம் வார்த்து அதில் முன் அரைத்த மருந்தைக் கரைத்து அடுப்பில்வைத்து இரண்டு விரற்கடை ஜலம் குறைகிறவரைக்கும் எரித்துத் தெளியவைத்து இறுத்துக்கொண்டு அடியில் இருக்கும் மஷ்டை நீக்கிவிட வேண்டியது. பின்பு முன்போல் ஒருபலம் சுண்ணும்பும் ஒருபலம் கெந்தகமும் கல்வத்தில் ஜலம்விட்டு மைபோலரைத்து மேற்படி தெளிவு ஜலத்தில் கரைத்து முன்போலவே யெரித்துத் தெளிவிறுத்துக்கொண்டு அதில் முன்போலவே கெந்தகமும் சுண்ணும்பும் சேர்த்தரைத்துக் காய்ச்சி தெளிவு எடுக்கவும். இவ்விதம் 10-தடவை யரைத்துக் கரைத்து எரித்து 10-ம் தடவை எரிக்கும்போது ஜலம் சுண்டுகிறவரையில் எரிக்க மேலே தைலம் மிதக்கும். அந்தத் தைலத்தை மெதுவாயெடுத்து ஒரு பீங்கான் பாத்திரத்தில் வைத்து அந்தத் தைலத்திலுள்ள ஜலம் சுண்டுகிறவரையில் வெய்யிலில்வைத்து உடனே சீசாவில் வைத்துக்கொள்ளவும்.

ரசம், தாளகம், வீரம், பூரம், லிங்கம் இன்னும் அநேக சரக்குகளுக்கு இந்தத் தைலம்விட்டு நாலு ஜாமம் அரைத்து வில்லைதட்டிக் காயவைத்துக் குப்பி யில் அடைத்து நாலுஜாமம் எரிக்க சிந்தூரமாகும். சகல ரோகங்களையும் கண்டிக்கும். வியாதிக்குத் தகுந்த அனுபானம் சேர்த்துக் கொடுக்கவும்.

பத்தியம்: இச்சாப்பத்தியம்.

## தீபனகர்க்கம்

மேற்றோல் சீவின இஞ்சி, சீரகம், மிளகு, திப்பிலி, கண்டத்திப்பிலி, கிராம்பு, சதகுப்பை இவைகள் வகைக்குச் சமனெடையாக சுத்த ஜலம் விட்டரைத்து ரவியிலுலர்த்தி மறுபடியும் பொடித்து வஸ்திரகாயம் செய்து வெந்நீரில் விராகனெடை அரை அல்லது முக்கால் உட்கொள்ள தீபனமுண்டாகும்.

## பாவன கடுக்காய்

சூரத்துக்கடுக்காய்-100, கழுநீரில் கொட்டி 3-நாள் ஊறவைத்து 4-ம் நாள் காலையில் ஜலத்தை யிறுத்து விட்டு சுத்த ஜலம் விட்டலம்பி மறுபடியும் கழுநீர்விட்டு முன்போல ஊறவைத்து ஜலத்தையிறுத்துச் சுத்த ஜலம் விட்டலம்பவும். இப்படி 3-முறை செய்துபின் 10-ம் நாள் காலையில் மேற்படி காய்களை அலம்பி எடுத்து விதைகளை நீக்கி மண் பாத்திரத்தில் கொட்டி பசுவின் மோர் சேர் 10 விட்டு அதில் கடல் உப்பு, முன் எடுத்த விதைக்குச் சமன் நிறையாகச் சேர்த்து அடுப்பேற்றி மெதுவாய் எரித்து நீர் வறண்டபின் அதில் சுக்கு, இந்துப்பு, ஓமம் வகைக்கு விராகனெடை-7, திப்பிலி, கண்டத்திப்பிலி, சித்திரமூல வேர்ப்பட்டை, செவியம் வகைக்கு விராகனெடை மூன்றே முக்கால் இவற்றை யிடித்துச் சூரணித்து வஸ்திரகாயம்செய்து மேற்படி காயில் தூவி, எலுமிச்சம்பழரசம் படி-அரையே அரைக் கால் அதில் சிறுகச்சிறுக தெளித்து வெய்யிலில்

வைத்து மறுநாள் இஞ்சியைத் தோல்போக்கி இடித்துத் தெளியவைத்து சுண்ணும்பை நீக்கிய சார் அரையே அரைக்கால், முன்போல் சேர்த்து ரவியிலுலர்த்தி போஜனத்திற்கு முன்னும் பின்னும் உட்கொண்டால் இருமல், மந்தம், வயிற்றுவலி, வாந்திரோகம், சூலே, வாதாதிக்கம், மூலம், அரோசிகம், பீலிகரோகம், பீனிசம், விசூஷிரோகம், அன்னத்துவேஷம், பலவிதப்பாண்டு, ஆமலிகபித்தம், இரத்தபித்தம் முதலிய ரோகங்கள் குணமாகும். 1-மண்டலம் உட்கொள்ள வேண்டும். இச்சாப்பத்தியம்.

## பரிமள விநோதப்போடி

பூஞ்சாந்துப்பட்டை பலம்-4, பூலாங்கிழங்கு பலம்-2, பச்சிலே பலம்-2, கற்பாசி பலம்-2, மகிழம்பூ பலம்-2, லவங்கப்பத்திரி பலம் 1, சிறுநாகப்பூ பலம்-1, சோம்பு பலம்-1½, செண்பகப்பூ பலம்-1½, தாளிசப் பத்திரி பலம்-1½, கோஷ்டம் பலம்-½, லவங்கப்பட்டை பலம்-½, ஏலம் பலம்-½, லவங்கம் பலம்-½, சிற்றரத்தை பலம்-½, ஜாதிக்காய் பலம்-½, பெரிய லவங்கப்பட்டை பலம்-¾, கஸ்தூரி மஞ்சள் பலம்¾; புனுகுசட்டம் பலம்-1, விலாமிச்சம்வேர் பலம் 1½ கவுளா பலம்-1½, கிளியூரம் பட்டை பலம் 2, சடாமாஞ்சில் பலம்-2, நன்னாரிவேர் பலம்-2 நாகணம் அல்லது நகம் பலம்-1, கொத்துமல்லி விதை பலம்-1, மருவு பலம் 1, தவனம் பலம்-1, குருவேர் பலம்-1, நல்ல சந்தனம் பலம்-16, ஆக 30, சரக்குகளில் பூலாங்கிழங்கு, தாளிசப்பத்திரி, கோஷ்டம், லவங்கம், கிளியூரம்பட்டை, சடாமாஞ்சில், சிற்றரத்தை நாகணம், கவுளா, சோம்பு, செண்பகம், பெருலவங்கப்பட்டை, சிறுலவங்கப்பட்டை இவற்றைத் தனி பசு நெய்விட்டு வறுத்துக்கொள்ளவும். மேற்படி சந்தனக்கட்டையை பன்னீர்விட்டு யிழைத்து உலர்த்திப் பொடிபண்ணவும். புனுகு சட்டத்தைச் சிறு துண்டுகளாய்ச் செய்து பன்னீரில் மூன்றுநாள் ஊற

வைத்து அம்மியில் மைபோலரைத்துக் கொள்ளவும். மற்றச் சரக்குகளையெல்லாம் உலர்த்தி நன்றாயிடித்து வஸ்திரகாயம்செய்து அரைத்த சட்டத்தையும் சூரணங்களையும் ஒன்றாய்ச்சேர்த்து ஒருபாத்திரத்தில் போட்டுக் குழிபண்ணி அதில் பசுவின்பால் சேர்-1, தேன் பலம்-1½, நாட்டுச்சர்க்கரை பலம்-1½, இவைகளைச் சேர்த்துப் பின்பு மாங்கொழுந்து, நாரத்தையிலை, எலுமிச்சயிலை, கொழுஞ்சியிலை இந்நான்கும் வகைக்குப் பலம்-2, ஒரு பாத்திரத்திற் போட்டு 5-சேர் ஜலம்விட்டு மிதமாக எரித்து அரைத் திட்டமான பிறகு முன் குழைத்து வைத்த சூரணத்தில் வடித்து நன்றாகக்கிண்டி அதன்மேல் கியாழமிட்ட இலைகளைப் போட்டு மூடிவைத்து 60-நாழிகை ஆனபிறகு இலைகளை நீக்கிவிட்டு ரவியில் நன்றாயுலர்த்தி ஈரம் நீங்கிக் காய்ந்த பின் ஒரு பெட்டியில் பதனம் செய்துக்கொண்டு, வேண்டும்போது மேற்படி பொடி சேர் 1-க்கு சிலாரசம் பலம்-1, பச்சைக் கற்பூரம் பலம்-1, புனுகு விராகனெடை-1, கஸ்தூரி விராகனெடை-¼ இந்நான்கும் வெவ்வேறாகத் தனித்தனி சேர்த்து அரைத்துப் பிறகு ஒன்றாய்ச்சேர்த்து அரைத்து மெல்லிதாகப் பொடிசெய்து ஒரு குழிப் பீங்கானில் அரைவாசி சூரணத்தைக்கொட்டி அதன்மேல் மல்லிகைப்பூ ஆழாக்கு-1, மெல்லிய சீலையில் முடிந்துவைத்து மற்றப்பாதி பொடியும் மேல் கொட்டி 30-நாழிகை கழித்துக் காலையில் எடுத்து பூவைநீக்கி இந்தப்பொடியைச் சீசாவில் பதனம்பண்ணி வைத்துக்கொண்டு குளிக்கும்போது மேல் தேய்த்துக் குளிக்கலாம். மேலுக்கும் பூசிக்கொள்ளலாம். இதனால் தீரும் வியாதிகள்: கற்றாழைநாற்றம், தலைவலி, பொரிமேகம், வேர்வை, மந்தம் நீங்கும். நல்ல மணமும், காந்தியும், லக்ஷ்மீகாரமு முண்டாகும். இது தான் இறுமணப்பொடி.

## உயர்ந்த தசாங்கம்

கஸ்தூரி விராகனெடை-2, குங்குமப்பூ, விராக னெடை - 2, பச்சைக் கற்பூரம் விராகனெடை - 2, கோரோசனை விராகனெடை-2, சந்தனக்கட்டை சேர்-1, குக்கில் சேர்-1, கோஷ்டம் சேர்-1, அகருக்கட்டை சேர்-1, துளசிப்பட்டை சேர்-1, பசுவின் நெய் சேர்-1 இவைகளையெல்லாம் இடித்துத் தூள்செய்து நெய்விட் டுப் பிசரி வைத்துக்கொள்ளவும்.

## (வேறு)

அகிற்கட்டை, சடாமாஞ்சில், பச்சிலை, கிளியூரம் பட்டை, குறுவேர், பூஞ்சாந்துப்பட்டை, செண்பக மொக்கு, கோஷ்டம், அன்னாசிப்பூ, நன்னாரிவேர், விலா மிச்சம்வேர், வெட்டிவேர், கல்பாசி, பூலாங்கிழங்கு, அகரு, தேவதாரிக்கட்டை வகைக்குப் பலம்-1, சோம்பு, கோரைக்கிழங்கு, சிறுநாகப்பூ கஸ்தூரிமஞ்சள், கார் போகஅரிசி, தாளிசப்பத்திரி வகைக்குப் பலம்-½. வெங் கம்பூர் சந்தனக்கட்டை சேர்-1¼, சாம்பிராணி சேர்-½, மட்டிப்பால் பலம்-1. நெரியரிசிப்பால் பலம்-1, தேன் பலம்-½, பசுவின் நெய் பலம்-½, மேற்படி சரக்குகளை இடித்துத் தூள்செய்து நெய், தேன், பால்கள் முதலிய வைகளைக் கலந்து பிசரி வைத்துக்கொள்ளவும்.

## சோட சாங்கம்

மைசாக்ஷி, தேவதாரிக்கட்டை, மரமஞ்சள் லவங் கப்பத்திரி, சந்தனக்கட்டை, விலாமிச்சம்வேர், அகிற் கட்டை, கோஷ்டம், நாட்டுச்சர்க்கரை, குங்கிலியம், நர்கணம், கொம்பரக்கு, சடாமாஞ்சில், நெரியரிசிப்பால், கடுக்காய், நெய் வகைக்குப் பலம்-1, இவற்றில் நாக ணத்தை மாத்திரம் வறுத்துச்சேர்த்து மற்றவைகளை இடித்துத் தூள்செய்து கலந்து வைத்துக் கொள்ளவும்.

## உயர்ந்த அபீர்ப்போடி

பச்சிலை, கிளியூரம்பட்டை, தாளிசப்பத்திரி, சடாமாஞ்சில், கோஷ்டம், கார்போகஅரிசி, மருவு, தவனம், கோரைக்கிழங்கு, வெட்டிவேர், விலாமிச்சம்வேர், நன்ஞாரிவேர், கல்பாசி, லவங்கப்பட்டை, லவங்கப்பத்திரி, சன்னலவங்கப்பட்டை, சிறுநாகப்பூ, செண்பகமொக்கு, சிற்றரத்தை, லவங்கம், ஜாதிக்காய், மகிழம்பூ, கொண்டைசீனிக்கிழங்கு, பூலாங்கிழங்கு, சாம்பிராணித்தைலம் வகைக்குப் பலம்-¼ இடித்துத் தூள்செய்து வைத்துக் கொள்ளவும்.

## சிக்ஸாப் போடி

தாளிசப்பத்திரி விராகனெடை-2, கோஷ்டம் விராகனெடை-1, கோரைக்கிழங்கு விராகனெடை - 2, பூசாந்துப்பட்டை விராகனெடை-1, கொண்டை சீனிக்கிழங்கு விராகனெடை-½, பச்சிலை விராகனெடை-1, கவுளா விராகனெடை-1, அதிமதுரம் விராகனெடை-1, செவ்வள்ளிக்கொடி விராகனெடை - 1, சிவகரந்தை, விராகனெடை-1, பூலாங்கிழங்கு விராகனெடை-2, புனுகுசட்டம் விராகனெடை-2, ஜாதிக்காய் விராகனெடை-½, ஏலக்காய் விராகனெடை-½, கிராம்பு விராகனெடை-½, சந்தனத்தூள் விராகனெடை-16, நன்ஞாரிவேர் விராகனெடை-8, வெட்டிவேர் விராகனெடை-8 விலாமிச்சம்வேர் விராகனெடை-¼, வாசனைப்புல் விராகனெடை-8, செம்மரத்தூள் விராகனெடை-4, மகிழம்பூ விராகனெடை-3 தவனக்கொழுந்து விராகனெடை-3, இவைகளை யெல்லாம் இடித்துத் தூள்செய்து வைத்துக்கொள்ளவும். இதை பூசிக்கொண்டு ஸ்நானம் செய்தால் தேகத்தில் உள்ள படைகள் நீங்கும்.

## சாம்பிராணிவத்தி முறை

பால்சாம்பிராணி விராகனெடை-20, தாளிசப்பத்திரி விராகனெடை-10, அகிற்கட்டை விராகனெடை-

20, பூசாந்துப்பட்டை விராகனெடை-10, சந்தனக் கட்டை விராகனெடை-10, கிராம்பு விராகனெடை-10, கல்பாசி விராகனெடை-5, கிளியூரம்பட்டை விராக னெடை-5, சன்ன லவங்கப்பட்டை விராகனெடை-5, சடாமாஞ்சில் விராகனெடை-5, தவனக்கொழுந்து விராகனெடை-5, ரோஜாமொக்கு விராகனெடை-5, கோரைக்கிழங்கு விராகனெடை-5, கார்போகஅரிசி விராகனெடை-5, மைசாக்ஷி விராகனெடை-5, அகில் கட்டை விராகனெடை-5, தேவதாரிக்கட்டை விராக னெடை-5, சிற்றரத்தை விராகனெடை-5, வெட்டி வேர் விராகனெடை-5,அன்னாசிப்பூ விராகனெடை-1¼, விலாமிச்சம்வேர் விராகனெடை-5, கோஷ்டம் விராக னெடை-5, றாமிமஸ்தகி விராகனெடை-2½. ஜாதிக் காய் விராகனெடை-1, ஜாதிப்பத்திரி விராகனெடை-2½, குருவித்தலை அகரு விராகனெடை-2½, நாகணம் விராகனெடை-அரையே அரைக்கால், ஏலம் விராக னெடை-2½, கொண்டை சீனிக்கிழங்கு விராகனெடை-2½, அதிமதுரம் விராகனெடை-2½. செண்பகமொக்கு விராகனெடை-3, பூலாங்கிழங்கு விராகனெடை-2½, சிறுநாகப்பூ விராகனெடை-2½, நன்னாரிவேர் விராக னெடை-2½, லவங்கப்பத்திரி விராகனெடை-2½, கெவுளா விராகனெடை-3, புனுகுசட்டம் விராக னெடை-3½, கருவாப்பட்டை விராகனெடை-2½, புஜப்பத்திரி விராகனெடை-1½, பச்சிலை விராக னெடை-1¼, சிலாரசம் விராகனெடை-20, பன்னீர் புட்டி-4, கொத்துமல்லி விராகனெடை-1¼, சோம்பு விராகனெடை-1¼, தேன் விராகனெடை 10, கற் கண்டு விராகனெடை-10, விளாம்பழம் விராகனெடை-5, மட்டிப்பால் விராகனெடை-10 மீனம்பர் விராக னெடை-5, சுவாகு அத்தர் விராகனெடை 2½, சந்தன அத்தர் விராகனெடை-2½, குங்குமப்பூ விராகனெடை-1¼, பச்சைக் கற்பூரம் விராகனெடை-1¼, கோரோசனை விராகனெடை-2½, வெள்ளையுரம் விராகனெடை-¼,

பிசுக்குப்பட்டை விராகனெடை-25, இதைத் தனியே தூள்செய்து வைத்துக்கொள்ளவும். புனுகு விராகனெடை-1¼, கஸ்தூரி விராகனெடை-1¼ இதில் சாம்பிராணி, அகிற்கட்டை, குறிவித்தலை அகர் இந்த மூன்றையும் தனியாக இடித்துத் தூள்செய்து ஜாதிக்காய் நாகணம் இவ்விரண்டையும் நெய்யில் வறுத்துத் தூள் செய்து சேர்த்து புதுப்பானையில் போட்டுப் பன்னீர் விட்டுப் பிசைந்து மொத்தையாய்செய்து மேற்படி பழமும் சேர்த்துப் பிசைந்து புனுகு சட்டத்தைச் சிறு துண்டுகளாய்ச் செய்து பாலும் சேர்த்து மூன்றுநாள் ஊறவைத்து அம்மியில்வைத்து பக்குவமாய் அரைத்து மேற்படி அம்பர், அத்தர், பச்சைக் கற்பூரம், குங்குமப்பூ, கோரோசனை, தேன், கஸ்தூரி, உரம் இவற்றுள் சூரணம் செய்யவேண்டியவைகளைச் சூரணித்து எல்லாம் ஒன்ருய்ச் சேர்த்துப் பிசைந்து வைத்துக் கொண்டு ஒரு சேருக்கு 200-குச்சிகளாகப் பிசுக்குப் பட்டை சூரணமும் சேர்த்து ஒவ்வொரு குச்சியிலும் பக்குவமாய்ப் பூசியுருட்டி யுலர்த்தி வைத்துக்கொள்ளவும்.

## உயர்ந்த சந்தன பில்லை

கொண்டைசீனிக்கிழங்கு விராகனெடை-1½ கெவுளா விராகனெடை-1¼, கிளியூரம்பட்டை விராகனெடை-1¼, பூஞ்சாந்துப்பட்டை விராகனெடை-3, செவ்வல்லிக் கொடி விராகனெடை-4, செண்பகமொக்கு விராகனெடை-1½, தாளிசப்பத்திரி விராகனெடை-1¾, லவங்கப்பத்திரி விராகனெடை-2, நாகணம் விராகனெடை-5, வெட்டிவேர் விராகனெடை-1¼, விலாமிச்சம்வேர் விராகனெடை-2, சன்னலவங்கப்பட்டை விராகனெடை-2½, கருவாப்பட்டை விராகனெடை-3, லவங்கப் பட்டை விராகனெடை 4, சோம்பு விராகனெடை-3, சிறுநாகப்பூ விராகனெடை-3, வாய்விளங்கம் விராகனெடை-3½, வால்மிளகு விராகனெடை-2, நன்னாரி

வேர் விராகனெடை-3, சதகுப்பை விராகனெடை-5 மாகாளிக்கிழங்கு விராகனெடை-4, அதிமதுரம் விராக னெடை-3½, கோஷ்டம் விராகனெடை-1½, சிற்ற ரத்தை விராகனெடை-4, பேராத்தை விராகனெடை-3 சுக்கு விராகனெடை-4½, கற்பாசி விராகனெடை-1¾, கசகசா விராகனெடை-3, பூலாங்கிழங்கு விராக னெடை-1½, சமுத்திராப்பச்சை விராகனெடை-1¼, கார்போகஅரிசி விராகனெடை-1, கஸ்தூரிமஞ்சள் விராகனெடை-5, கொத்துமல்லி விராகனெடை-3, பங்காளமஞ்சள் விராகனெடை-2, ஜாதிக்காய் விராக னெடை-1½, ஜாதிப்பத்திரி விராகனெடை-1½, ஏலம் விராகனெடை- ½, கிராம்பு விராகனெடை-1½, கோரைக் கிழங்கு விராகனெடை-2, சடாமாஞ்சில் விராக னெடை-4, அகிற்கட்டை பலம்-1, தேவதாரிப்பட்டை பலம்-1, சந்தனம் பலம்-1, ஓமம் விராகனெடை-1, நெரியரிசிப்பால் பலம்-5, மேற்படி தைலம் பலம்-5, பன்னீர் புட்டி 3, புனுகுசட்டம் விராகனெடை-5, சாம்பிராணித்தைலம் விராகனெடை-3, சவ்வாது விராகனெடை-3, பச்சைக்கற்பூரம் விராகனெடை-3, குங்குமப்பூ விராகனெடை-2½, கோரோசனை விராக னெடை-2½, மகிழம்பூ விராகனெடை-2½, சிவகரந்தை விராகனெடை-2, தவனக்கொழுந்து விராகனெடை-2½ சுவாகா அத்தர் துலா-4, குலாபி அத்தர் துலா-2, தாழம்பூ அத்தர் துலா-2, மல்லிகைப்பூ அத்தர் துலா-2, தவன அத்தர் துலா-2, ரவுசா அத்தர் துலா-2, சந்தன அத்தர் துலா-2, புனுகு துலா-5, கஸ்தூரி விராக னெடை-1, ஈரான் அத்தர் துலா-½, மேற்படி சரக்கு களை வறுக்க வேண்டியவைகளையும் வறுத்து மற்றவை களையும் சேர்த்திடித்துச் சூரணித்து பன்னீரைவிட்டு பிசரி மெல்லிதாய் அரைத்துத் தைலங்கள் புனுகு அத்தர் முதலியவைகளைச் சேர்த்துப் பில்லைசெய்துக் கொள்ளவும்.

## வடமொழி தர்மசாஸ்திர வாக்கியம், படி அளவு

நெற்பொரி, ஜலம், இளநீர், கோமூத்திரங்கள், சுத்த ஜலம், கழுநீர் இவைகள் 32-பலம் எடையுள்ளது 1-படி, பால் இருபது பலம் உள்ளது 1-படி, ததிமஸ்து 25-பலம் உள்ளது 1-படி, வெல்லம் கரைத்த ஜலம், கனிகளின் ரசம், மூலிகைகளின் சாறு 16-பலம் எடையுள்ளது 1-படி, தேன் 10-பலம் எடையுள்ளது படி-1.

நவ இரத்தின பஸ்பம், நவலோக பஸ்பம், புனுகு, கஸ்தூரி, கோரோசனை, குங்குமப்பூ, பச்சைக்கற்பூரம் இவைகள் பலம் என்றுவருமிடத்தில் சக்தியற்றவர்கள் 1 விராகனெடை சேர்த்துக்கொள்ளலாமென்று தர்மசாஸ்திரி வாக்கியத்திற் சொல்லப்பட்டிருக்கிறது.

செஞ்சாலி நான்குநிறை செங்குன்றி யவ்விரண்டு
மஞ்சாடியாக வகுத்தார்கள்—எஞ்சாமல்
தூக்கிலஞ்சு மஞ்சாடி துய்யநிஷ்கங் கால்நான்கில்
நூக்கம் விராகனெடையொன்று.

ஒன்றியிடு நிஷ்கந்தான் ஒன்றிரண்டு கோல்மாந்து
துன்றுமிரு கோல்நிறையே சொர்ன்னம்-நன்றாக
சொர்ன்ன மிருபங்கு துலைமா ளிகை
இரட்டியுண்ண பலமாம் முகந்து.

உகந்துபல நூறுகொண்டால் ஓங்கு துலாமாம்
மிகுந்ததுலாம் தூக்க மிருபான்—உகந்திட்டால்
பாரமென்று நல்லோர்கள் பகர்ந்தார் பலநிறை
யார்விளங்கச் சொல்வா ரளவு. [யை

காயம்பி லன்பகுதி காலதேய நோய்வயது
நேயமறிந் தேகொடுப்பாய் நீமருந்தை-யேயக்
கழுவ விடித்தல்வேர் கண்டித்தல் தள்ளல்
புளுவகற்ற லெல்லாம் புரி.

## இராமா அமுர்தம்

சம்பா பச்சையரிசியை நன்ருய்த் தீட்டிக் கல், உமி, தவிடு இவைகளைப்போக்கி ¼-படி பெருமெநாய் எடுத்துக்கொண்டு அதை ஜலத்தில் ஊறவைத்து 30-தடவை பிசைந்து கழுவி யெடுத்துக்கொண்டு ஒரு பாத்திரத்தில் ஒருபடி பாலும் 1-படி ஜலமும்விட்டு கால் படி நெய்போட்டு நன்ருய் வெந்தவுடனே மறுபடி 3-படி பால் அதில் சேர்த்துப் பக்குவமாகத் துழாவி 4 - சேர் சீனிசர்க்கரையைச் சேர்த்து இறக்கிக் கொள்ளவும்.

தஞ்சை வைத்தியராஜ சிந்தாமணி

இரண்டாம் பாகம் முற்றிற்று.

---

தஞ்சை

# வைத்தியராஜ சிந்தாமணி

## இரண்டாம்பாக அட்டவணை

திருமகள் விலாச அச்சு நிலையம், சென்னை—1. 1953.

## சித்த வைத்திய பதார்த்த குண விளக்கம்

முதல் பாகம் (மூல வர்க்கம்) விலை ரூ. 8-0-0

ஷை இரண்டாம் பாகம் (தாது, ஜீவ வர்க்கம்) விலை ரூ. 3-8-0

*[வைத்திய வித்வன்மணி சி. கண்ணுசாமிப் பிள்ளை அவர்கள் இயற்றியது.]*

பல வைத்திய நண்பர்களின் வேண்டுகோளுக் கிணங்க இந் நூலை இப்போது புதியதாக வெளியிட்டுள்ளோம். இந் நூல் சித்த வைத்தியத்திற்குரிய மூலிகைகளே யன்றி தென்னாட்டு மருத்து வர்கள் கையாண்டுவரும் சில யூனானி ஆங்கிலச் சரக்குகளும் பதார்த்தகுண சிந்தாமணியில் கூறப்படாத பல மூலிகை சரக்கு களும் இதில் சேர்க்கப்பட்டுள்ளன.

இந்நூல் உயிர்மெய் எழுத்து வரிசையில் ஒவ்வொரு சரக்கின் பெயரும், அதற்குரிய செய்யுளும், பின்னர் அதன் உரையும் அதன்கீழ் அச் சரக்கின் செய்கையும், உபயோகிக்கும் முறையும், மற்றும் வைத்தியர்களுக்குரிய பல அரும் பெரும் முறைகளையும், கூறியுள்ளார்.

## சுகந்த பரிமள சாஸ்திரம் விலை ரூ. 1-0-0

இதில் சுகந்த மூக்குத்தூள், ஸ்நானப்பொடிகள், பல்பொடி, புதுக்கோட்டை மைசூர் முதலிய சமஸ்தான அத்தர் பில்லைகள், ஊது வர்த்திகள், பரிமளத்தைலங்கள், கர்ப்பூரம், கர்ப்பூரத்தைலம், சந்த ஞதித் தைலம் முதலிய இன்னும் பல அருமையான பரிமளத் திரவி யங்கள் செய்யும் முறைகள் அடங்கியிருக்கின்றன.

## கண்ணுசாமியம் என்னும்
## வைத்திய சேகரம் விலை ரூ. 3-0-0

வைத்திய வித்வன்மணி C. கண்ணுசாமிப் பிள்ளை அவர்கள் தமது பெயர் உலகில் எக்காலத்தும் நிலைபெறுமாறு பரம ரகசிய மாக தான் கையாண்டுவந்த பல அரிய பெரிய பாகங்களை யெல்லாம் சூரணம், மாத்திரை லேகியம், எண்ணெய், தைலம், கிருதம், பற்பம், செந்தூரம், ஆக்கிராணம் முதலியவைகளை ஆங்காங்கு கைபாகம், செய்பாகம் முதலியவற்றால் எளிதில் உணரும்படி இப்புத்தகத்தில் எழுதியுள்ளார். இத்தகைய நூல் ஒவ்வொரு வைத்தியர்களுக்கும் மிக்க உதவியாக இருக்குமென்பது திண்ணம்.

---

## சிகிச்சாரத்ந தீபம் — விலை ரூ. 5-0-0

[வைத்திய வித்வன்மணி சி. கண்ணுசாமிப்பிள்ளை அவர்கள் இயற்றியது. வாலெந்திரப் படங்களுடன்]

இந் நூலாசிரியரான சி. கண்ணுசாமிப் பிள்ளை அவர்கள் தென்னாடு முதல் வடநாடு வரையிலும் அனுசரித்து வரும் அரிய பெரிய பாகங்களையும், யூனானி வைத்திய முறைகளையும், பெரும் பொருள் செலவிட்டு முடித்துப் பயன் பெற்றவைகளாயுள்ள பாகங்களை யெல்லாம் ஒருங்கு தொகுத்து ஒவ்வொருவரும் எளிதில் உணரும் வண்ணம், தேக பஞ்ச பூதம், நாடி, ரோக நிதானம், செய்பாக விளக்கம், கியாழம், சூர்ணம், மாத்திரை, மெழுகு, லேகியம், கிருதம், செந்தூரம், பற்பம், தீநீர், திராவகம், ஆசவம், அரிஷ்டம், பத்தியம், இன்னும் பல பாகங்களையும் இலம்பகங்களாக வரைந்துள்ளார் இந் நூல் வைத்தியத் தொழிலைக் கற்க விரும்பும் மாணவர்களுக்கும் வைத்தியர்களுக்கும் மற்ற ஏனையோருக்கும் பெரும் நன்மையைத் தரத் தக்க தென்பது எவருமறிந்த உண்மை.

சிகிச்சாரத்ந தீபம் இரண்டாம் பாகமாகிய

## வைத்திய சிந்தாமணி — விலை ரூ. 4-0-0

[வைத்திய வித்வன்மணி சி. கண்ணுசாமிப் பிள்ளை அவர்கள் இயற்றியது]

இந்த "வைத்திய சிந்தாமணி" என்னும் நூலானது பூர்வாசிரியர்களில் ஒருவராகிய யூகிமாமுனி என்பவரால் கூறப்பட்டது. இதனில் ரோக நிதானங்களை ஏறக்குறைய கூறி யிருப்பதினால் இதனை ஆதாரவாகக் கொண்டு வசன காவியமாக எழுதினது மல்லாமல், சில இடங்களில் சமயத்திற் கேற்றவாறு மற்றும் சில கிரந்தங்களினின்று சிலது சேர்க்கப்பட்டும் ஒவ்வொரு ரோகங்களின் இறுதியில் ஆங்கிலேய மருத்துவத்தில் கூறப்பட்டுள்ள ரோக நிதான விஷயங்களை மதாந்தர மாகவும், அமைத்துக் காலதேச வர்த்தமானங்களுக்குத் தக்கவாறு சிகிச்சைகளையும் சேர்த்து அநேக அருமை வாய்ந்த முறைகளுடன் எழுதப்பெற் றிருக்கின்றது.

குறிப்பு:—எல்லா புஸ்தகங்கள் அடங்கிய கிரய ஜாபிதா தேவையுள்ளவர்கள் தங்கள் விலாசத்தைத் தெரிவித்தால் இனமாக அனுப்பப்படும்.

---

எமது விலாசம்:— B. இரத்தின நாயகர் ஸன்ஸ்,
நெ. 57, வெங்கட்ராமய்யர் தெரு, சென்னை—1.